ஹாமீம்

செய்கு தம்பிப் பாவலரின்

# ஷம்சுத்தாசீன் கோவை



V.S.T. தமுஸ்தாசிம் தரகனார் அறக்கட்டளை வெளியீடு

பதிப்பாசிரியர்

ஜெ.திவான்

ஹாமீம்

பிஸ்மில்லாஹி

''தேவாமிர்தப் பிரசங்கக் களஞ்சியம்''

## செய்கு தம்பிப் பாவலரின்

# ஷம்சுத்தாசீன் கோவை


பதிப்பாசிரியர்

வரலாற்று ஆய்வாளர்

**செ. திவான்** எம்.ஏ., எம்.ஃபில்.,



வெளியிடுவோர்

பதிப்புரிமை

**V.S.T. தமுஸ்தாசிம் தரகனார் அறக்கட்டளை**

மேலப்பாளையம்.

முதற் பதிப்பு : 1919
இரண்டாம் பதிப்பு } 13.4.2000 (சித்திரை முதல் நாள்)
பதிப்புரிமை } மர்ஹூம் V.S.T. தமுஸ்தாசீம் தரகனார் பிறந்த தின இலவச வெளியீடு
அச்சிட்டோர் : ஹமீது பிரஸ், திருநெல்வேலி டவுண்.





எங்களது பாட்டனார் **V.S.T. ஷம்ஸுதாஸீம் தரகனார்**
சதாவதானி **கா.ப. செய்குதம்பிப் பாவலர்**

ஆகிய பெருமக்கள் இருவரின் நினைவினுக்கு சமர்ப்பிக்கின்றோம். அன்னவர்களது மறுவுலக நற்பேற்றிற்கு இறையருள் இறைஞ்சுமாறு அன்புடன் வேண்டுகின்றோம்.

V.S.T. தமுஸ்தாசிம் தரகனார் அறக்கட்டளை

மேலப்பாளையம்.

ஹாமீம்

பிஸ்மில்லாஹி

# பாட்டுடைத் தலைவர் வரலாறு

## நாடு போற்றும் வள்ளல்கள்

*ஈதல் இசைபட வாழ்தல் அது அல்லது*
*ஊதியம் இல்லை உயிர்க்கு.*

என்றார் பொய்யா மொழிப் புலவர். செல்வத்துப் பயன் ஈதலே என்பதனை ஓதியுணர்ந்துள்ளமையால், வீரம் செறிந்த தமிழ்ப் பெருமக்கள் ஈரப் பண்பிலும் இணையற்றுத் திகழ்ந்து வந்துள்ளனர். பண்டைய வள்ளல் பெரு மக்களின் கொடை மடம் பட்ட அருட்செயல்கள் சிலவற்றிலே, பிற்காலத்தில் தமிழ் மக்கள் உருவாக்கியதும், வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் தாமும் வாடிய திருவருட் பிரகாச வள்ளல் பெருமானால் ஏற்றம் பெற்றதுமான அருளறக் கொள்கையின் கருமுதலை நாம் காணுகின்றோம். பண்டைத் தமிழினம் இவ்வுலகினுக்கு வழங்கிய நன்கொடையாம் "யாதும் ஊரே! யாவரும் கேளிர்!" என்னும் சிறப்பு மிகு கொள்கை இத்தகைய அருள் உணர்வின் பரிணாம வளர்ச்சியாகவே தோன்றுகிறது. எனவே முன்னைய தமிழர் தம் கொடைத் திறத்தில் தமிழ்ப் பண்பாட்டின் அடிப்படை அமைந்திருக்கிறது எனலாம்.

*"பேகனும் பாரியும் காரியும் ஆயும்*
*அதிகனும் நள்ளியும் ஓரியும் என*
*எழுவர் பூண்ட ஈகைச் செந் நுகத்தை*
*நல்லியக் கோடன் ஒருவனே தாங்கினான்".*

விந்தியம் குமரியிடை விளங்கும் தென்னகத்தின் முடியுடை முப்பெரும் வேந்தர்களும், அவர்தம் ஆட்சியாண்டுகளின் இறுதிப் பகுதியில் வாழ்ந்திருந்த குறுநில மன்னர்களான கடையெழு வள்ளல்களும் மறைந்ததன் பின்னர், இரவலர்களையும், புலவர்களையும் போற்றி ஆதரிக்கும் பொறுப்பினை ஒய்மானாட்டின் சிற்றரசன் நல்லியக் கோடனே ஏற்றுக் கொண்டான் எனவும்,

*"தமிழ் நிலை பெற்ற தாங்கரு மரபின்*
*மகிழ் நனை மறுகின் மதுரையும்" ★*

★ சிறுபாணாற்றுப்படை : 41 - 42

வறிதாயிற்று எனவும் இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் எனும் புலவர் நைந்துருகிப் பாடியுள்ளார். நல்லியக் கோடன், குமணன் போன்ற சிற்றரசர்களுக்கும் பின்னர் அவ் ஈகைச் செந்நுகத்தை பெருநிலக்கிழார்களும், வணிக வேந்தர்களுமே தாங்கினர். அவர்களுள் படிக்காசுப் புலவர், உமறுப் புலவர், கந்தசாமிப் புலவர், நமச்சிவாயப் புலவர் போன்ற கவிவாணர்களையும், இரவலர்களையும் ஆதரித்துப் போற்றியவரான 'செத்தும் கொடுத்தான்' எனப் புகழ் படைத்த ''வள்ளல் சீதக்காதி''யவர்கள், கடந்த 17-ஆம் நூற்றாண்டிலே சிறந்து வாழ்ந்திருந்தார். அவ்வடிச்சுவட்டிலே, ஏழை எளியோரையும் புலவர் பெருமக்களையும் தயையுடன் ஆதரித்து கடந்த 19-ஆம் நூற்றாண்டிலே சீருடன் வாழ்ந்திருந்தவர் தாம் எமது பாட்டனாராகிய V.S.T. ஷம்சுத்தாசீன் எனும் சிறப்புப் பெயர் பூண்ட வள்ளல் பெருந்தகை ஆவார்.

## மலையும் நதியும்

பொதியில், பொதியம் என்னும் பெயர்களையும் கொண்ட பொதிகை மலை, தென்பாண்டி நாட்டின் மேற்கெல்லையாய் அமைந்தமையால் தென்னவன் பொதியில் என்றும், பாண்டியரின் மேலாண்மைக்குட்பட்ட சிற்றரசராக வேளிர் குலத்தைச் சேர்ந்த ஆய் மரபினர் அம்மலைப் பகுதியை ஆண்டு வந்தமையால் ஆய் பொதியில் என்றும் வழங்கப் பெற்றது. இப் பொதிகை மலைப் பகுதியை ஆட்சி புரிந்து வந்த கடையெழு வள்ளல்களுள் ஒருவனான மாவேள் ஆஅய் அண்டிரன் என்பான்,

*''இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம் எனும்*
*அறவிலை வணிகன் ஆஅய் அலன்;*
*பிறரும் சான்றோர் சென்ற நெறியென*
*ஆங்குப் பட்டன்று அவன் கைவண் மையே'' ★*

என உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் எனும் புலவரால் சிறப்பிக்கப் பெற்றவன்.

தமிழ் மலையாம் இப்பொதிகையில் பிறந்த வன்னி ★★ எனும் நதி நல்லாள், சந்தணத்தின் நறுஞ்சாந்து தடவியும், தென்றலின் தண்மை

---

★ புற நானூறு : 134.

★★ வன்னி - தாம்பிரவன்னி
கர்ணன் என்பது கன்னன் என்றானாற் போன்று
வர்ணி என்பது வன்னி எனவானது.

தழுவியும், குறிஞ்சி நிலத்து மணமலர்கள் ஏந்தியும் நடைபயின்று கனிமவள நிலத் தூடறுத்துப் பாய்ந்து தாம்பிர வருணமும் (நிறம் - குணம்) பெற்றமையால் தாம்பிரவர்ணி எனப் பெயர் கொண்டவள். ஆஅயது வள்ளன்மையைப் போன்றே வன்னியாறும் வற்றாது ஓடி நெல்லைச் சீமையை வளப்படுத்திப் பின்னர் முத்துக்குப் பெயர் பெற்ற கொற்கையினருகே கீழைக் கடலில் கலக்கின்றது.

## முன்னோரும் தோற்றமும்

ஏறத்தாழ முன்னூறு ஆண்டுகளுக்கு முன்னர், பாண்டியர் பழம்பதியில் வீறார்ந்து வாழ்ந்திருந்த எமது முன்னோர் உள்ளிட்ட பெருமளவிலான குடும்பங்களைச் சேர்ந்தோர் அரசியல், சமூகவியல் சார்ந்த கரணியங்களால் வடகரையினின்றும் நீங்கி, நெல்லை மாநகரத்திற்கு தென்கிழக்கே மூன்று கல் தொலைவில் தாம்பிரவர்ணி நதி தீரத்திலேயமைந்திருந்த மருத நிலவூர்ப் பகுதியின் தென் மருங்கினை வந்தடைந்து ஆங்கே மனைகள் அமைத்து வாழத் துவங்கினர்.

அவ்வழி முறையில் எமது குடும்பக் கிளையின் , முதற்றந்தையார் நாகூர் மீறா தரகனார் அவர்கள், அன்னாரது மகனார் ஷெய்கு உதுமான் தரகனார் அவர்கள், அன்னாரது மகனார் மீறா முகையதீன் தரகனார் அவர்கள், அன்னாரது மகனார் ஷெய்கு மன்ஸூர் தரகனார் அவர்கள், அன்னாரது மகனாரும் எமது பாட்டனாருமான ம்.கூீ.மி. **ஷம்ஸுதாஸீம் தரகனார்** (ஷம்சுத்தாசீன்) அவர்கள் தமிழாண்டு 1021-ல் சித்திரைத் திங்கள் முதல் நாள் ஞாயிற்றுக் கிழமையன்று (கி.பி. 1845-ல்) பிறந்தார். ஈந்து புகழ்க் கொண்ட அப்பெருமகனை ஈன்று மகிழ்ந்த மங்கை நல்லாரின் பெயர் ஹஸன் மீறா பீவி என்பதாகும்.

## மேலப்பாளையம்

காலந்தோறும் வந்தடர்ந்த மக்கட்பெருக்கத்தினால் மிகவும் வளர்ச்சியுற்ற எமதூர் முன்னாளில் மங்கை நகர், மங்கையர் பதி, மங்கையர்க் கூடம், மங்கா நல்லூர், திருமங்கை நகர் என்றவாறெல்லாம் வழங்கப்பட்டு வந்து, அதன் பின்னர், பாளையம் அமைந்திருந்த பாளையங்கோட்டைக்கு மேற்குப் புறமிருந்த காரணத்தால் மேலப்பாளையம் எனப் பெயர் பெற்றது.

இவ்வூரைச் சேர்ந்தவர்கள் கடல் கடந்து சென்று இரங்கூன், மாண்ட்லே, கண்டி, பினாங்கு, சிங்கப்பூர் முதலிய பிரதேசங்களிலும்,

பம்பாய் போன்ற ஏனையவிடங்களிலும் வணிக நிறுவனங்கள் நடத்தியும், ஆங்குள்ள வணிக நிலையங்களில் பணியாற்றியும் மிக்க பொருளீட்டி வாழ்ந்து வந்துள்ளனர். இதனை எச்.ஆர். பேட் தனது திருநெல்வேலி கெசட்டியரில் உறுதிப் படுத்துகிறார்:-

"About one-fourth of the Population spend most of their time abroad as shop keepers and general traders in Rangoon, Mandalay, Kandy, Penang, Singapore, Bombay and many other places" ★

## திரை கடலோடியுந் திரவியந் தேடு

தமதூர் வாசிகளின் அந்நாளைய வழக்கப்படி ஷம்சுத்தாசீனவர்களும் தமது இளம் வயதிலேயே கீழைக் கடல் கடந்து பர்மா சென்று இரங்கூன், நவ்வு, மாண்ட்லே, மீஞ்ஞான் போன்றவிடங்களிலும், நம் நாட்டில் கன்னியாகுமரி, கல்கத்தா, கடலூர், புதுவை, சென்னை, காக்கி நாடா, கொச்சி போன்ற நகரங்களிலும் பற்பல விதமான வாணிபச் சாலைகளை நிறுவியும் நடத்தியும் பெரும் பொருளீட்டினார். தமது உறவினர், சுற்றத்தினரையும் தம் ஊரைச் சேர்ந்தவர்களையும் தமது நிறுவனங்களில் பணியாற்றச் செய்து ஆதரித்தும், அறப்பணிகளாற்றியும் வந்தார்.

இன்சொல், நம்பிக்கை, நாணயம் ஆகியனவற்றை உயிர் மூச்சாகக் கொண்டவராய், விடா முயற்சியுடன் உழைத்துத் தனித்திறன் பெற்று அவர் விளங்கியமையால், எண்ணெய் வணிகச் சந்தையின் முதன்மையிடத்தை அவரது நிறுவனம் பெற்றிருந்தது. அதன் காரணமாக அரசினராலும் வணிக குழாத்தினராலும் ''எண்ணெய் அரசர்'' (King of Oil) எனப் பாராட்டப் பெற்றார்.

## ஹலரத்து ஞானியார் சாகிபு

''இஸ்லாமிய மெய்ஞ்ஞானத்தைத் தமிழ்த்தேனில் குழைத்துத் தந்த ஞானியர் தக்கலை பீர் முகம்மது அப்பா, குணங்குடி மஸ்தான் சாகிபு, கோட்டாறு ஞானியார் சாகிபு எனப் பலர் ஆவர்'' - ★★

ஷெய்கு மன்ஸூர் ஹல்லாஜ் என்பார் பாரசீக (ஈரான்) நாட்டில் ஹிஜ்ரி 244 -ஆம் ஆண்டு (கி.பி. 858) தோன்றிய இஸ்லாமிய ஸூஃபி ஞானியாவார். மெய்ப்பொருள் நிலை தெளிந்துணர்ந்த இவரது ஞான மார்க்கத்தினை

---

★ H.R. Pate : Tinnevelly Gazetter, P. 485.

★★ பேராசிரியர் மு. அப்துல் கறீம் எம்.ஏ.,இஸ்லாமும் தமிழும் 1985 பக். 91.

உலகில் புகழுண்டாகுமாறு பரவச் செய்ய வேண்டுமென்பதற்காக இவரது தொண்டரும் மெய்யடியாருமாகிய செய்யிது தாமீம் என்பார் மூலமாகத் தமது இளம் பருவத்திலேயே தீட்சையும் திரு நபி(ஸல்) அவர்களின் ஆசியும் பெற்றவர் ஞானியார் சாகிபு அவர்கள். ஷெய்கு முஹியித்தீன் மலுக்கு முதலியார் என்னும் இயற்பெயர் கொண்ட இவ் இறைநேசர் நாஞ்சில் நாட்டின் (குமரி மாவட்டம்) கோட்டாறு எனும் பதியில் ஹிஜ்ரி 1167 -ம் ஆண்டு (கி.பி. 1753) அவதரித்தவர். 'ஞானியார் அப்பா' என அன்புடன் அழைக்கப்படும் இவ் அருட் செல்வர் ஓதாதுணர்ந்தவராய் யோக, ஞான நெறி நிலைகளையுணர்த்த வல்ல ''மெய்ஞ் ஞானத் திருப் பாடற்றிரட்டு'' எனும் பனுவலை திருவாய் மலர்ந்தருளியுள்ளனர். திருவாங்கூர் அரசர், இராமநாதபுர சேதுபதி மன்னர், மேலமந்தை சிற்றரசன் ஆகிய அரசப் பெருமக்கள் போற்றி சிறப்புகள் செய்த பெருமைக்குரியவர் ஞானியார் சாகிபு; தமிழகத்திலும் கேரளத்திலுமுள்ள பலவிடங்களுக்கும் சென்று மக்களை நன்னெறிப்படுத்தி மன்ஸுர் ஹல்லாஜின் ஞான மார்க்கத்தை பரவச் செய்து வந்த ஞானியார் அவர்கள், தமது இளவலான இளைய ஞானியார் மவ்லானா ஷெய்கு உதுமான் சாகிபு அவர்களுக்கு குருத்துவ சாசன மீந்தருளி ஹிஜ்ரி 1209 - ஆம் ஆண்டு ஜமாத்துல் அவ்வல் மாதம் பிறை 14-ல் (கி.பி. 1794) இறைவன் திருச்சமுக சந்நிதானத்தைச் சேர்ந்தனர்.

தமது முன்னோரது அடியொற்றியவராய், வள்ளல் ஷம்சுத்தாசீனவர்களும் அவரது குடும்பத்தினரும் ஞானியார் சாகிபு அவர்களையே ஞானாசிரியராக ஏற்றுக் கொண்டவர்களாவர்.

## அறப்பணிகளும் கொடை மாண்பும்

### திருப்பாடற்றிரட்டு பதிப்பித்தல் ★

நாளடைவில் ஞானியார் சாகிபு அவர்கள் காட்டிச் சென்ற ஞான மார்க்கத்தினைப் பின் தொடர்ந்தோர் பல்கிப் பெருகியமையாலும், வருங் காலத்துத் தலைமுறையினரும் ஓதியுணர்ந்து பயன் பெற்றுய்யும் வண்ணம் கேடுறாது காக்கப்பட வேண்டுமென்ற இன்றியமையாமை நேரிட்டதனாலும், நூறாண்டுகளுக்கும் மேலாக ஓலைச் சுவடிகளிலேயிருந்து வந்த ஞானக் கருவூலமாம் ''மெய்ஞ்ஞானத் திருப்பாடற்றிரட்டு'' அச்சிற் பதிப்பிக்கப்பட்டு நூலுருப் பெற வேண்டுமென ஞானியார் சாகிபு வழியில்

★ சுசீந்திரம் வித்துவான் சி. குமரேச பிள்ளை, ''செந்தமிழ் வளர்த்த செய்கு தம்பி'' (1986) பக். 24-25.

வந்த ஹசரத் செய்யது தாஹா ஆலிம் சாகிபு என்பார் விழைந்தார். தமது ஞானாசிரியர் அருளிய திருப்பாடற்றிரட்டினை அச்சிற் பதிப்பிக்கும் பணிக்கான பொருளுதவியை மனமுவந்து வழங்குவதற்கு ஷம்சுத்தாசீனவர்கள் முன் வந்தார்.

புலமை மிக்க சான்றோராகிய கொட்டாம்பட்டி எம். கருப்பையாப் பாவலர் அவர்களும் செய்யது தாஹா ஆலிம் சாகிபின் மைத்துனரான கோட்டாறு கா.ப. செய்கு தம்பிப் பாவலர் அவர்களும் ★ நூலைப் பதிப்பிக்கும் பணியில் துணை புரிய, சென்னை ஸ்ரீ பத்ம நாப விலாசம் அச்சுக் கூடத்தில் நூற்பதிப்பு நடைபெற்று கி.பி. 1895 - ஆம் ஆண்டில் இறையருளால் நூல் வெளியிடப் பட்டது. தமிழக இஸ்லாமிய பெருமக்கள் மகிழ்வு கொண்டவராய் இத்திருப் பணியை மேற்கொண்ட அனைவரையும் பாராட்டினர்.

## ஹாமீம் புரம்

மேலப்பாளையத்தின் தென் பகுதியில் தமக்குச் சொந்தமான ஹாமீம் புரம் என்னும் பரந்த அளவிலான நிலப்பரப்பில் நூற்றுக்கணக்கான ஏழை, எளியோர், வீடுகளற்றோர்களுக்கு இலவசமாக மனைகள் வழங்கியும், வீடுகள் கட்டிக் கொடுத்தும் ஆங்கோர் நகரத்தை உருவாக்கி அங்கு வசிக்கும் மக்களுக் குரிய தேவைகள் அறிந்து உதவிகள் பலவும் ஷம்சுத்தாசீனவர்கள் செய்து வந்தார்.

''ஹாமீம்'' என்பது இறைவனால் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு வழங்கப் பட்டிருக்கும் சிறப்புப் பெயர்களுள் ஒன்று என்பதும், அச்சொல் ஞானியார் பாடலில் மிகுதியாக பயின்று வருவதுமாகும் என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது.

## ஹாமீம் பள்ளி மதரசா

இஸ்லாம் சிறப்பித்துக் கூறும் அறச் செயல்களுள், இறைவனை வழிபட இறையில்லம் கட்டுவித்தல், சன்மார்க்கக் கல்விச் சாலைகள்

---

★ ''திருக்கோட்டாற்றுப் பிள்ளைத் தமிழ்'', ''திருக்கோட்டாற்றுப் பதிற்றுப் பத்தந்தாதி'' ஆகிய நூல்களை கா.ப. செய்கு தம்பிப் பாவலரும் ''திருக் கோட்டாற்றுக் கலம்பகம்'' என்ற நூலை எம். கருப்பையாப் பாவலரும் ஞானியார் சாகிபு மீது கவினுறப் பாடி, அன்னாருக்குப் புகழ் மாலைகளாகச் சூட்டியுள்ளனர்.

நிறுவுதல் என்பன தலையாயவை ஆகும். ஷம்சுத்தாசீனவர்கள் கி.பி. 1911-ஆம் ஆண்டிலே ஹாமீம்புரம் பகுதியில் தமது இல்லமாகிய பங்களாவிற்கு மேற்குப் புறத்தில் ''V.S.T. தமுஸ்தாசிம் தரகனார் ஹாமீம் பள்ளி மதரஸா'' என்ற பெயரிலான இறையில்லமும் அத்துடன் இணைந்த அரபி பாட சாலையையும் நிர்மாணித்து அவற்றின் அக்தார், இனாம்தாராகத் தாமே இருந்து அவை சார்ந்த கைங்கரியங்களை நிர்வகித்து வந்தார். பள்ளி மதரஸாவின் பெயரால் மேலும் பல அறப் பணிகளும் ஆற்றி வந்தார். தமது ஆயுளுக்குப் பின்னரும் தமது வழிமுறையினர் அவற்றை நிர்வகித்தும் அவ் அறப்பணிகளை தொடர்ந்து நடத்தியும் வர வேண்டுமென்ற சீரிய நோக்கமும் விழைவும் கொண்டவராய், பள்ளி மதரஸாவின் பரிபாலனத்திற்காகப் பெருநிதிப் பெறுமதியுள்ள தக்க சொத்துக்களை மானியமாகத் தத்தம் செய்து, அதனை கி.பி.1931-ஆம் ஆண்டிலே அறக்கட்டளையாக சாசனமும் (வக்பு) பிறப்பித்துள்ளார்.

## நிலை பெறும் நினைவு

தமது ஞானாசிரியர் நல்லடக்கம் செய்விக்கப்பட்டிருக்கும் ''கோட்டாறு ஞானியார் அப்பா தர்கா''வில் நியமமாக நடைபெற்று வரும் கிரியைகளுக்கென, குமரி மாவட்டத்தில் இடம் பெற்றுள்ளதும் மிகுந்த வருவாய் வரத் தக்கதுமான சொத்துக்களை ஷம்சுத்தாசீனவர்கள் நிபந்தமாக வழங்கியுள்ளார்.

ஞானியாரவர்கள் மேலப்பாளையத்திற்கு வருகைதந்து, கலிமாக் குளக் கரையில் (ஹாமீம்புரம் அருகே) தங்கியிருந்த இடத்தில் ''ஞானியார் அப்பா தைக்கா'' வையும் மேலப்பாளையம் பெரிய தெரு அருகில் (ஆஸாத் ரோட்டின் மேல்புறம்) ''ஞானியார் அப்பா தர்கா பள்ளி''யையும் தொண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னர் ஷம்சுத்தாசீனவர்கள் பாங்குற கட்டுவித்தார். இத்தலங்களில், ஞானியார் பாடல் பாராயணம், குருமகான் துதி, நியம நிஷ்டை யனுஷ்டானங்கள் ஆகியன இன்றளவும் இடையறாது நடத்தப் பெற்று வருகின்றன.

## நல் மரம் பழுத்தன்ன நன்கொடையாளர்

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ''சீனம் சென்றேனும் சீர் கல்வி பெறுக'' என்றருளினர். கல்வி பெற வழியில்லாத ஆதரவற்ற ஏழை, எளிய மாணவர்களுக்கு உணவு, உடை, உறைவிடம் போன்றவற்றை ஷம்சுத் தாசீனவர்கள் இலவசமாக வழங்கி, தக்க ஆசிரியர்களைக் கொண்டு

அவர்களுக்கு சன்மார்க்கக் கல்வியும், நல்லொழுக்கமும் பயிற்றுவிக்கச் செய்தார்.

தமக்குச் சொந்தமான இடத்தில் தொடக்கப் பாடசாலைக்கென உறுதி வாய்ந்த கட்டிடம் கட்டிக் கொடுத்து, ஹாமீம்புரம் பகுதியைச் சேர்ந்த சிறார்களுக்கு எண்ணும் எழுத்தும் கற்பிக்கச் செய்த கல்வியின் தொண்டர்;

பொதுமக்கள் அன்றாடம் புழங்குமிடங்களிலும் அவசியத்தினிமித்தம் அவர்கள் கூடுமிடங்களிலும் நன்னீர் நிலையங்களையும், தண்ணீர்ப் பந்தல்களையும் நிறுவி, அவற்றின் பராமரிப்பிற்காகுமான செலவினங்களையும் தாமே ஏற்றுக் கொண்ட ஈர நெஞ்சினர்;

வாயில்லா உயிர்ப் பிராணிகளும் அவைகளது தாக வேட்கையை தணிவித்துக் கொள்ளும் பொருட்டு நீர் நிலைகளும், தண்ணீர்த் தொட்டிகளும் அமைத்துத் தந்த அருள் உள்ளம் கொண்டவர்;

அன்ன சத்திரம் கட்டி வைத்து, வழிப்போக்கர்கள், திக்கற்றவர்களுக்கு அன்றாடமும் அன்னதானம் அளித்து வந்த பசிப்பிணி மருத்துவர்;

ஏழைகளுக்கு உற்ற வேளை கண்டு உதவி செய்வதை கடமையாகக் கொண்ட ஏழைப்பங்காளர்;

ஹாமீம்புரம் குடியிருப்பில் தீக்கிரையாகிப் போன சில வீடுகளை, கல்லுங் காரையோடுடனும் கூடிய திடமான கட்டிடங்களாய்க் கட்டிக் கொடுத்த காருண்யர்;

திருமணம் முடிக்க வழியில்லாத எண்ணற்ற ஏழை, எளிய பெண்களுக்கு நல்லாதரவுடன் பொன்னும் பொருளும் கொடுத்து சிறப்புறத் திருமணம் செய்வித்து நல்வாழ்வு பெறச் செய்த பொன்மனம் கொண்ட புண்ணியர்;

தமது வாணிப நிலையங்களில் நூற்றுக்கணக்கானோரை பணிகளில் அமர்த்தி, அவர்களது குடும்பங்களின் வறுமையைப் போக்கிய கருணையாளர்;

தமது சுற்றம் கிளையாரெல்லாம் செழிப்புடன் வாழ்ந்திடச் செய்ய அவர்களுள் பலரைத் தமது வாணிப நிலையங்களில் பங்குதாரர்களாக இணைத்தும், மற்றும் பலருக்கு வணிக நிறுவனங்கள் அமைத்தும் கொடுத்த பெருந்தகையாளர்;

பள்ளிவாசலில் தங்கிச் செல்லும் ஏழை பயணிகளுக்குத் தினமும் உணவளிக்கச் செய்து வந்த கருணாகரர்;

ஆலீம்களென்னும் மேதைகளுக்கும், தமிழில் புலமை பெற்ற சான்றோர் களுக்கும் வேண்டும் போது வேண்டியன கொடுத்து ஆதரித்து வந்த பண்பாளர்;

மக்களுக்கிடையே ஏற்படும் பிணக்குகள், வழக்குகளைக் கேட்டறிந்து நல்லிணக்கமுறச் செய்வித்தும், தவறாத நீதியும் வழங்கி வந்த நீதிவான்;

மழை முகிலெனவே யாவர்க்கும் இன்முகத்துடன் தயையும் தனோப காரமும் புரிந்துவந்தமையால் இந்து முஸ்லிம்களின் ஒருமித்த அன்பைப் பெற்றிருந்த பொது ஜன உபகாரர்;

பள்ளிவாசலிலும் தமது பங்களாவிலும் வைத்து அன்றாடம் செய்து வந்த தர்ம காரியங்கள் அல்லாமலும், புனித ரமலான் மாதத்தில் நோன்பு கஞ்சி வழங்கியும், அதன் புனித இரவுகளில் ஆயிரக்கணக்கான ஏழை, எளியவர்களுக்கு யாதொரு வேற்றுமையும் பாராட்டாது நல்லுணவு அளித்தும், இரவலர்களுக்குப் பொருளும் பணமும் வரையாது வழங்கியும் வந்த தர்ம சீலர்;

தமது ஆயுளுக்குப் பின்னரும் தமது சந்ததியினரால் அறப்பணிகள் தொடர்ந்து நடத்தப்பட்டு வர வேண்டுமென்ற நல் சாசனமுடையார்;

என்றவாறெல்லாம் வள்ளல் ஷம்சுத்தாசீனவர்களின் ஈகைச் சிறப்பு போற்றப்படுகின்றது. ★

**பண்பு நலமும் குண நலனும்**

**அறுசீர் விருத்தம்**

*வசைமென் மலருந் திவ்ய வசனமும் வதன வாய்ந்து*
*தின மதி புன்ற கையுந் திகழ் தருங் கருணை நோக்கும்*
*மன மகிழ்ந் தாத ரிப்பும் மானிலத் தோர் வி யக்க*
*ஜனத் திடை புதுமை யுள்ள தமுதாஷீ னான கோவே.*

*தூசணித் தவர்க ளையுந் தொண்டு செய் தடுத்தோ ரையுங்*
*காசினி மீ தொன் றாக கண்டிடுங் கருணை யாளா*
*மாசிலா மனமு மீகை வழுவிலா தழுமை பூண்ட*
*சாசன முடைய கோமான் தமுதாஷீ னான கோவே.* ★★

''எவ்வளவு தளர்விலும் ஷம்சுத்தாசீனவர்கள் ஐவேளையுமே தவறாது

---

★ அருட்கவி முஹம்மது ஹனிபா புலவர், ''அநுகூல புஞ்சம்''(1936) பாடற் றொகுதியின் கருத்துரை.

★★ 'அநுகூல புஞ்சம்' பக். 33-34.

இறையில்லத்தில் தினமும் நடைபெறும் கூட்டுத் தொழுகைகளில் கலந்து கொண்டு தொழுவார். நள்ளிரவுத் தொழுகையையும் தவறாது தொழுது வந்தார். நபியவர்களின் சன்மார்க்கமாம் அத்வைதக் கொள்கையை யுள்ளத்தினுட் கொண்டு, தமது ஞானாசிரியர் அருளிய திருப்பாடல்களை உருக்கமாய் பாடி, மனமடங்கி நிட்டையிலொடுங்குவார். ஆலீம்களென்னும் மேதைகளைத் தம் அருகிருத்தித் தக்க அறிவுரைகளை கேட்டுப் பெறுவார்.

தாம் திரட்டிய திரவியங்களால் அன்னதானம், பானதானம், சொர்ண தானம், வஸ்திர தானம், பூ தானம் முதலான அறங்களைக் கைக்கொண்டார்.

மன்னரும் அரசப் பிரதிநிதிகளும் பேட்டியளித்துச் சிறப்புச் செய்யும் நன்னிலையடைந்து, அரசினரின்தங்கப் பதக்கமும் பஹதூர்ப் பட்டமும் கிடைக்கப் பெற்றார். இல்லறத் துறையில் நல்லறம் நடத்தி தமக்கிசைந்த இல்லாளுடனும் புத்திர பௌத்திர செல்வாக்குடனே செல்வர்க் கழகாஞ் செழுங்கிளை தாங்கிச் சுற்றமும் தழுவி செல் விருந்தோம்பி வரு விருந்து வைகலு மெதிர்பார்த்து நல்லூனூட்டி உபசரித்துப் போற்றுவார்.

பெரும்பாலும் பள்ளிவாசலையே தமதிருப்பிடமாக வைத்து, வந்தவர்களை ஆதரித்து, ஏழை இரப்பாளிகள் எவ்வளவு தொந்தரவு செய்திடினும் கடிந்து நோக்காது, சிரித்த முகத்துடன் இனித்த வார்த்தைகள் சொல்லி, தன்னாலியன்றதைக் கொடுத்தனுப்புவார். ஆலயப் பணிவிடைகளைத் தாமே செய்வார். பக்கங்களிலுள்ள அசுத்தங்களையும் தம் கைக்கொண்டே பரிசுத்தப் படுத்துவார்.

''இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண
நன்னயம் செய்து விடல்''

என்பதற்கிணங்க, தமக்குத் தீங்கு செய்த எவர்க்கும் அவர் நாணும்படி நன்னயம் செய்வதே இவரது பிறவிக் குணமாகவிருந்தது. ஒரு போது தமக்குந், தமதருமைக் குமாரர்களுக்கும் குடிப்பொன்றில் நஞ்சிட்டுக் கொடுத்த கொடியனைக் கைப்பிடியாகக் கண்டு கொண்ட பின்னரும் கடிந்து கொள்ளாமலும் மேலும் மற்றெவராலும் அவனுக்குத் தீங்கு நேரிடாமலும் பாதுகாத்துப் பின்னும் பதறி நிற்குமப் பாதகனை தேன் கசியும்இதமொழிகளால்பதப்படுத்திப் புத்திகூறிப் பொருள்கொடுத்துப் போகவிட்டார் எனின் இவரது ஒப்பிலாக் குணச்சிறப்பினை யென்னென்றியம்புவோம்! ''பொறுத்தார்க்கும் பெரும் பேறுடையார்க்குமே யன்றி இவ்வித சிலாக்கிய குணம் வாய்க்காதென நந்திருமறையே திரைமறைவின்றி யறைகின்றதன்றோ!'' ★

---

★ மேலப்பாளையம் எங் முஸ்லிம் சொசைட்டியார் சமர்ப்பித்த 'அனுதாபப் பத்திரம்' *(6-11-1936)*

## நன்னெறி நாடியே மெய்ப்பொருள் தேடுக

### கலி சந்த விருத்தம்

*கல்லி னகத்திற் கேகயத்தை கயவர் கலங்க வழைத்த நபி*
*யுல்லா மீது யநு தினமு முகந்து விலகல் தவிர்த் தேவ*
*லெல்லா மொழுங்கா நடந்து வந்த யேந்தலான ரெட் சகரே*
*மல்லிகைப்பூ மாலை யணி மன்னரெனு தம்தா ஷீனே.*

*பல்லுயி ரெல்லாந் துதிக்கும் பாத்திபர் மெஞ்ஞான வழி*
*சொல்லுஞ் செயலு மொன்றாகத் துடர்ந்து ஞான தீட்சை யுற்று*
*யில்லகத்தின் சுடரிலங்க வெத் தினமு முற் றுணர்ந்த*
*மல்லிகைப்பூ மாலை யணி மன்னரெனு தம்தா ஷீனே.*

*அல்லறவே திரு ஞான வமிர்த வழிக் குரிய வராம்*
*முல்லை மலரி னெயிருடைய மோட்ச செய் குமன் சூரு*
*ஹல்லாஜுடைய கருணைமிகு கவர்ந்துயுளத்தி லருட் கனிந்த*
*மல்லிகைப் பூ மாலை யணி மன்னரெனு தம்தா ஷீனே.* ★

தம்தாஸ்

ஷெய்கு அப்துல் காதிறு என்ற பெயர் 'செய்தக் காதிறு' 'செய்தக்காதி' 'சைதகாதி' 'சீதக்காலி' என்றெல்லாம் வழங்கி வருகிறது. 'சீதக்காதி' என்பது அப்பெயரின் மரூஉ ஆகும். அது போன்றே ஷம்ஸுத்தாஸீம் என்ற பெயர், தமுஸ்தாசிம்' 'ஷம்ஸுத்தாஸீன்', 'தமுதாஷீன்' 'தம்தாசீன்' என்றெல்லாம் வழங்கி வருகிறது. "**தம்தாஸ்**" என்பது அப்பெயரின் மரூஉ ஆகும்.

வெளியூர்கள் அல்லது வெளிநாடுகளின் பலவிடங்களுக்குச் சென்று வரக்கூடிய மேலப்பாளையம் ஊர்வாசிகளை, அப்பகுதிகளில் வதியும் மக்கள் சந்திக்க நேரிட்டால், "உங்கள் ஊரில் 'தம்தாஸ்' நலமாக இருக்கின்றாரா?" எனப் பரிவுடன் உசாவுமளவிற்கு நற்கீர்த்தி பெற்றிருந்தார் ஷம்சுத்தாசீனவர்கள்.

### புரவலர் போற்றிய பாவலர்

தமது ஞானாசிரியர் வழிமுறையில் வந்தவரென்பதனால், கா.ப. செய்கு தம்பிப் பாவலரவர்களது இளமைப் பருவ முதலே அவரை

---

★ அநுகூல புஞ்சம் (1936) பக். 29.

ஷம்சுத்தாசீனவர்கள் அறிவாரெனினும், ''மெய்ஞ்ஞானத் திருப்பாடற் திரட்டு'' பதிப்புப் பணியில் செய்குதம்பியவர்கள் துணை புரியத் துவங்கிய காலத்தேயிருந்து, அவ்விருவருக் கிடையேயும் முகிழ்த்திருந்த நேயவுணர்வு மலர்ந்து மணம் வீசத் துவங்கவே, சடையப்ப வள்ளலும் கவி கம்பரும் எனச் சொல்லத் தக்க வகையில் இருவரும் நல்லுறவு பூண்டிருந்தனர்.

தமது இருபத்தியோராவது வயதில் ஞானியார் திருப்பாடல் பதிப்புப் பணிக்கென சென்னை வந்ததன் பின்னர் செய்கு தம்பி, அரிய தமிழ் இலக்கியங்களுக்கு உரைகள் எழுதியும், தாமே நூல்கள் இயற்றியும், இவற்றினைப் பதிப்பித்தும், பாட்டுக்கள் புனைந்தும், திருக்குறள், கம்ப ராமாயணம், சீறாப்புராணம், முதலிய இலக்கியங்கள் குறித்து, அவற்றையே தம் வாழ்வு முழுவதும் கற்று வந்துள்ள பண்டிதர்களும் வியக்கும் வண்ணம் நயவுரைகள் தந்து சொற்பொழிவுகள் ஆற்றியும் வந்த சீர்மையைக் கண்ட தமிழறிஞர்கள் ஒன்று கூடி அவருக்குப் ''பாவலர்'' என்னும் பட்டம் அளித்துப் போற்றினர். பின்னர் ''அருட்பா மருட்பா''ப் போரில் ஈடுபட்டுத் தமது நனி சிறந்த நாவன்மை காரணமாக மருள் மங்கவும் அருள் பொங்கவும் செய்து திருவருட் பிரகாச வள்ளலாரது மெய் நேசர்களை மகிழ்வித்தும், தமது முப்பத்து மூன்றாவது வயதில் (கி.பி.1907-ஆம் ஆண்டு) ஒரும் அவதானம் ஒரு நூறும் நிகழ்த்திக் காட்டியும், பாண்டித்துரைத் தேவரவர்களால் தோற்றுவிக்கப்பட்ட தமிழ் சங்கத்துப் புலவர்களுள் ஒருவராய் வீற்றிருந்து தமிழ்ப் பணியாற்றியும் வந்த பாவலரவர்கள், குன்றின் மேல் வைத்த தீபம்' எனப் புகழொளி பரப்பலானார்.

முன்னொரு போழ்து, பாவலரது ஆசிரியப் பெருந்தகையான சங்கர நாராயண அண்ணாவியாரது கற்பிக்குந் திறனிலும், பாவலரது தமிழ்ப் புலமை யிலும் ஐயுறவு கொண்ட கணபதி என்னும் முதுபெரும்புலவர், பாவலரைச் சந்திக்க நேர்ந்து ''மாற்று உரைத்துப் பார்த்து''ப் பின் வியந்தவராய் அருகிருந் தோரிடம் ''என்னை யிவன் கோட்டாற்றி னிருந்தவனா, யிரும் தவனா'' (இவன் கோட்டாற்றில் இருப்பவனா? பெருந் தவத்தை யுடையவனா?) என இரட்டுற மொழிந்த புகழுரையின் நயம் நாடறிந்ததன்றோ?

அப்புலவர் பெருமானின் அருள் வாக்கினுக்கேற்ப, புலவர்க்குப் புலவராய் விளங்கிய தமிழத்தாயின் தவப்புதல்வர் செய்கு தம்பிப் பாவலர வர்களுக்கு, 'தேவாமிர்தப் பிரசங்கக் களஞ்சியம்', 'சதாவதானி', 'நாவலர்',

'பண்டிதர்', 'மகாமதி', 'கலைக் கடல்', 'அல்லாமா' போன்ற பட்டங்களைத் தமிழ்ப் பெருமக்கள் சூட்டி மகிழ்ந்தனர்.

### ஷம்சுத்தாசீன் கோவை

''கோவை'' என்பது தமிழிலுள்ள சிற்றிலக்கிய வகைகள் தொண்ணூற்றாறுள் ஒன்றாகும்.

''ஆய்ந்த கலித்துறை தான் நானூ றகப்பொருண் மேல்
வாய்ந்த நற் கோவையாம்'' (15)

என வெண்பாப் பாட்டியல் கூறும் இலக்கணத்திற்கேற்ப, கோவை என்பது அகப்பொருள் பற்றியது; கலித்துறைப் பா நானூற்றில் அமைவதும் ஆகும். நாற்கவிராச நம்பியின் 'அகப் பொருள் விளக்கம்' கூறும் வரன் முறையில் இக்கோவையின் அகத்துறை நிகழ்வுகள் அமைகின்றனவாதலால், ''நம்பியகப் பொருள் இலக்கணத்திற்கு இலக்கியமாய் அமைந்த செய்யுட்களைக் கிளவிகளாகப் பகுத்தும், துறைகளாக விரித்தும் வரலாற்றுத் தொடர்ச்சியமையப் பாடப் படுவதாகலின் 'கோவை' எனப்பட்டது'' எனத் தெளிவுரை தருவார் பாவலரவர்களின் தலை மாணாக்கரும் முதுபெரும் புலவருமான தெங்கம்புதூர் தா. சாஸ்தாங்குட்டிப் பிள்ளையவர்கள்.

பாடுவதன் அருமையையுணர்ந்தவராய், ''யாவும் பாடி, பின் கோவை பாடு'' என அறிவுரை புகன்றார் ஒரு புலவர். பாவலரவர்கள் இயற்றியனவாக அறியப்படும் கோவை நூல்கள் நான்கினுள் எமது பாட்டனாரவர்களை பாட்டுடைத் தலைவனாகக் கொண்டது ''ஷம்சுத்தாசீன் கோவை'' ஆகும்.

''கிளவித் தலைவனும் கிளவித் தலைவியும் பெயர்கள் சுட்டி அறியப் படார்'' எனும் விதியினுள் அமைந்ததும், பழந்தமிழருக்குரிய அன்பின் ஐந்திணை சார்ந்த ஒழுகலாறுகளுள் களவினைத் தலை இயலாகக் கொண்டது மான அகப் பொருள் நாடகம் நுவலும் கோவை நூலுக்கு, இஸ்லாமிய நெறி முறை வழுவாது வாழ்ந்திருந்த தமிழ் முஸ்லிம் வள்ளல் ஒருவரை பாட்டுடைத் தலைவனாக்கி, பாடல்கடோறும் அவரது பெயரும் கொடைச் சிறப்பும் விதந்து நவின்றும், அவர் சார்ந்தனவற்றின் பெருமைகள் புகன்றும் சங்கத் தமிழ் நிகர்த்த செம்மையும் செறிவுஞ் சான்ற இலக்கிய இன்பம் வழங்கியுள்ள மகாமதியவர் களின் புலமை நயம் போற்றத்தக்கதாகும். பாவலர் தாமும் இஸ்லாமியப் பண்புகளை மிகவும் பேணி வாழ்ந்திருந்த தமிழ் முஸ்லிம் புலவர் ஆவார். இந்நூலின் காப்புச் செய்யுளினைத் தாம் சார்ந்துள்ள சமயக் கோட்பாட்டினின்றும் வழுவாது அவர் யாத்துள்ள பாங்கும் நினைந்து பாராட்டத் தக்கதாகும்.

ஆதலின், எத் திறத்தவரே யாயினும் தமிழர்கள் மொழியுணர்வால் ஒத்திருந்தாரானால், தமிழின்பம் நுகருதற்கு தடை ஏதும் இல்லை என்பதே உண்மை நிலை ஆகும்.

## கோவை நூல் பதிப்பித்தல்

மேலப்பாளையம் வித்வான் வ.அ. மல்க்கான் அலி சாகிபவர்கள் இயற்றிய அரும்பதவுரையோடு கூடிய 'ஷம்சுத்தாசீன் கோவை' நூல், ஷம்சுத் தாசீனவர்களின் மக்களாகிய எம் தந்தையரின் முயற்சியின் பேரில், எங்களது வணிக நிறுவனங்களின் அந்நாளைய ஜெனரல் மேனேஜரும், முஸ்லீம் அஸோஸியேஷன் டைரக்டரும், பன்னூலாசிரியரும், தமிழ், ஆங்கிலம் இரு மொழிகளிலும் ஒருங்கே சிறந்த புலமையும் நாவன்மையும் மிக்கவரும், 'நூருல் ஹக்' மாத இதழின் ஆசிரியரும், பாவலரவர்களின் அணுக்கத் தோழருமாகவும் விளங்கிய மதுரை மகா வித்வான் ம.கா.மு. காதிறு முகியித்தீன் மரைக்காயர் (இவர் இக்கோவை நூலுக்குச் சாற்றுக் கவியும் வழங்கியுள்ளார்) அவர்களைக் கொண்டு கி.பி. 1919 ஆம் ஆண்டு சென்னை ஸ்ரீ பத்மநாப விலாச அச்சுக் கூடத்தில் பதிப்பிக்கப்பட்டு வெளியிடப்பட்டது.

## திருப்பாடற் றிரட்டு 2-ம் பதிப்பு ★

தவமிலங்கிய நபிகணாயகர் சபையி லேகு நற் றகையர்,★★ மா மேவு கோட்டாற்றில் மன்னுயர் மெய்ஞ்ஞான வள்ளலான ஞானியார் அவர்களின் பரம்பரையில் வந்த மௌலவி ஞானியார் ஷெய்கு முஹியித்தீன் ஆலிம் சாகிபு அவர்கள் முயற்சியாலும் வ.செ.த. ஷம்ஸுத்தாஸீனவர்களின் பொருளுதவியைக் கொண்டும் ''மெய்ஞ்ஞானத் திருப்பாடற்றிரட்டு'' இரண்டாம் பதிப்பிற்கான பணி ஹிஜ்ரி 1355 (1936) ஆம் ஆண்டிலே சென்னை கேசரி அச்சுக் கூடத்தில் மேற்கொள்ளப் பட்டு பதிப்பு நடைபெற்றுக் கொண்டிருந்த கால கட்டத்தில் எமது பாட்டனார் காலஞ் சென்று விடவே, எம் தந்தையரின் ஒத்துழைப்போடு கி.பி. 1937-ஆம் ஆண்டு (ஹிஜ்ரி 1356) ஏப்ரல் மாதத்தில் பாடல் பதிப்புப் பணி இனிதே நிறைவுற்று நூல் வெளியிடப்பட்டது.

---

★ ''மெய்ஞ் ஞானத் திருப்பாடற்றிரட்டு''(2-ம் பதிப்பு), முகப்புப் பக்கமும் பதிப்புரையும்

★★ ''மெய்ஞ்ஞானத் திருப்பாடற்றிரட்டு'', சரித்திரச் சுருக்கம் பக்- 4.

## பொன்முடியில் நன்மணிகள்

ஷம்சுத்தாசீனவர்கள் ஏற்றிருந்த பதவிகளும் பெற்றிருந்த சிறப்புகளுமாவன:-

மேலப்பாளையம் V.S.T. தமுஸ்தாசிம் தரகனார் ஹாமீம் பள்ளி மதரஸாவின் அக்தார் மற்றும் இனாம்தார்; தயாள குண சீலர்; தரும குண வள்ளல்; வெகு ஜன உபகாரி; V.S.T. தமுஸ்தாசிம் தரகனார் அண்ட் கம்பெனிகளின் புரொப்ரைட்டர்; வெகு காலமாக முனிசிபல் கவுன்சிலர்; கேப் காமரின் ஜெனரல் டிராபிக் கம்பெனி லிமிடெட் ஸ்தாபகர், செக்ரட்டேரி மற்றும் டிரஷரர்; மேலப்பாளையம் முஸ்லிம் அஸோஸியேஷன் ஸ்தாபகர், போஷகர் மற்றும் மெம்பர்; ஆனரேரி மேஜிஸ்ட்ரேட்; தென் இந்தியா பாங்க் பிரஸிடெண்ட்; ரெங்கூன் சோலியா முஸ்லிம் அஸோசியேஷன் முத்தவல்லி;

டெல்லி தர்பார் மெடலும், சாஹிப் பஹதூர் பட்டமும் பெற்றவர்.

### இயற்கை எய்துதல்

குடும்பத்தினர், உறவினர், சுற்றத்தினர் மற்றும் நட்பினரால் 'பங்களா அப்பா' எனவும் ஏனையோரால் 'தம்தாஸ்' எனவும் அன்புடன் நினைவு கூறப்படும் ஷம்சுத்தாசீனவர்கள் மேலப்பாளையம் மீதிலொரு குறுநில மன்னரெனவே சிறப்புற்றிருந்தாலும் ''முத்தர் மனமிருக்கு மோனத்தே'' என்பதற்கிணங்க மெய்ப் பொருள் தேட்டத்திலேயே தமது சிந்தையைச் செலுத்தியவராய் பற்றற்றிருந்து வந்தார். தமக்கு மரணம் அடுத்ததையுணர்ந்து தமது இறுதிச் சடங்குச் செலவினங்களுக்கென்று ஏழாயிரம் ரூபாயைத் தமது தனயரிடம் தந்து ''பிரைவேட்டாக வைத்துக் கொள். தருணம் வரும்'' எனச் சொல்லிப் பின்னர் ஐந்து நாட்கள் வரை மௌன முற்றிருந்து, ஆயிரம் பிறை கண்ட வாழ்வினராய்த் தமது தொண்ணூற்றிரண்டாவது வயதில் தமிழாண்டு 1112-ல் புரட்டாசித் திங்கள் 12-ஆம் நாள் ரஜப் 10 ஹிஜ்ரி 1355 (27-9-1936) ஞாயிற்றுக் கிழமையன்று பகல் 1-45 மணியளவில் தாம் வழக்கமாக உச்சரித்து வந்திருந்த இறைவன் திருப்பெயராகிய ''ஹக்'' (மெய்ப்பொருள்) என்பதனை உறுதியுடனும் உற்சாகமாயும் மொழிந்தவராக தம் இல்லத்தில் வைத்து இவ்வுலக வாழ்வை நீத்தார். அவரது பூதவுடல் ஊர்வலமாக எடுத்துச் செல்லப் பட்டு, ஹாமீம்புரம் சமவெளியில் வைத்து நூற்றுக்கணக்கான அணிவகுப்புகளாக நின்று தொழ வைத்து, பின்னர் ஹாமீம் பள்ளி மதரஸா மத்தியில் தமது

தந்தையாரின் அடக்கத் தலத்திற்கு கீழ்பாகத்தில், தமக்கென தாமே முன்னர் அமைத்துக் கட்டி வைத்திருந்த கபுறு ஷரீப் என்னும் புதை குழியில் நல்லடக்கம் செய்விக்கப்பட்டார். அன்னாரது இறுதி நிகழ்ச்சிகளில் பல்லாயிரக்கணக்கான இந்து முஸ்லிம்கள் கலந்து கொண்டு அஞ்சலி செலுத்தினர்.

## அநுகூல புஞ்சம்

2-10-1936 -அன்று, மேலப்பாளையம் எங் முஸ்லிம் சொசைட்டியாரின் சார்பில், 'திரு நபி சத்திரம்' எனும் நூலின் ஆசிரியர் மேடை முதலாளியெனும் ஜனோபகாரி தென்காசி ஜனாப் ஹாஜி மு.ந. முகம்மது சாஹிப் B.A., அவர்கள் தலைமையில் நடைபெற்ற இரங்கல் கூட்டத்தில் ஷம்சுத்தாசீனவர்களின் மேன்மையும் சிறப்புகளும் தக்கவர்கள் மூலமாக எடுத்துரைக்கப்பட்டு, முடிவில் அன்னாருக்காக அனுதாபத் தீர்மானம் நிறைவேற்றி, மறுமை நற்பேற்றிற்காக இறையருள் வேண்டப்பட்டது. மேலும் அச்சபையினரின் தீர்மானப்படி, ஷம்சுத்தாசீனவர்களின் தனயர்களின் சமூகத்திற்கு 6-11-1936-ல் அனுதாபப் பத்திரம் சமர்ப்பிக்கப்பட்டது.

ஷம்சுத்தாசீனவர்கள் மறைவையொட்டி, ''அநுகூல புஞ்சம்'' என்ற பெயரில் இரங்கற் பாமாலை நூல் ஒன்று மேலப்பாளையம் அத்தியடித் தெரு செய்யிதப்பா புலவரது குமாரர் அருட்கவி முஹம்மது ஹனிபா புலவர் அவர்களால் இயற்றப் பெற்று, மதுரை மகா வித்வான் ம.கா.மு. காதிறு முகியித்தீன் மரைக்காயர் சாஹிப் அவர்களால் ஹிஜிரி 1355-ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. இந்நூலுக்கு கோட்டாறு சதாயவதானி கா.ப. செய்கு தம்பிப் பாவலரவர்கள் சாற்றுக் கவி வழங்கியுள்ளார்.

## வாழ்க்கைத் துணை நலம்

*''மங்கலம் என்ப மனை மாட்சி மற்றதன்*
*நன்கலம் நன்மக்கட் பேறு.''*

எமது பாட்டனார் அவர்களுக்கு வாழ்க்கைத் துணையாயமைந்த நலஞ் சான்ற எமது பாட்டியாரின் பெயர் கொ. ஹஸன் பாத்திமா பீவி என்பதாகும். அனைவராலும் ''பங்களா அம்மா'' என வாஞ்சையுடன் நினைவு கூரப்படும் இவர், வள்ளன்மை மிக்க தமது கணவருக்கு நற்பெருமையும், நன்மையும் தரத்தக்க நற்குண நற்செய்கைகளைத் தம் இயல்புகளாகக் கொண்ட பெருமாட்டி ஆவார். தமது மனையறத்தின் நல் அணிகலன்கள் என்று

*சொல்லத்தக்க வகையில், செய்கு மன்சூர், செய்யது தாமீம், முஹம்மது இபுராஹிம், என்ற ஆண்மக்கள் மூவர், காதிறு மீறா பீவி, முஹம்மது பீவி, ஹஸன் மீறா பீவி, பீவி பாத்திமா என்ற பெண் மக்கள் நால்வர் என நன்மக்கள் எழுவரை எழு கதிர்களென ஈன்றெடுத்து பெரு வாழ்வு வாழ்ந்திருந்த எமது பாட்டியார் அவர்கள், ஹிஜிரி 1360ம் ஆண்டு சபர் பிறை 11-ல் (10.3.1941) இவ்வுலக வாழ்வை நீத்தார். பல்லாயிரக்கணக்கான இந்து முஸ்லிம்கள் இறுதி அஞ்சலி செலுத்திய பின், அன்னாரைத் தொழ வைத்து, அவருடைய கணவரது அடக்கத் தலத்திற்கு மிக அருகில் அதன் தென்புறமாக நல்லடக்கம் செய்விக்கப்பட்டார்.*

**பொன்றாப் புகழுடம்பினர்**

*ஊரின் கண் நடுவே அமைந்துள்ள ஊருணி எனப் பயன் தரு வாழ்வு வாழ்ந்திருந்த இப்பெருமக்களால் நலம் அடைந்தோரும், பெருமகனார் நிறுவிச் சென்றுள்ள அறக்கட்டளை மூலம் பயன்கள் பெற்று வருவோரும், இவர்களது நற்குண நற்செயல்களை அறிந்தவர்களும் என மக்கள் பற்பலரும் நாளும் இவர்களின் அடக்கத் தலங்களுக்கு வருகை தந்து தரிசித்து, நன்றிப் பெருக்குடனும், நல்லெண்ணத்துடனும் அன்னவர்களின் மறுமை நற் பேற்றிற்கென இறையருளை வேண்டிச் செல்கின்றனர்.*

*ஷம்சுத்தாசீனவர்களது அறக்கட்டளை சாசனத்திற்கிணங்க, அவர்கள் புரிந்து வந்த அறப்பணிகள் பலவும் அவர்களது சந்ததியினரால் தொடர்ந்து செய்து வரப்படுகின்றன.*

*மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்*
*தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே!* ★

**V.S.T. சம்சு தப்ரேஸ்**
*அக்தார்:* **V.S.T. தமுஸ் தாசிம் தரகனார்**
**ஹாமீம் பள்ளி மதரஸா**

*13.4.2000*
*முஹர்ரம் 7*
*ஹிஜிரி 1421*
**மேலப்பாளையம்.**

---

★ *புறநானூறு (165):1-2*

ஹாமீம்

# தம்தாஷீன்றுதி

## இரத சித்ர கவி

| | | | | | நே | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | சி | ர | சீ | | | | |
| | | | ண | கு | ப | சு | வ | | | |
| | | வ | ற் | பு | தா | நே | ர | தி | | |
| | லை | மா | ணி | ம | மா | லா | சி | மா | பா | |
| ய | ணி | ந் | த | ம | னு | நி | தி | யே | பூ | சி |
| | து | ந் | ம | நா | ன் | ரி | த | நீ | த | |
| | | தி | ப் | பெ | னெ | பூ | வி | ல | | |
| | | | ம் | த | சி | வா | தி | | | |
| | | | | போ | தா | த | | | | |
| | | | | | மு | | | | | |

### கட்டளைக் கலித்துறை

*நேசிர சீவ சுபகுண வற்புதா நேரதிபா*
*மாசிலா மாமணி மாலை யணிந்த மனுநிதியே*
*பூசித நீதரின் நாமந் துதிப்பெனெ பூவிலதி*
*வாசிதம் போதா* ***தமுதாசி னென்னு****மா தாபரனே.*

### நிரோட்டம்

*(இதழ் மூடாமற் குவியாமற் படிக்கக் கூடியது)*

### வெண்பா

*தாஷீனென் றெத்திசையிற் றன்கீர்த்தி நின்றிலங்க*
*யாஸீனின் நற்றயாள யற்கையின் - நேசத்தா*
*லக்கென்ற நல்லிறச்ச லங்கதி லேதிகழ*
*சிக்கிலாத நன்னிலைதா ஷீனே.*

- மேலப்பாளையம் அருட்கவி ***முஹம்மது ஹனிபா புலவர்***

## வள்ளலின் வழித் தோன்றல்கள்

### V.S.T. செய்கு மன்சூர் தரகனார்



*ஷம்சுத்தாசீனவர்களின் மூத்த மகனாக 26-4-1895 -ல் பிறந்த இவர் V.S.T. ஹாமீம் பள்ளி மதரசாவின் டர்ன் அக்தாராக இருந்து தமது தந்தையார் நிறுவிய பல்வேறு வணிக நிலையங்களிலும் முக்கிய பொறுப்புகளை வகித்து வந்தார். 1936-ம் ஆண்டு நடைபெற்ற சென்னை மாகாண சட்டமன்றத் தேர்தலில் நெல்லை மாவட்ட தொகுதியின் முஸ்லிம் லீக் வேட்பாளராகப் போட்டியிட்டு 8150 வாக்குகள் பெற்று சட்டமன்ற உறுப்பினர் ஆனார். இவரை எதிர்த்து போட்டியிட்ட* A.K.*பிஜ்லீ சாஹிப் 4250 வாக்குகள் பெற்றார்.* ★

*பாளையங்கோட்டை நகர்மன்ற கவுன்சிலராகவும், மேலப்பாளையம் பஞ்சாயத்து போர்டு தலைவராகவும், பஞ்சாயத்து கோர்ட் உறுப்பினராகவும், நெசவாளர்கள் கூட்டுறவு சங்கத்தின் செயலாளராகவும், மேலப்பாளையம் முஸ்லிம் அஸோசியேஷன் செயலாளராகவும், மாவட்ட கல்விக்குழு உறுப்பினராகவும், கௌரவ மாஜிஸ்ட்ரேட்டாகவும், மேலப்பாளையம் நகர்மன்ற கவுன்சிலராக நீண்ட காலமும் பணியாற்றியவர். நெல்லை மாவட்டத்தில் வாழும் முஸ்லிம்களின் சிறந்த தலைவராகவும், மேலப் பாளையம் நகர முஸ்லிம் லீகின் செயலாளராகவும் விளங்கினார். சென்னை மாகாணத்தில் ஏற்பட்ட நெருக்கடியான சூழ்நிலைகளின் போது அவற்றைச் சீர்படுத்தும் பணியில் சிறப்பான சேவைகள் புரிந்துள்ளார். பொது அறப்பணிகள் பலவற்றுக்கும் பெருந்தொகைகளை நன்கொடையாக வழங்கியுள்ள இவர் தமது தொண்ணூற்று ஐந்தாவது வயதில் காலமானார்.*

*ஹாஜி* V.S.T. *முஹம்மது அபுபக்கர்* Ex.M.C., *(அக்தார் :* V.S.T. *ஹாமீம் பள்ளி மதரசா)* V.S.T. *அஹமது தாஸீம் ஆகியோர் இவரது புதல்வர்களாவர்.*

---

★ Directory of the Madras Legislature, Chennai, 1938; P. 240

## V.S.T. செய்யது தாமீம் தரகனார்



ஷம்சுத்தாசீனவர்களின் இரண்டாவது மகனான இவர் *24-7-1898*-ல் பிறந்தவர். V.S.T. ஹாமீம் பள்ளி மதரசாவின் டர்ன் அக்தாராக இருந்து தமது தந்தையார் நிறுவிய பல்வேறு வணிக நிலையங்களிலும் பொறுப்புகளை வகித்துப் பணியாற்றி, சிறந்த வணிகராகத் திகழ்ந்தார். பாளையங்கோட்டை நகர்மன்றத்தின் துணைத்தலைவராகவும், மேலப்பாளையம் பஞ்சாயத்து போர்டு உறுப்பினராகவும், திருநெல்வேலி ஜில்லா போர்டு உறுப்பினராகவும், திருநெல்வேலி ஜில்லா காங்கிரஸ் கமிட்டி உறுப்பினராகவும், தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி உறுப்பினராகவும் பணியாற்றியவர். திரிபுராவில் நடைபெற்ற அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டத்திற்கு பிரதிநிதியாக தேர்ந்தெடுக்கப்பட்டவர். ★

ஞானியார் சாகிபு அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய, ''மெய்ஞ் ஞானத் திருப்பாடற்றிரட்டு'' நூல் மூன்றாவது முறையாகவும் பதிப்பிக்கப்பட வேண்டு மென்ற அவசியம் நேரிட்டபோது, பதிப்புப் பணிக்கான அனைத்துச் செலவினங் களையும் செய்யது தாமீம் அவர்கள் தாமே ஏற்று, 1960-ஆம் ஆண்டில் பாடற்றிரட்டினை அதன் முந்தைய பதிப்பின் அமைப்பிலேயே அச்சிட்டு வெளியிடச் செய்தார்.

ஆன்மீகத் துறையில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்ததோடு, தர்ம சீலராகவும், ஏழை, எளிய மக்களிடம் அளப்பரிய பரிவுணர்ச்சி கொண்டவராகவும் விளங்கிய இவர் தமது எண்பதாவது வயதில் இயற்கை எய்தினார்.

V.S.T.U. தாஸீம் (எ) சம்சுத்தாசீன், V.S.T. ஆரிப், V.S.T. சம்சு தப்ரேஸ் (அக்தார் : V.S.T. ஹாமீம் பள்ளி மதரசா) ஹாஜி V.S.T. சம்சுல் ஆலம் (முன்னாள் மேலப்பாளையம் நகர்மன்ற உறுப்பினர்; முன்னாள் பாளை. தொகுதி சட்டமன்ற உறுப்பினர்; தற்போதைய திருநெல்வேலி மாநகராட்சி மாமன்ற உறுப்பினர்) V.S.T. சம்சுல் ஹக், V.S.T. ஷம்சுத்தாசீன், V.S.T. ஷெய்கு முகையதீன் மலுக்கு முதலி ஞானியார் (எ) G. முஹம்மது ஆகியோர் இவரது புதல்வர்களாவர்.

---

★ *T.M. Satchit, Who's who in Madras, 1939, cochin, P. 260.*

## V.S.T. முஹம்மது இபுராஹீம் தரகனார்



ஷம்சுத்தாசீனவர்களின் மூன்றாவது மகனாக 15-9-1906-ல் இவர் பிறந்தார். V.S.T. ஹாமீம் பள்ளி மதரசாவின் டிரஸ்டி அக்தாராக இருந்து தமது தந்தையவர்கள் நிறுவிய வணிக நிலையங்களில் பொறுப்புகள் வகித்து வந்த இவர் தலைசிறந்த வணிகராக விளங்கினார். 1930-ல் காங்கிரஸ் இயக்கத்தில் சேர்ந்து, 1930, 1932, 1940, 1942 ஆகிய வருடங்களில் நடைபெற்ற சுதந்திரப் போராட்டங்களில் கலந்து கொண்டு சிறை சென்றவர்.

இவர் ஆனரெரி பெஞ்ச் மாஜிஸ்ட்ரேட்டாகவும் பஞ்சாயத்து கோர்ட்டின் துணைத் தலைவராகவும், மேலப்பாளையம் டவுன் காங்கிரஸ் கமிட்டி தலைவராகவும், மேலப்பாளையம் பஞ்சாயத்து போர்டு தலைவராகவும், மேலப்பாளையம் முஸ்லிம் அஸோசியேஷன் கமிட்டி உறுப்பினராகவும், திருநெல்வேலி தாலுகா காங்கிரஸ் கமிட்டி உறுப்பினராகவும், மேலப்பாளையம் நகர்மன்றத் தலைவராகவும் பணியாற்றியவர்.

அரசியல் சாணக்கியர் என்று அழைக்கப்பட்ட இவர், முதலமைச்சராக இருந்த பெருந்தலைவர் காமராசரை மேலப்பாளையத்திற்கு அழைத்து வரவேற்பு அளித்து, குடிநீர் இன்றித் தவித்த இவ்வூர் மக்களின் அவல நிலையை எடுத்துச் சொல்லி, குடிநீர்ப் பிரச்சினை தீர்க்கப்பட காரணமாக இருந்தார். ★ V.S.T. ஹாமீம் பள்ளி மதரசாவுக்குச் சொந்தமான பரந்த அளவிலான இடம் இதற்கென நன்கொடையாக வழங்கப்பட்டு அவ்விடத்திலே குடிநீர்த் தொட்டிகள் அமைக்கப்பட்டுள்ளன.

தாம் கொண்ட கொள்கையில் உறுதிமிக்கவராயும், ஏழைகளின் தோழராயும் விளங்கி, அறப்பணிகளுக்கு பெருமளவு நன்கொடைகளும் வழங்கியுள்ள இவர் தமது எண்பத்திரண்டாவது வயதில் காலமானார்.

V.S.T. M.E. முஹம்மது சதக்கத்துல்லாஹ் V.S.T.M. ஷம்சுத்தாசீன் Ex.M.C., (அக்தார் : V.S.T. ஹாமீம் பள்ளி மதரசா) V.S.T. M. நாகூர் மீறா, V.S.T. M.E. முகைதீன் ஷெய்கு மன்சூர் ஆகியோர் இவரது புதல்வர்களாவர்.

---

★ "தமிழ்முரசு" மேலப்பாளையம் நகர சிறப்பு மலர், 30-8-1999, பக். 4.

ஹாமீம்

## பாவலர் மகனார் வேண்டுதல்

ஷம்சுத்தாசீனவர்களின் மகனார் **V.S.T. செய்யது தாமீம்** அவர்களுக்கு
பாவலரவர்களின் மகனார் கோட்டாறு **செ. பக்கீறு மீறான் சாகிபு**
அவர்கள் எழுதியனுப்பிய செய்யுட் கடிதம்

### கட்டளைக் கலிப்பா

1

*ஆயுஞ் செந்தமிழ் முற்றுமின் றோர்ந்த நல்*
*அறிஞர் என்றுனைச் சொல்லுவர் ஆதலால்*
*ஈயும் பண்பினால் யாவரும் வள்ளலென்*
*றேற்றும் ஷம்சுத்தா சீனெனுஞ் செம்மலை*
*நீயும் போற்றிப் புகழ்ந்தொரு கோவைநூல்*
*நிகழ்த்து வாயென என்னுயர் தந்தையைத்*
*தோயும் அன்பினால் உங்களைச் சார்ந்தவர்*
*சூழ்ந்து வேண்டினர் சென்றவந் நாளிலே.*

2

*வேண்டும் அன்னவர் எண்ணம்நன் றென்றுபா*
*வேந்தர் எந்தையுஞ் சிந்தைகொண் டாய்ந்துதான்*
*மாண்ட கூத்தனும் மற்றுள செந்தமிழ்*
*வாண ரும்முறை கோவையில் மிக்கதாய்*
*யாண்டும் நின்றொளி செய்திடல் வேண்டுமென்*
*றெண்ணி யாத்திட யாவும் அருள்பெரும்*
*ஆண்ட வன்தண் ணருளினைக் கொண்டுநன்*
*காக்கி யேநமக் கீந்தனர் உண்மையே.*

3

*சொன்ன அந்தக் கவியமு துண்டிட*
*சோலைப் பூமது வுண்ண விரையளி*
*அன்ன தாய்த்தமிழ்ப் பாவலர் நாவலர்*
*ஆவ லோடப் பிரபந்தம் தன்னையே*
*என்னை நித்தமுங் கேட்பதால் அன்னவர்க்*
*கென்ன மாற்றம் உரைப்பதென் றுன்னைநான்*
*முன்னர் கேட்டனன் நற்பதில் தந்தனை*
*முழுதும் அவ்வுரை முற்றுறச் செய்வையே.*

4

*கண்டு தேன்முக் கனியமிழ் திற்றுணை*
*கண்டி டாநயச் சொன்மலி கோவையைக்*
*கண்டு நாட்டவர் உட்களித் தாய்ந்திடக்*
*கருதும்* அச்சிற் பதித்தலுன் நற்கடன்
*எண்டி சையிலும் உன்புகழ் ஓங்கிடும்*
*இன்ப லோகிலுன் தந்தையும் எந்தையும்*
*விண்டு வாழ்த்துவர் உன்னருந் தொண்டினை*
*மேலும் உண்டிறை நல்லருள் என்றுமே.*

ஹாமீம்

# இரண்டாம் பதிப்பிற்கான
# முகவுரை

எங்களது பாட்டனார் *V.S.T.* ***ஷம்ஸுத்தாஸீம் தரகனார்*** அவர்களை பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு சதாவதானி ***கா.ப. செய்குதம்பிப் பாவலர்*** அவர்களால் பாடப் பெற்ற "***ஷம்சுத் தாசீன் கோவை***" நூலின் முதற்பதிப்பு எமது தந்தையரால் பதிப்பிக்கப்பட்டு கி.பி. 1919-ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது.

பாவலரவர்கள் தமது வாழ்வின் இறுதி நாட்கள் வரையிலும் எங்களது இல்லத்திற்கு வருகை தருவதை வழக்கமாகக் கொண்டிருந்தார். எங்களில் வயது மூத்த பிள்ளைகள் யாவரும் அவருடன் நன்கு பழகியுள்ளோம். ஆழம் காண இயலாத கல்விக் கடலாக அவர் விளங்கிய போதிலும் ஏனையோரிடம் அவரவர்களின் வயது, கல்வித் தேர்ச்சிக் கேற்ப இனிய பண்புடன் பேசிப் பழகுவார். இலக்கியக் கடலுள் மூழ்கி அவர் முகந்து தரும் தமிழமுதினைப் பருகுவதற்கென கற்றறிந்தோரும் சுவைஞர்களும் எந்நேரமும் அவரைச் சூழ்ந்திருப்பர்.

பாவலரவர்களின் மூத்த மகனார் ***செ. பக்கீறு மீறான் சாகிபு*** அவர்கள் தமது தந்தையாரின் அரும்புலமையையும் சீரிய பெருமையையும் நன்குணர்ந்தவராயும் மரபு குன்றா வகையில் செந்தமிழ்ச் செய்யுட்களை இயற்றும் திறன் பெற்றவராகவும் விளங்கினார். மகாமதிப் பாவலரவர்கள் 13-2-1950-ல் இயற்கை எய்தினார். தமது தந்தையாரின் மறைவிற்குப் பின்னரும் பக்கீறுமீறான் சாகிபவர்கள் எங்களது குடும்பத்தினரோடு நட்புரிமையுடன் கூடிய நல்லுறவு பூண்டவராய் எமது இல்லத்திற்கு பலகாலும் வருகை தந்துள்ளார்.

"ஷம்சுத்தாசீன் கோவை" நூலினை மீண்டும் அச்சிற் பதிப்பிக்கும் பணியை மேற்கொள்ளுமாறு தாம் வேண்டி வந்ததை வலியுறுத்தி எங்களது தந்தையார் ***V.S.T. செய்யது தாமீம் தரகனார்*** அவர்களுக்கு அவர் எழுதியனுப்பிய "***அஞ்சற் பாட்டு***" இவண் தரப்பட்டுள்ளது. இந்நூலினை மறுமுறையும் அச்சிற் பதிப்பித்து வெளியிட வேண்டுமென நாங்கள் கொண்டிருந்த எண்ணத்திற்கு எங்களது தந்தையரின் மூத்த மருமகரும், எங்களது மைத்துனருமாகிய ***V.S.S. செய்யது அஹமது அப்பாஸ்*** அவர்களும் ஏனைய தமிழ் ஆர்வலர்களும் உரமூட்டி வந்துள்ள நிலையில், கடந்த சூலைத் திங்களில் பாளையங்கோட்டை மாநில தமிழ்ச் சங்கத்தில் நடைபெற்ற சதாவதானி செய்கு தம்பிப் பாவலர் பிறந்த நாள் நிகழ்ச்சியில் பங்கேற்று உரையாற்றிய அகில இந்திய வானொலியில் உயர்நிலைப் பதவி வகித்தவரும், "இலக்கியப் பேழை" எனும் கவின்மிகு நூலின் ஆசிரியரும் பாவலரின் மகனாருமான ***கே.பி.எஸ். ஹமீது சாஹிப்*** அவர்கள், "அவதானக் கலைஞர்", "செந்தமிழ் வளர்த்த செய்குதம்பி" முதலான நூல்களின் ஆசிரியரும், பாவலரின் தகை சான்ற மாணாக்கருமான சுசீந்திரம் வித்துவான் ***சி. குமரேச பிள்ளை*** ஆகியோர் முன்னிலையில்

பன்னூலாசிரியர் ''வரலாற்று ஆய்வுச் செம்மல்'' **செ.திவான்** எம்.ஏ., எம்.ஃபில்., அவர்கள், மற்றும் ஏனைய அறிஞர் பெருமக்கள் ஆகியோர் ''ஷம்சுத்தாசீன் கோவை'' நூலினை மறுமுறையும் அச்சிற்பதிப்பிக்க வேண்டுமென வலியுறுத்திப் பெய்த சொன்மாரியானது எங்களது எண்ணப் பயிருக்கு நன்னீரென அமைந்து விடவே பதிப்பிற்கான ஆயத்தப் பணிகளை மேற்கொண்டோம். நூலினை பதிப்பித்துத் தரும் பொறுப்பினை ஏற்றுக் கொள்ளுமாறு அன்புச் சகோதரர் செ.திவான் அவர்களை வேண்டிக் கொண்டபோது மனமுவந்து இசைவு தந்து, மிகுந்த சிரத்தையுடன் ஒரு தவம் போலவே இப்பணியினை மேற்கொண்டு நிறைவேற்றித் தந்துள்ளார். மேலும் இதுகாறும் தெரிய வந்துள்ள கோவை நூல்களைப் பற்றிய அரிய கட்டுரைக் கோவை ஒன்றினையும் வழங்கியுள்ளார். பொன் போன்ற காலத்தையும், தமது கவனத்தையும் இதற்கென மிகுதியும் ஒதுக்கித் தந்து ஒத்துழைப்பு நல்கிய செ. திவான் அவர்களுக்கு மனமார்ந்த நன்றியினைத் தெரிவிப்பதுடன் அவரது தமிழ்ப்பணியும் சமுதாயப் பணிகளும் மென்மேலும் சிறந்து விளங்க வாழ்த்துகின்றோம்.

இந்நூலினுக்கு அணிந்துரைகள் வழங்கிச் சிறப்பித்திருக்கும் மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகத் தமிழியல் துறைத்தலைவர் முனைவர் தமிழறிஞர் **தொ.பரமசிவன்** அவர்களுக்கும், முதுபெரும் புலவர் சுசீந்திரம் **சி.குமரேச பிள்ளை** அவர்களுக்கும், இப்பணியில் எங்களுக்கு ஆர்வமும், ஊக்கமும், ஒத்துழைப்பும் நல்கிய தமிழ் நெஞ்சங்களுக்கும், செவ்விய முறையில் அச்சுப் பணிகளை நிறைவேற்றித் தந்த ஹமீது பிரஸ் சகோதரர் **எம்.சாகுல் ஹமீது** அவர்களுக்கும், V.S.T. குடும்பத்தினர் சார்பில் மனமுவந்த நன்றியறிதலைத் தெரிவிப்பதில் மகிழ்ச்சியடைகின்றோம். இறைவன் அருளால் ''**V.S.T. தமுஸ்தாசிம் தரகனார் அறக்கட்டளை**'' யின் சார்பில் பதிப்பிக்கப் பெற்று, தமிழுலகம் பயன்பெறும் வகையில் இலவச வெளியீடாக வழங்கப்படும் ''ஷம்சுத்தாசீன் கோவை'' நூலின் இவ் இரண்டாம் பதிப்பினை எங்களது பாட்டனார் **V.S.T. ஷம்ஸுத் தாஸீம் தரகனார்**; சதாவதானி **கா.ப. செய்கு தம்பிப் பாவலர்** ஆகிய பெருமக்கள் இருவரின் நினைவினுக்கு சமர்ப்பிக்கின்றோம். அன்னவர்களது மறுவுலக நற்பேற்றிற்கு இறையருள் இறைஞ்சுமாறு அன்புடன் வேண்டுகின்றோம்.

அன்புடன்

ஹாஜி **V.S.T. முஹம்மது அபுபக்கர்**

**V.S.T. சம்சு தப்ரேஸ்**

**V.S.T.M. ஷம்சுத்தாசீன்**

**அக்தார்கள்: V.S.T. தமுஸ்தாசிம் தரகனார்**

**ஹாமீம் பள்ளி மதரஸா.**

ஹாஜி **V.S.T. சம்சுல் ஆலம்** Ex.M.L.A., M.C.,

**செயலாளர்,**

**V.S.T. ஹாமீம் பள்ளி மதரஸா குடும்ப அறக்கட்டளை.**

13.4.2000
முஹர்ரம் 7
ஹிஜ்ரி 1421
மேலப்பாளையம்.

*மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகத்*
*தமிழியல் துறைத் தலைவர் முனைவர்*
*தமிழறிஞர்* **தொ.பரமசிவன்** *அவர்கள்*
*அளித்த அணிந்துரை*

# பாராட்டுக்குரிய பணி

பழந்தமிழ் இலக்கியம் அகம், புறம் என்ற பொருட்பாகுபாட்டினை உடையது. அவை இரண்டிலும் தமிழிலக்கிய, இலக்கணத் தொகுப்புகளில் அகப்பொருளே சிறப்பிடம் பெறுகின்றது. அளவிலும் அதுவே பேரிடம் பெறுகின்றது. குறிஞ்சிப் பாட்டின்துறைக் குறிப்பில் உள்ள தமிழ் என்ற சொல்லே தமிழ் அகப் பொருளை உணர்த்தி நிற்பதாக அமைந்துள்ளது. பிற்காலத்தில் எழுந்த தமிழ் அகப் பொருள் நூலொன்றுக்கு 'தமிழ்நெறி விளக்கம்' என்பதே பெயராகும்.

அகப்பொருள் வளர்ச்சியில் ஒரு கால கட்டத்தில் அக இலக்கியத்தின் பல்வேறு துறைகளையும் ஒன்றாகச் சேர்த்து 'கோவை' என்னும் புதிய சிற்றிலக்கிய வகையினையும் உருவாக்கினர்.

சங்க அகப்பாடல்கள் போல கோவை நூல் பாடல்களைத் தூய அக இலக்கியமாகக் கொள்ள இயலாதுதான்; ஏனென்றால் கோவை நூலின் பாடலுக்குப் பாட்டுடைத் தலைவன் கிளவித் தலைவன் என தலைவர் இருவராவார்.

'பாண்டியனின் மதுரை நெடுந்தெருவில் பெண்ணே நாம் சந்தித்தபோது' என்று பேசும் காதலனே கிளவித்(அகப்பொருளுக்கு) தலைவனாவான்.. பாட்டுடைத் தலைவன், பாண்டியனாவான். எனவேதான் கோவை நூலைத் தூய அக இலக்கிய நூலாக கூறமுடியாது. இது புறப்பொருள் சாயலை உடையது என்று நாம் கூறுகிறோம்.

தமிழ்ப் பேரரசுகள் வலிமையை இழந்து, புரவலர் இல்லாத காரணத்தால், தமிழ்ப் புலவர்கள் அந்தந்த வட்டாரத்தில் வாழ்ந்த நிலக்கிழார்களையும், குறுநிலத் தலைவர்களையும், படைத் தலைவர்களையும், பாட்டுடைத் தலைமக்களாக்கினர். இலக்கியத்தின் வடிவத்தைப் பொறுத்தமட்டில் இதனைச் 'சென்று தேய்ந்து இறுதல்' என்று தான் சொல்ல வேண்டும்.

காலனி ஆட்சிக் காலத்தில் சிற்றரசர்களும் பெருநிலக்கிழார்களும் அதிகாரத்தினையும் செல்வத்தினையும், பெருமையினையையும் இழந்து போயினர். ''முன்னிக்கவிதை வெறி மூண்டெழுந்த'' சிலர் ஆங்கிலேயராட்சியில் பொறுப்பு வகித்த சில அதிகாரிகளையும் பாட்டுடைத் தலைவராக்கினர். மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை நன்றி உணர்வோடு நீதிபதி வேதநாயகர் மீது 'குளத்தூர்க்கோவை' பாடியதும் இப்படித்தான்.

20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் கூட தமிழ்க்கவிதை மரபில் தோய்ந்தவர்களுக்கு சிற்றிலக்கியங்களின் பிடியிலிருந்து முழுமையாக வெளியேற முடியவில்லை. மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளையின் 'பழுத்த தமிழ்ப்புலமை' சிற்றிலக்கியங்களில் சிக்கி நேரிடையாக 20 ஆம் நூற்றாண்டு தமிழர்களுக்குப் பயன்படாமல் போனது வருந்தந்தான். அவருக்குப் பின்னர் இந்தச் சுழலில் சிக்கிய புலமையாளர்களாக சோழவந்தான் அரசஞ்சாண்முகனாரையும், மகாமதி செய்குதம்பிப் பாவலர் அவர்களையும் குறிப்பிட வேண்டும். ஆற்றல் மிகுந்த கட்டுரையாளராக விளங்கிய பாரதியார் கூட பள்ளியெழுச்சி, தசாங்கம், இரட்டைமணிமாலை, சீட்டுக்கவி என்றவாறு மரபின் தொடர்ச்சியிலே காலூன்றிப் பின்னரே புதிய திருப்பங்கள் கண்டவராவார்.

செய்குத்தம்பிப் பாவலர் அவர்களின் நினைவாற்றலும்,நாவன்மையும், இலக்கணப் பயிற்சியும், இலக்கியத்தோய்வும் பற்றிய சமகாலத்துக் குறிப்புக்கள் நமக்கு நிறையவே கிடைக்கின்றன. அவர் பெற்ற 'மகாமதி' , 'சதாவதானம்', 'சதாவதானி', 'பாவலர்' ஆகிய பட்டங்களும் அவற்றை நமக்கு உணர்த்துகின்றன.

தேசிய இயக்கத்தில் தொடக்க காலத்தில் இளங்கவிஞராகப் பாவலர் படைத்தளித்த நூல் 'ஷம்சுத்தாசீன் கோவை' இந்நூலின் முதற்பதிப்பு 1919இல் வெளிவந்திருக்கிறது. அக்காலத்தில் கௌரவ மாஜிஸ்திரேட் 'ஹானரரி மாஜிஸ்திரேட்' என்ற மதிப்புறு நீதிபதி பதவி மிக உயர்ந்ததாகக் கருதப்பட்டது. அப்பொறுப்பினை வகித்த மேலப்பாளையம் ஷம்சுத்தாசீன் அவர்கள் வள்ளலாகவும், தமிழிலக்கிய ஆர்வலராகவும் திகழ்ந்திருக்கிறார்கள். (மேலப்பாளையத்தை அடுத்த முன்னீர்ப்பள்ளத்தைச் சேர்ந்த தமிழறிஞர் M.S.பூர்ணலிங்கம்பிள்ளை அவர்கள் இவரது தொடர்பினாலேயே 'இஸ்லாமிய தமிழ்ப் புலவர்கள்' பற்றிய நூலொன்றை எழுத முனைந்திருக்கிறார் என்பது (மற்றொரு வரலாற்றுக் குறிப்பினால் தெரிய வருகிறது).

பாவலர் அவர்கள் தமிழிலக்கியப் பயிற்சியின் ஆழத்தைக் காட்டுவதாக இந்த நூல் அமைந்துள்ளது. ஒரு காதல் நிகழ்ச்சியை 400 துறைகளில் விரித்து எழுதுவது நுட்பமான இலக்கியப் பயிற்சி உடையவர்களுக்கு மட்டுமே இயலும். இதிலுள்ள மற்றொரு சிறப்பு காதல் நிகழ்ச்சியின் வளர்ச்சிக்கு நாள் வரையறை செய்திருப்பதாகும். பாவலரின் மதிப்பீட்டின்படி இந்நூலில் 56 நாள் நிகழ்ச்சிகள் பேசப்பட்டுள்ளன. பாட்டுடைத் தலைவரின் ஞானாசிரியர் பெயரும்(கோட்டாறு ஞானியார் சாகிப்) குறிப்பிடப்பட்டிருப்பது கோவை நூல்கள் காணாத மற்றொரு புதுமையாகும். இம்முயற்சி இஸ்லாமிய 'சூஃபி' மரபின் தாக்கத்தால் விளைந்திருக்கிறது.

பாட்டுடைத் தலைவரின் மலை தமிழ்ச்சிலம்பு ஆகிய பொதியமலை என்பதும் ஆறு தாமிரபரணி என்பதும் பாவலர் 'மண் மணந்த மணாளர்' என்பதனைக் காட்டும் சான்றுகளாகும்.

கவிதையின் நடையினைப் பாவலர் பிற்காலத்தில் எழுதிய 'நாயகமான்மியமஞ்சரி'யின் நடையுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் இக்கோவை நூல் இறுக்கமான கவிதை நடையினைக் காட்டுவதாக அமைந்துள்ளதனை உணரலாம். இந்த மரபின் இறுக்கம் பாட்டுடைத்தலைவர் பற்றிய வரலாற்றுக் குறிப்புக்களை நமக்குத்

தராமல் போய்விட்டது. (பாண்டிக் கோவை, கப்பற்கோவை தவிர்ந்த எல்லாக் கோவை நூற்களுக்கும் இது பொருந்தும்)

நிறைவாக மரபு சார்ந்த கவிதையின் இனிமைக்கு இரண்டு சான்றுகள்

*பந்தகத் தாசை பரிந்திலை பைந்துணர் பற்றிலைசெய்*
*சிந்தக வண்டலுஞ் சேர்த்திலை யன்னை சினத்ததுண்டோ*
*நொந்தகம் வாடினை நோற்றினை கண்ணீர் நுடங்கிடையே*
*வந்ததென் ஹாமீம் புரஷம்சுத் தாசீன் மகிழ்கிரிக்கே.*

*பாலுங் கசப்பப் பழமும் புளிப்பப் படர்ந்தமுலை*
*மேலும் பசப்ப விழிநீ ரரும்ப மிடைந்தனளாற்*
*கோலும் பெருந்தவக் கோன்ஷம்சுத் தாசீன் கொழுங்கிரிவா*
*யேலுங் குணத்தணங் கேயிசை யாயுற்ற தேந்திழைக்கே.*

இந்நூலின் பதிப்பாசிரியர் செ.திவான் அரிய முயற்சியுடைய வரலாற்று ஆசிரியர்; தமிழிலக்கிய மாணவரல்லர் என்பது வியப்புக்குரிய செய்தியாகும். இந்நூலுக்கு அவர் தந்துள்ள பதிப்புரை அவரது முயற்சியின் அருமையினையும், வீச்சினையும் காட்டுவதாகும். அறியப்படாமல் மறைந்துபோன தமிழ் நூல்களை மறுபதிப்புச் செய்வது ஒரு அரிய தமிழ்ப் பணியாகும். ஏனென்றால் விரிந்த, ஆழமான, முழுமையான தமிழ்ப் புலவர் வரலாறு' என்பது இன்னமும் தமிழ் ஆய்வாளர்களின் கனவாகவே இருந்து வருகிறது. அக்'கனவு மெய்ப்படும்' முயற்சிகளில் ஒன்றினை தமிழ்நாட்டு வரலாற்று ஆய்வாளர் செ.திவான் தொடங்கியுள்ளார். அவரது பணி நன்றிக்கும் பாராட்டுக்கும் உரியதாகும்.

பதிப்பாசிரியரின் வரலாற்று முயற்சிகளைப் போல, இலக்கிய முயற்சிகளையும் வெற்றி பெற வாழ்த்துகின்றேன்.

மேலப்பாளையம், VST ஷம்சுத்தாசீன் தரகனார் அறக்கட்டளை, ஹாமீம் பள்ளி மதரஸா குடும்ப அறக்கட்டளை சார்பில் இந்நூல் பதிப்பிக்கப்பட்டு இலவசமாக வழங்கப்படுவது பாராட்டுக்குரியதாகும்.

**தொ.பரமசிவன்**
தமிழியல் துறைத்தலைவர்,
மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம்.

## கோவை நூல்கள் அத்தனையையும் தொகுத்திருப்பது

# அரிய சேவை

### அணிந்துரை

### (சுசீந்திரம் வித்துவான் சி. குமரேசபிள்ளை, )

சதாவதானி செய்குத் தம்பிப் பாவலர் அவர்கள் என் தமிழாசிரியர். நான் அவர்களிடம் 1940 முதல் 10 ஆண்டுகள் தமிழ் கற்றேன். அக்காலையில் அவர்கள் சொன்ன அரும்பெரும் கருத்துக்களைத் தொகுத்து 'அவதானக் கலைஞர்' என்றும் 'செந்தமிழ் வளர்த்த செய்குதம்பி' என்றும் இருநூற்கள் வெளியிட்டேன். அந்நூற்களைப் பார்வையிட்ட செ.திவான் அவர்கள் உள்ளத்தில் பாவலரவர்களின் நூற்களைப் பதிப்பிக்க வேண்டுமென்ற எண்ணம் உதயமானது அவர்களின் தமிழ்க்காதலை எடுத்துக்காட்டுகிறது.

அக்காதலில் பாவலர் அவர்கள் எழுதிய சிறப்பிற்குரிய சம்சுத்தாசீன் கோவை அச்சு வாகனம் ஏறி வருகிறது. அதில் புதுமைகளைப் புகுத்தி கவிதைச் சுவையில் நம்மைக் கனியச் செய்து விடுகிறார் பாவலர்.

அம்முயற்சியில் தமிழ் இலக்கிய வரிசையில் அமைந்த கோவை நூற்கள் அத்தனையையும் வரலாற்று ஆசிரியர் செ.திவான் தொகுத்துக் காட்டியிருப்பது ஓர் அரிய சேவை. அதற்காக அவருக்கு என் வாழ்த்துக்கள்.

தமிழ் இலக்கிய உலகில் தமிழ்த்தாய்க்குப் புலவர் பெருமக்கள் அணிவித்த அணிகளை புதுக்கி செம்மைப்படுத்தி விளக்கி அணிவிக்கும் முயற்சியில் ஈடுபட்டிருக்கும் செ.திவான் அவர்களுக்கு மீண்டும் என் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலப்பாளையம், VST தமுஸ்தாசிம் தரகனார் அறக்கட்டளை, ஹாமீம் பள்ளி மதரஸா குடும்ப அறக்கட்டளை சார்பில் இந்நூல் பதிப்பிக்கப்பட்டு இலவசமாக வழங்கப்படுவது நன்றிக்கும், பாராட்டுக்கும் உரியதாகும்.

சுசீந்திரம், 　　　　　　　　　　　　　　　　இப்படிக்கு,

25.1.2000. 　　　　　　　　　　　　　　　　சி. குமரேசன்.

பாளையங்கோட்டை முஸ்லிம் அனாதை நிலையத் தலைவர்

ஜனாப். **எம்.ஜமால் முஹம்மது சாஹிப்** அவர்களின்

## *வாழ்த்துச் செய்தி*

மேலப்பாளையம் வள்ளல் V.S.T. தமுஸ் தாசீம் தரகனார் அவர்கள் கல்வி பெற வழியில்லாத ஆதரவற்ற ஏழை எளிய மாணவர்களுக்கு உணவு, உடை, உறைவிடம் போன்றவற்றை இலவசமாக வழங்கி, தக்க ஆசிரியர்களைக் கொண்டு சன்மார்க்கக்கல்வியும், நல்லொழுக்கமும் பயிற்றுவிக்கச் செய்தவர்; 'ஹாமீம் பள்ளி மதரஸா' என்ற பெயரிலான இறையில்லமும் அத்துடன் இணைந்த அரபிப் பாடசாலையையும் நிர்மாணித்தவர்;

ஆலிம்களுக்கும், தமிழில் புலமை பெற்ற சான்றோர்களுக்கும் வேண்டும்போது வேண்டியன கொடுத்து ஆதரித்த பண்பாளர். இஸ்லாம் மார்க்கத்தைப் புதிதாக ஏற்றுக்கொண்டவர்களை அன்போடு ஆதரித்தவர். தமது வாணிப நிலையங்களில் நூற்றுக்கணக்கானோரைப் பணியில் அமர்த்தி, அவர்களது குடும்பங்களின் வறுமையைப் போக்கிய கருணையாளர் வள்ளல் தமுஸ்தாசீம் தரகனார்.

கோட்டாற்றில் பிறந்த பாட்டாறு சங்கைமிக்க சதாவதானி செய்குதம்பிப் பாவலர் தொண்டிச் சான்றோர்களால் 'கலைக்கடல்' என்றும், திண்டுக்கல் சான்றோர்களால் 'அல்லாமா டாக்டர்' என்றும், நாஞ்சில் நாட்டவர்களால் 'தமிழ்ப் பெரும்புலவர்' என்றும், 'செய்கு' என்று தந்தையாராலும், 'தம்பி' என்று தாயாராலும், 'பாவலர்' என்று உலகமக்களாலும் பாராட்டப் பெற்றவர் செய்குதம்பிப் பாவலர்.

மேலப்பாளையத்தில் பிறந்து வளர்ந்து பெரும் புகழுடன் மறைந்த பெரியார் ஷம்சுத்தாசீன் அவர்கள் மீது செய்குதம்பிப் பாவலர் அவர்களால் பாடப்பெற்றது 'ஷம்சுத்தாசீன் கோவை'யாகும்.

தமிழ் இலக்கியத்தின் பல்வேறு பிரிவுகளுடன் தொடர்புடைய நூல்களை இயற்றி தமிழுக்குப் புகழ் சேர்த்த முஸ்லிம் புலவர்கள் பலரைப் பற்றியும், அவர்தம் படைப்புக்கள் பற்றியும் வளரும் தலைமுறை அறிந்து கொள்ளும் வாய்ப்புக்கள் குறைந்து வருகின்ற வேளை இது.

இந்தச் சந்தர்ப்பத்தில் அறியப்படாமல் மறைந்துபோன தமிழ் நூல்களை மறுமதிப்புச் செய்வது ஒரு அரிய தமிழ்ப்பணியாகும். அந்த முயற்சியில் ஈடுபட்டுப் பெரிதும் உழைத்திட்ட சகோதரர் ஜனாப். *செ.திவான்* அவர்களுக்கும், அந்த நூலை மேலப்பாளையம் **V.S.T.தமுஸ்தாசிம் தரகனார் அறக்கட்டளை** சார்பில் இலவசமாக வெளியிட்ட அறக்கட்டளையினருக்கும் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

***எம். ஜமால் முஹம்மது***
தலைவர்
முஸ்லிம் அனாதை நிலையம்

# எண்ண அலைகள் (பதிப்புரை)

''கோவை நூல் ஏதாவது நீர் வாசித்திருக்கிறீரா?'' என்று பிள்ளையவர்கள் கேட்டார்கள்.

''திருக்கோவையாரும் தஞ்சைவாணன் கோவையும் படித்திருக்கிறேன்'' என்று விடை கூறினேன்.

''இப்போது சீகாழிக் கோவை பாடம் கேட்கலாம்'' என்று அவர் சொன்னார். . . .

நான் பாடம் கேட்பதற்கு அக்கோவையின் பிரதி கிடைக்கவில்லை. பிள்ளையவர்களிடம் இருந்த பிரதி வேறொருவர் வசம் இருந்தது. ''கூறை நாட்டுக் கனகசபை ஐயரிடம் பிரதி இருக்கிறது. ஆனால் அதை அவர் எளிதில் கொடுக்க மாட்டார். வேறு யாரிடமாவது இருக்கும்; வாங்கித் தருகிறேன்'' என்று அவர் சொன்னார். அன்று என் ஆசிரியர் வழக்கம் போல் மத்தியான போஜனம் ஆன பிறகு படுத்துக் கொண்டிருந்தார்.

கூறை நாடு மாயூரத்திலிருந்து இரண்டு மைல் தூரமிருக்கும். அவர் துயிலும் சமயமறிந்து நான் கூறை நாட்டுக்கு மிகவும் வேகமாக ஓட்டமும் நடையுமாகச் சென்றேன். எப்படியாவது கனகசபை ஐயரிடமிருந்து சீகாழிக் கோவைப் பிரதியை வாங்கி வந்து விட வேண்டும் என்ற எண்ணத்தோடு சென்றேன். அவரிடம் நயந்து கேட்டு அதை வாங்கினேன். பிள்ளையவர்கள் விழித்துக் கொள்வதற்குள் வந்து விட வேண்டுமென்று ஒரே ஓட்டமாக மாயூரம் வந்து விட்டேன். அப்போது ஒரு மணியிருக்கும். அந்த வெயிலின் வெம்மையும், இரண்டு மைல் தூரம் வேகமாகப் போய் வந்த களைப்பும் கோவைப் பிரதி கிடைத்த சந்தோஷத்தில் தோற்றவில்லை.

பிள்ளையவர்கள் விழித்துக் கொண்ட போது நான் சுவடியும் கையுமாக எதிரில் நின்றேன்.

''என்ன புஸ்தகம் அது?'' என்று கேட்டார் அவர்.

''சீகாழிக் கோவை.''

''ஏது?''

''கனகசபை ஐயருடையது.''

''எப்போது வாங்கி வந்தீர்?''

''இப்போது தான்.''

அக்கோவையைப் பாடம் கேட்க வேண்டுமென்றிருந்த வேகம் வெயிலின் வெம்மையையும் பொருட்படுத்தாமல் ஓட்டமும் நடையுமாகச் சென்று வாங்கி வரத் தூண்டியதென்பதை ஆசிரியர் உணர்ந்து கொண்டார். உடனே பாடம் சொல்லத் தொடங்கினார்.

பாடம் சொல்லிய ஆசிரியர் திரிசிரபுரம் மகாவித்துவான் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம்பிள்ளை; பாடம் கேட்பதற்காக வெயிலில் ஓடிச்சென்று 'சீகாழிக் கோவை' நூலினைப் பெற்று வந்தது மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்திய கலாநிதி டாக்டர் உ.வே. சாமிநாதையர் என்பது தமிழுலகம் நன்கறிந்த விஷயங்களில் ஒன்றாகும்.[1]

'சீகாழிக் கோவையைப் பாடங் கேட்பதற்காக உ.வே. சாமிநாதையர் வெயிலில் ஓடிச் சென்று வந்ததையும், அவர்களே தமது வாழ்நாளில் 1903 இல் சீகாழிக் கோவையையும், திருவாவடுதுறைக் கோவையையும், 1935 இல் பழமலைக் கோவையையும், 1937 இல் சிராமலைக் கோவையையும், திருவாரூர்க் கோவையையும்[2] பதிப்பித்திருப்பதையும் அறிந்த போது, கோவை நூல்கள் பற்றிய விவரங்களைத் தேடலானேன். 'கோவை' நூல் என்றால் என்ன?

அன்னைத் தமிழ்மொழியில் வழங்கி வரும் பிரபந்தங்கள் 96 ஆகும். 'சிவந்தெழுந்த பல்லவராயன் உலா'[3] என்ற 17 ஆம் நூற்றாண்டுப் பிரபந்தம் 'தொண்ணூற்றாறு கோலப்பிரபந்தங் கொண்ட பிரான்' என்று கூறுகிறது. ★

## தொண்ணூற்றாறு வகை

சதகம், பிள்ளைக்கவி, பரணி, கலம்பகம், அகப்பொருட் கோவை, ஐந்திணைச் செய்யுள், வருக்கக் கோவை, மும்மணிக்கோவை, அங்கமாலை, அட்டமங்கலம், அநுராகமாலை, இரட்டைமணிமாலை, இணைமணிமாலை, நவமணிமாலை, நான்மணிமாலை, நாமமாலை, பல்சந்தமாலை, கலம்பக மாலை, மணிமாலை, புகழ்ச்சி மாலை, பெருமகிழ்ச்சி மாலை, வருக்கமாலை, தண்டகமாலை, வசந்த மாலை, மெய்க்கீர்த்தி மாலை, காப்பு மாலை, வேனின் மாலை, தாரகை மாலை, உற்பவமாலை, தானைமாலை, மும்மணி மாலை, வீரவெட்சி மாலை, வெற்றிக் கரந்தை மஞ்சரி, போர்க்கு எழுவஞ்சி, வரலாற்று வஞ்சி, செருக்களவஞ்சி, காஞ்சி மாலை, நொச்சி மாலை, உழிஞை மாலை, தும்பை மாலை, வாகைமாலை, வாதோரண மஞ்சரி, எண் செய்யுள், தொகைநிலைச் செய்யுள், ஒலியலந்தாதி, பதிற்றந்தாதி, நூற்றந்தாதி, உலா, உலாமடல், வளமடல், ஒருபா ஒருபது, இருபா இருபது, ஆற்றுப்படை, கண்படைநிலை, துயிலெடைநிலை, ஊரின்னிசை, பெயரின்னிசை, பெயர் நேரிசை, ஊர் நேரிசை, ஊர் வெண்பா, விளக்கு நிலை, புறநிலை, கடைநிலை, கையறுநிலை, தசாங்கப்பத்து, தசாங்கத்தயல், அரசன்

---

1 உ.வே. சாமிநாதையர், என் சரித்திரம், சென்னை, 1982, பக். 193, 194.

2 இ.மு. சுப்பிரமணியபிள்ளை, வள்ளுவர் இருபதாம் நூற்றாண்டுத் தமிழ், ஐந்தாம் பகுதி, 1964, பக். 152, 153.

3 மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, 14 ஆம் நூற்றாண்டு, மாயூரம், 1968 பக். 322.

விருத்தம், நயனப்பத்து, பயோதரப்பத்து, பாதாதிகேசம், கேசாதிபாதம், அலங்காரபஞ்சகம், கைக்கிளை, மங்கலவெள்ளை, தூது, நாற்பது, குழமகன், தாண்டகம், பதிகம், சதகம், செவியறிவுறூஉ, வாயுரை வாழ்த்து, புறநிலை வாழ்த்து, பவனிக்காதல், குறத்திப்பாட்டு (குறவஞ்சி), உழத்திப்பாட்டு, ஊசல், எழு கூற்றிருக்கை, கடிகை வெண்பா, சின்னப்பூ, விருத்தஇலக்கணம், முதுகாஞ்சி, இயன் மொழி வாழ்த்து, பெருமங்கலம், பெருங்காப்பியம், காப்பியம் முதலிய 96 வகைப் பிரபந்தங்கள் தமிழில் உள்ளன. [4]

## சிற்றிலக்கியம்

''பிரபந்தம் என்ற வடசொல்லுக்கு நன்கு கட்டப்பட்டது, நன்கு யாக்கப்பட்டது என்று பொருள். பிரபந்தம் என்ற சொல் தமிழ் வழக்கில் சிறிய இலக்கிய நூல்களைச் சிறப்பாகச் சுட்டத் தொடங்கியது. அதற்கு நிகராகச் சிற்றிலக்கியம் என்ற சொல்லும் வழக்காற்றில் வரத் தொடங்கியது. இச் சிற்றிலக்கிய நூல்கள் நெடும்பாட்டுப் போல்வன; பலதுறை சார்ந்த பெரு நூல்கள் போலல்லாது, ஒரு சில துறைகளைப் பற்றிய செய்திகளையே உள்ளடக்கின. சுருங்கிய அளவில் அமைவன; அதனால் குறைந்த காலத்தில் படித்து முடிக்கக் கூடியன. இவை வட்டாரச் சார்பு மிக்கன. சங்ககாலப் பத்துப் பாட்டுக்கள் போலக் குறிப்பிட்ட இறைவனை, மன்னனை, வள்ளலைப் பற்றிப் புகழ்வதற்காக, சிறப்பாக எடுத்துரைப்பதற்காக எழுதப்பட்டன'' என்பர் தமிழண்ணல். [5]

## சிற்றிலக்கிய காலம்

''தொல்காப்பியர் காலத்தில் இடம்பெற்ற சிற்றிலக்கிய வித்து, சங்க காலத்தில் ஆற்றுப்படையாக முளைவிட்டு, ஐந்தாம் நூற்றாண்டில் அந்தாதியாகத் துளிர்த்து, ஏழாம் நூற்றாண்டில் 'கோவை'யாகச் செடியாகி, எட்டாம் நூற்றாண்டில் உலாவாக மரமாகி ஒன்பதாம் நூற்றாண்டில் கலம்பகமாகக் கிளைத்து, பதினோராம் நூற்றாண்டில் சதகமாகவும், பரணியாகவும் அரும்பி, பன்னிரண்டாம் நூற்றாண்டில் பிள்ளைத் தமிழாக மொட்டாகி, பதினான்காம் நூற்றாண்டில் தூதாகப் பூத்து, பதினாறாம் நூற்றாண்டில் பள்ளாகக் காய்த்து, பதினெட்டாம் நூற்றாண்டில் குறவஞ்சியாகக் கனிந்தது. சிற்றிலக்கியப் பெருமரத்தில் இன்று ஆயிரக்கணக்கான சுவைக் கனிகள் பழுத்து தமிழ்த்தேன் மாந்தும் வண்டுகளை வரவேற்கின்றன' என்பர் முனைவர். ந.வீ. செயராமன். [6]

4 ஆ. சிங்கார வேலு முதலியார், ஆ. சிவப்பிரகாச முதலியார், அபிதான சிந்தாமணி, சென்னை, 1991, பக். 1122 - 1127.

5 புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, மதுரை, 1992, பக். 331.

6 சிற்றிலக்கியச் செல்வங்கள், சிதம்பரம், 1967, பக். 31.

இலக்கிய வளம் மிகுந்து சிறந்து விளங்கும் நம் தமிழ் மொழியில் சீரும் சிறப்பும் நிறைந்த சிற்றிலக்கியப் பகுதியில் 'கோவை' என்ற இலக்கிய வகைக்கு வருவோம்.

## கோவை

உரு, திரு, பருவம், குலம், குணம் ஆகியன ஒத்த தலைவனும் தலைவியும் தெய்வ அருளால் தாமே எதிர்ப்பட்டு களவு நிகழ்த்திப் பின் கற்பு நிலையில் இல்லறம் நிகழ்த்தும் இனிய நிகழ்ச்சிகளைக் கூறுவது கோவையாகும். அகத்துறைக் கூறுகளைக் கோவைப்படுத்திக் கூறுவதால் 'கோவை' எனப் பெயர் பெற்றது. [7]

## வச்சணந்திமாலை

''ஆய்ந்த கலித்துறை தான் நானூறகப் பொருள் மேல் வாய்ந்த நற் கோவையா மற்றுரைப்பின்'' என்று 'வச்சணந்திமாலை' கட்டளைக் கலித்துறை நானூறு அகப்பொருள்மேல் வருவன கோவை என்று விளக்கம் தருகிறது வச்சணந்திமாலை. [8]

'கோவை என்பது காதலர் இருவரின் காதல் உணர்ச்சிகளையும், நிகழ்ச்சிகளையும் ஒரு வரலாறு போல் படிப்படியாகக் காட்டி ஒரே வகையான செய்யுள்களால் தொடர்ந்து பாடி அமைக்கும் நூல் ஆகும்.' 'காதலர் ஒருவரை ஒருவர் காண்பது முதல் திருமணத்திற்குப் பின் நடத்தும் வாழ்க்கை நிலைகள் வரையில் குழந்தை பெற்று வளர்த்தல், ஊடல் முதலியன உட்பட நானூறு துறைகளையும் ஒரு வாழ்க்கை வரலாறு போல் தொடர்ந்து காட்டுவது கோவை'.

''அந்தக் காதலர் சங்க இலக்கியத்தில் உள்ளவாறு கற்பனைக் காதலர்களே. காதலர் கண்ட இடம், பழகிய வேலை முதலியவற்றைச் சொல்லும் போதும், உவமைகளை அமைக்கும் போதும், ஒரு அரசனையோ, வள்ளலையோ, தெய்வத்தையோ புகழ்ந்து கூறுவது உண்டு. அந்த நானூறு பாட்டுகளுள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு காரணம் பற்றி அந்தத் தலைவனுடைய மலை, நாடு, ஆறு, பண்பு, செயல்கள் முதலியவற்றுள் ஏதேனும் ஒன்று புகழப்படும். அவ்வாறு அமையும் நூல் வகையே கோவை'' என்பார் டாக்டர் மு. வரதராசன். [9]

---

7 மது. ச. விமலானந்தம், தமிழ் இலக்கிய வரலாறு, தஞ்சாவூர், 1967, பக். 215.

8 வச்சணந்தி தேவ முனிவர் எழுதிய, வச்சணந்திமாலை என்னும் வெண்பாப் பாட்டியலும், வரையறுத்த பாட்டியலும், கொ. இராமலிங்கத் தம்பிரான் உரை, சென்னை, 1969, பக். 35.

9 தமிழ் இலக்கிய வரலாறு, புதுதில்லி, 1980, பக். 140.

## 'யாவையும்பாடிக் கோவைபாடு'

கோவை பாடுவது அவ்வளவு எளிதன்று. ஏனை இலக்கியங்கள் பாடிப் புலமைத்தழும்பேறிய பெரும் புலவர்க்கே இயன்ற ஒன்று. இது கருதியே 'யாவையும் பாடிக் கோவை பாடு' எனும் வழக்குளது. இறைவனுக்கு உகந்த ஒன்றாக இவ் இலக்கிய வகை உள்ளது; 'பாவை பாடிய வாயால் ஒரு கோவை பாடுக' என்று இறைவனே வேண்டினார் என்று தமிழ் இலக்கிய வரலாற்றில் காண முடிகிறது.

''தமிழிலக்கணத்துள் ஒரு கூறாகிய அகப்பொருள் இலக்கணத்துக்குரிய அனைத்துத் துறைகளையும் நிரல்படி அமைத்து கோத்துக் கற்பனைச் செறிவுடன் பாடப் பெறும் ஒருவகை அகப்பொருள் சிற்றிலக்கியமான கோவையை A kind of love - poem என்று குறிப்பிடலாம்''.

## பாண்டிக்கோவை

'கோவைச் சிற்றிலக்கியத்தில் காலத்தால் முந்தியது நின்றசீர் நெடுமாறன் என்னும் பாண்டியன் காலத்தில் வாழ்ந்த அறிஞர் பெருமான் இயற்றிய பாண்டிக் கோவை என்னும் பெயரிய கோவை இலக்கியமேயாகும். ஆசிரியர் பெயர் தெரியாத நிலையில் 350 பாடல்கள் மட்டுமே நமக்கு கிடைத்துள்ளன.

இறையனாரகப் பொருளுரையில் மேற்கோளாகக் காட்டப்படும் 'பாண்டிக் கோவை' பாண்டிய மன்னனது நெல்வேலி வெற்றி குறித்து பெரிதாகப் பாராட்டிப் பாடுகின்றது. [10] இது கி.பி. ஏழாம் நூற்றாண்டில் தோன்றியது. [11]

வையாபுரிப் பிள்ளை பதிப்பித்த களவியற் காரிகை உரையே முதன் முதலாக இந்நூற் பெயரை ஐயத்துக்கிடமின்றிக் குறிப்பிட்டது. களவியல், களவியற் காரிகை இரண்டிலும் கிடைத்த இந்நூற்பாடல்கள் 349. பின்னர் இளம்பூரணர் உரையில் ஒரு பாடல் கிடைத்தது. இவை வே. துரைசாமி ஐயரால் தொகுத்து விளக்கத்துடன் 1957 இல் அச்சிடப் பெற்றன. [12]

## மாணிக்கவாசகர்

திருவாதவூரில் பிறந்ததால், 'திருவாதவூரர்' என்று அழைக்கப் பெற்றவர் மணிவாசகர்; ஆமாத்தியர் குலத்து அந்தணர். எட்டாந் திருமுறையான திருவாசகம் பாடியவர். இவர் பாடிய திருக்கோவையார் சிறப்பாகப் போற்றப்படுகிறது.

---

10 மு. கோவிந்தசாமி, இலக்கியத் தோற்றம், சென்னை, 1960, பக். 143.

11 மு.சு. அருள்சாமி, தமிழ் இலக்கிய வரலாறு, சென்னை, 1970, பக். 206.

12 மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, பதினொராம் நூற்றாண்டு, திருச்சிற்றம்பலம், 1971, பக். 163.

## திருக்கோவையார்

தேவாரப் பெரியோரும், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் போன்றாரும் அகப்பொருள் துறை வழிநின்று பேரின்பக் காதல் பாடினர். ஆண்டாள் கண்ணனைக் காதலனாகவே கொண்டு பாடினாள். தேசியகவி சுப்பிரமணிய பாரதியும் அவ்வாறே பாடினார்.

சிவபெருமானைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு அகப்பொருள் துறைகள் அமையப் பாடப்பெற்ற சமயக் கோவை நூல் 'திருக்கோவையார்' ஆகும். இது 'இராசாக்கோவை' என்றும் பாராட்டி அழைக்கப்படும்.

'மண்ணுலக மன்னவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்ட பாண்டிக் கோவை முதலிய கோவை நூல்களைப் போலாது திருச்சிற்றம்பல முடையானைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டமை இந்நூற்குத் தனிச் சிறப்புத் தருவதாகும்' என்பர் வித்துவான் செ. வேங்கடராமச் செட்டியார். [13]

''திருக்கோவையாரின் பேரின்பக் கருத்துஞ் சிற்றின்பக் கருத்தும் அறியற்பாலன. முன்னையது சிவாநுபவம் உடையார்க்கே முற்றிலும் விளங்கு மென்றும், பின்னையதனையே பிறர் ஆயக்கடவரென்றம், அந்நூற்கு உரை செய்த பேராசிரியர் மொழிந்தனர்'' என்பர் கா. சுப்பிரமணியபிள்ளை. [14]

திருக்கோவையாரின் பாடல்கள் அனைத்தும் கட்டளைக் கலித்துறையில் அமைந்து அதுவே பின்னர் எழுந்த கோவை நூற்களுக்குரிய யாப்பு இலக்கண மரபாக நிலைத்துள்ளது எனலாம். [15]

களவியற் காரிகையில் எடுத்தாளப்பட்டுள்ள திருக்கோவையாருக்கு 'திருச்சிற்றம்பலக்கோவை' என்று இடப்பெயர் சுட்டியும் ஒரு பெயர் உண்டு. திருத்தணிகை விசாகப் பெருமாளையரும், பெருமழைப் புலவர்பொ. வே. சோமசுந்தரனாரும் திருக்கோவையாரின் 400 பாடல்களுக்கு விளக்கவுரை தந்துள்ளனர். [16]

மாணிக்கவாசகசுவாமிகள் அருளிச்செய்த 'திருச்சிற்றம்பலக் கோவையாருண்மை,' யாழ்ப்பாணத்து வண்ணைநகர்ச் சுவாமிநாத பண்டிதரால் 163பக்கங்களில் வெளியிடப்பட்டது.

---

13 ந. சஞ்சீவி, பதிப்பாசிரியர், தெய்வத்தமிழ், சென்னை, 1975, பக். 157.

14 இலக்கிய வரலாறு, இரண்டாம் பாகம், சென்னை, 1956, பக். 276.

15 ச.வே. சுப்பிரமணியன், தா.வே. வீராசாமி பதிப்பு
தமிழ் இலக்கியக் கொள்கை - ஓர் அறிமுகம், திருவாசகம், திருக்கோவையார் - ஏ.என். பெருமாள். உலகத் தமிழாராய்ச்சிநிறுவனம், சென்னை, 1975, பக். 211.

16 சைவ சமயாசாரியாராகிய மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச் செய்த திருக்கோவையார், ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக மூர்த்திகள் ஆஞ்ஞையின் படி திருமயிலை செந்தில்வேலு முதலியாரால் சென்னை கலாரத்நாகர அச்சுக் கூடத்திற் பதிப்பிக்கப்பட்ட நூல்; மற்றும் திருக்கோவையார் பழைய உரையும் புதிய விளக்கமும் 1970, சென்னையிலிருந்து வெளிவந்த நூல்.

## பல்சந்தமாலை

களவியற்காரிகை உரைகாரர் மேற்கோள்களை எடுத்தாளும்போது எட்டு இடங்களில் முதலில் திருக்கோவையார், இரண்டாவது பாண்டிக்கோவை, மூன்றாவது பல்சந்தமாலை என்று அமைத்து இருப்பதால், பல்சந்தமாலையும் கோவையாகலாம் என்ற எண்ணம் வலியுறுகிறது என்பர் மு. அருணாசலம். இதனை அறிஞர் ம.முகம்மது உவைஸ், பீ.மு.அஜ்மல்கான் ஆகியோரும் வலியுறுத்துகின்றனர்.

## தெய்வத்தின் மேல் (தல சம்பந்தமாக)

தெய்வத்தினைப் பாடும் மரபினை ஒட்டி தல சம்பந்தமாக மதுரைக் கோவை, திருவாரூர்க் கோவை, வெங்கைக் கோவை, திருக்கழுக்குன்றக் கோவை, திருப்பதிகக் கோவை, பழனிக் கோவை, மயூரகிரிக் கோவை, சீகாழிக் கோவை முதலியவாகப் பல நூல்கள் பின்னர் பாடப்பட்டன.

## அம்பிகாபதிக் கோவை

564 செய்யுட்களைத் தன்னகத்தே கொண்டு, சொல்லணி, பொருளணி முதலிய அணிகள் யாவும் ஒருங்கே அமைந்து கற்றார் நெஞ்சம் கனிவு கொள்ளுமாறு விளங்கும் நூல் 'அம்பிகாபதிக் கோவை' ஆகும். கவிச்சக்கரவர்த்தி கம்பரின் மகன் அம்பிகாபதி, 'சௌந்தரியலகரி'யைத் தமிழில் பாடிய வீரைக் கவிராச பண்டிதர் மகன் வீரை அம்பிகாபதி, தண்டியலங்கார நூல் செய்த தண்டியாசிரியர் தந்தையார் அம்பிகாபதி ஆகிய இம்மூவரில் ஒருவரோ, அல்லது இவரல்லாத மற்றொருவரோ பாடியது அம்பிகாபதிக் கோவை ஆகும். [17]

செய்யுள் மிகுதியாக உள்ளதும், சில புதிய துறைகளைக் கொண்டதுமான அம்பிகாபதிக் கோவை நூல் கி.பி. 1899 இல் திருநெல்வேலி ஆரியப் பிரகாசினி அச்சுக் கூடத்தில் ஹரிஹரஐயரால் முதன் முதலில் பதிப்பிக்கப் பட்டது. [18] பின்னர் சென்னையிலிருந்து 352 பக்கங்களைக் கொண்ட நூலாகவும் வெளி வந்துள்ளது. [19]

## அசதிக் கோவை

12 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்மூதாட்டி ஔவையாரால்

---

17 செ. ரெ. இராமசாமிபிள்ளை, அம்பிகாபதி கோவை ஆராய்ச்சி உரையில் . . .

18 அ.ச. ஞானசம்பந்தன் பொதுப்பதிப்பாசிரியர், தமிழ்நூல் விவரஅட்டவணை, 1867 - 1900, முதல் தொகுதி, ஐந்தாம் பகுதி, சென்னை, 1964, பக். 590.

19 வித்துவான் மீ. பொன் இராமநாதன் செட்டியார் எழுதிய உரையுடன் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தால் 1952 இல் வெளியான நூல்.

பாடப்பெற்றது 'அசதிக் கோவை' ஆகும். அசதிக்கோவை நூல் இப்போது கிடைக்கப் பெறவில்லை. ஆனால் இதன் சில பாட்டுக்கள் மட்டும் கிடைக்கின்றன.

### ஒட்டக்கூத்தர்

சீகாழியோ, மணக்குடியோ, கூத்தனூரோ, மலரியோ எதுவாயினும் சோழமண்டலத்தில் உள்ள ஒரு ஊரில் பிறந்தவர் ஒட்டக்கூத்தர்.[20] ஒட்டம்-பந்தயம். ஒட்டம் வைத்துப் பாடிப்புகழ்பெற்றவராதலின் ஒட்டக்கூத்தர் என இவர் பெயர் வழங்கியது .(தி. சங்குப் புலவர்,விக்கிரம சோழனுலா, 1960, பக்.20)

### குலோத்துங்கசோழன் கோவை

தந்துவாயர் என்னும் செங்குந்தர்கள் (கைக்கோளர்) மரபிற் பிரபல வித்துவானாகப் பிறந்தவரான ஒட்டக்கூத்தர்[21] தம்மை ஆதரித்த குலோத்ததுங்க சோழன் மீது அகப்பொருட் துறைகளால் அமைந்த கோவை யொன்றும், உலாவும், அந்தாதியும் செய்தனர். இவரது 'குலோத்துங்க சோழன் கோவை' என்பது சொல் நயமும், பொருள் நயமுங் கனிந்து கற்பனைக் களஞ்சியமாக ஒளிர்கிறது என்பர் வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியார்.[22] இக்கோவை 510 செய்யுட்களை உடையது.

### காங்கேயன் நாலாயிரக்கோவை

ஒட்டக்கூத்தர் பாடிய இன்னொரு கோவை 'காங்கேயன் நாலாயிரக் கோவை ஆகும். நாலாயிரக் கோவை என்பது நாலாயிரஞ் செய்யுட்களை உடையதென்று அப்பெயரால் ஊகிக்கப்படுகிறது. துறைக்குப் பத்துப்பத்தாக நானூறு துறைக்கும் நாலாயிரம் செய்யுள் பாடியிருத்தல் கூடும்' என்பர் உ.வே. சாமிநாதையர்.

### தஞ்சைவாணன் கோவை

வையைக் கரையில் திருப்புவனம் - மானாமதுரைக்கு இடைப்பட்ட நிலப்பகுதி மாறை நாடாகும். மாறைநாட்டுத் தஞ்சையில் தஞ்சாக்கூரில் வாழ்ந்து கொண்டிருந்த வாணன் என்பவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டது தஞ்சைவாணன் கோவை ஆகும். இது தொண்டை மண்டலத்து, செங்காட்டுக் கோட்டத்தைச் சேர்ந்த பொய்யா மொழிப் புலவரால் பாடப்பட்டது.[23]

திருச்சிற்றம்பலக் கோவையார்க்கு அடுத்த நிலையில் வைத்துப் பாராட்டப்படும் பெருமை வாய்ந்த தஞ்சைவாணன் கோவை சொல் வளமும்,

---

20 ச.கு. கணபதி ஐயர், ஒட்டக்கூத்தர், சென்னை, 1957, பக். 14.

21 அஷ்டாவதானம் வீராசாமி செட்டியாரவர்கள் அச்சிட்ட, விநோதரசமஞ்சரி, சென்னை, 1927, பக். 220.

22 பரிதிமாற்கலைஞர், தமிழ் மொழியின் வரலாறு, மதுரை, 1927, பக். 94.

23 தி.வை. சதாசிவபண்டாரத்தார், தமிழ் இலக்கிய வரலாறு, 13, 14, 15 ஆம் நூற்றாண்டுகள், அண்ணாமலைப் பல்கலைக் கழகம் 1977, பக். 48.

பொருள் வளமும் நிறைந்தது. நாற்கவிராச நம்பியின் அகப்பொருள் விளக்கத்திற்குச் சிறந்ததோர் இலக்கியமாக நிலவும் சிறப்புடையது. 425 செய்யுட்களைக் கொண்டது. திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினரால் வெளியிடப்பட்டது.

குன்றத்தூர் அட்டாவதானம் சொக்கப்ப நாவலர் எழுதிய பேருரையும், களவியல் நிகழ்ச்சிகளுக்கு நாட்கள் வரையறை செய்து அவர் கூறியிருப்பதும் குறிப்பிடத்தக்கதொன்றாகும்.

425 செய்யுட்களைக் கொண்ட இந்த நூல் சண்முகம்பிள்ளை, ப.மு. செல்வராச முதலியாரால் அமெரிக்க அச்சுக்கூடத்தில் கி.பி. 1893 இல் மறுபதிப்பு செய்யப்பட்டது. [24] பின்னர் திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினராலும் இந்த நூல் பதிப்பிக்கப்பட்டது.

## திருப்பதிக் கோவை

- மாறனகப் பொருளிற் களவியல், வரைவியல், கற்பியற் சூத்திரங்களுக்கு இலக்கியமாகத் திருமால் உகந்தருளிய நிலங்களின் விஷயமாய்ச் சற்றேறத்தாழ 455 துறைகள் அமைந்த 527 கட்டளைக் கலித்துறைகளாற் பல்வகை நயமும், ஒருங்கே அமைய இயற்றப்பட்ட கோவை 'திருப்பதிக் கோவை' ஆகும். இதனை இயற்றியவர் விவரம் கிடைக்கவில்லை. ; என்றாலும், திருக்குருகைப் பெருமான் கவிராயரால் இயற்றப்பட்டிருக்கக் கூடுமென்று, செந்தமிழ் உதவிப் பத்திராசிரியர் கி. இராமநுஜையங்கார் தெரிவித்துள்ளார். [25] இவர் இயற்பெயர் சடையன் என்றும் இவர் வேளாளகுலத்தைச் சார்ந்தவர் என்றும் கூறுவர் மு.அருணாசலம்.(திருக்குருகைப் பெருமாள் கவிராயர், 1975, பக் 4.)

## திருப்பதிகக் கோவை

சோழ நாட்டில் திருப்புலியூரில் சைவ வேதியர் குலத்தில் தோன்றிய உமாபதி சிவாசாரியாரால் பாடப்பட்டது திருப்பதிகக் கோவை ஆகும். இது 14 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்பர் முனைவர் ந.வீ. செயராமன்.

## கப்பற் கோவை

பாண்டி நாட்டுக் கப்பலூரைத் தலைநகராகக் கொண்டு அதனைச்

---

24 தமிழ் நூல் விவர அட்டவணை முதல் தொகுதி, இரண்டாம் பகுதி 1867 - 1900, வெ. கண்ணையன் பொதுப்பதிப்பாசிரியர், மு. சண்முகம் பதிப்பாசிரியர், சென்னை, 1962, பக். 636.

25 மாறகைப் பொருளும், திருப்பதிக் கோவையும் செந்தமிழ் பிரசுரம் 55. மதுரைத் தமிழ்ச்சங்க முத்திரா சாலை, மதுரை, 1932, முகவுரை பக். vi.

சூழ்ந்த நிலப்பரப்பை ஆட்சி புரிந்தவனும், பாண்டியர்க்குப் படைத்தலைவனாக விளங்கியவனுமாகிய கருமாணிக்கன் என்ற தலைவன் மேல் பாடப்பட்டது 'கப்பற் கோவை'யாகும். 14 ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் பாடப்பட்ட இக்கோவை 400 பாடல்கள் கொண்டதாகும். இதன் பிரதி ஒன்று எரிவாய்ப்பட்டு அழிந்து போயிற்று என்று மு. ராகவையங்கார் 'செந்தமிழ்' ஆறாந்தொகுதியில் எட்டாம் பகுதியில் எழுதிய ஒரு கட்டுரையில் தெரிவித்துள்ளார். பின்னர் உ.வே. சாமிநாத ஐயர் நூல் நிலையத்தில் இதன் ஏட்டுப் பிரதிகள் கிடைத்தன. [26] அரசாங்க உதவியோடு, 1958 ஆம் ஆண்டு, உ.வே.சா நூல் நிலைய வெளியீடு எண் 17 ஆக, T. சந்திரசேகரன் பதிப்பாசிரியராகக் கொண்டு இந்நூல் வெளிவந்தது.

திருவாரூர் ஸ்ரீவைத்திய நாத தேசிகர் உரையுடன் இயற்றப் பெற்றதும் குட்டித் தொல்காப்பியம் என்னும் சிறப்புப் பெயர் வாய்ந்ததுமான 'இலக்கண விளக்கம்' நூலில் இக்கோவையிலிருந்து எட்டுப்பாடல்கள் மேற்கோளாக எடுத்தாளப் பெற்றிருக்கும் சிறப்புப் பெற்ற இக்கோவை 220 பக்கங்களுடன் வெளிவந்துள்ளது. [27]

## சதமணிக் கோவை

அருள்நந்தி சிவத்தின் மாணாக்கரும், உமாபதி சிவத்தின் குருவுமான கடந்தை மறைஞான சம்பந்தர் பாடியது சதமணிக் கோவை. (மு.அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, 16ஆம் நூற்றாண்டு, 1975, பக்360)

## அண்ணாமலைக் கோவை

கமலை ஞானப்பிரகாசரால் பாடப்பெற்றது அண்ணாமலைக் கோவை ஆகும்.

## நெல்லை வருக்கக் கோவை

வேம்பத்தூர் சங்கப்புலவரில் ஒருவரான வீரை அம்பிகாபதிப் பெருமாளையரால் பாடப்பெற்றது நெல்லை வருக்கக் கோவை ஆகும்.

## திருவாரூர்க் கோவை

கி.பி. 1572 இல் திருவண்ணாமலைக்கு 25 மைல் தூரத்திலுள்ள (40 கி.மீ.) தாழைநகரிற் பிறந்தவ எல்லப்பபூபதி என்ற எல்லப்ப நயினார் இயற்றிய திருவாரூர்க் கோவை 496 செய்யுட்களை உடையது. [28]

---

26 மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, 14 ஆம் நூற்றாண்டு, பக். 324.

27 கப்பற் கோவை, L. ஸ்ரீநிவாஸன் முன்னுரை, சென்னை 1958, பக். xxi

28 ந.சி. கந்தையாபிள்ளை, தமிழ்ப்புலவர் அகராதி, புலவர் அகரவரிசை, சென்னை, 1960, பக். 73.

### சந்திரவாணன் கோவை

*காஞ்சிபுரத்துக்கு அருகிலுள்ள பூதூரில் கி.பி. 1654 இல் வடுக நாத முதலியாரின் புதல்வராகப் பிறந்தவர் அந்தகக்கவி வீரராகவ முதலியார். இலங்கை அரசன் பரராசசேகரனிடம் பரிசில் பெற்று வந்தவர். இவர் இயற்றிய நூல் சந்திரவாணன் கோவை ஆகும்.*

### ஒரு துறைக் கோவை

*அகத்திணைக் கோவைகளில் கிளவித் தலைவனைத் தவிர்த்துப் பாட்டுடைத் தலைவன் ஒருவனைப் பற்றித் தொடர்ந்து ஒவ்வொரு பாடலிலும் அவன் பெயர், நாடு, கொடைப்பண்பு, வீரம் முதலியவற்றை அடைமொழி யாகவோ உவமையாகவோ சார்த்திப் பாடுவது ஒரு மரபாயிற்று. பல்வேறு துறைகளைப் பாடாமல் ஒரே துறையைப் பற்றி நானூறு பாடல் பாடித் திறமையை வெளிப்படுத்தும் முறை உருவாயிற்று.*

### இரகுநாத சேதுபதி ஒரு துறைக் கோவை

*பாண்டி நாட்டிலுள்ள பொன்னங்கால் என்னுமிடத்தில் பிறந்தவர் அமிர்தகவிராயர் (கி.பி. 1637 - 1672). இராமநாதபுரத்தை ஆண்ட தளவாய் இரகுநாத சேதுபதியால் (கி.பி..1649 - 1685) ஆதரிக்கப்பட்டவர். தம்மை ஆதரித்த அரசனின் புகழை நிலைநாட்ட 'ஒரு துறைக் கோவை' நூலைப் பாடினார். ஒரு துறைக் கோவையின் முதல் நூலான இதனை கி.பி. 1889 இல் சென்னை கேசவலு நாயுடு ஸ்ரீ மட்டுவார் குழலாம்பாள் அச்சுக்கூடத்தில் பதிப்பித்தார். ''நாணிக் கண் புதைத்தல்'' என்னும் ஒருதுறைப் பொருள் பற்றி அமைந்தது இந்த நூலாகும்.*

### திருச்செந்தூர்க் கோவை

*இராமநாதபுரம் 'கடாரம்' ஊரைச்சேர்ந்த சைவப் புலவர் சர்க்கரைப் புலவர் (1645 - 1670). இவர் பாடியது திருச்செந்தூர்க் கோவையாகும்.*

### தாமோதரன் கேள்விக் கோவை

*சேதுபதியின் அமைச்சர் தாமோதரனால் சிறுகம்பையூர், கொந்தன் குளம், கூத்தக்குடி ஆகிய இடங்களில் மானியம் அளிக்கப்பட்ட சர்க்கரைப் புலவர் அமைச்சரின் வேண்டுகோளின் படி 'வேதாந்த சூடாமணி சித்தாந்த உரை' செய்ததோடு நில்லாமல், அமைச்சர் தாமோதரன் மீது 'கேள்விக் கோவை'யும் பாடியவர். இவரை பொன்னெட்டிமாலை சர்க்கரைப் புலவர் என்றும் அழைப்பார்கள்.*

## திருவெங்கைக் கோவை

17 ஆம் நூற்றாண்டில் காஞ்சிபுரத்தில் வாழ்ந்த குமாரசுவாமிப் பண்டாரம் என்பவரின் புதல்வராக வீர சைவ மதத்தில் பிறந்தவர் சிவப்பிரகாச சுவாமிகள். விரும்பிய வண்ணங் கவிபாட வல்லவரான இவர் தருமபுரம் ஆதீனத்திலிருந்த வெள்ளியம்பலத் தம்பிரானிடம் இலக்கணங்கற்றவர்; துறைமங்கலத்தில் வாழ்ந்தவர். வீரமாமுனிவருக்கு எதிராக 'ஏசுமத நிராகரணம்' என்னும் நூலை எழுதிய இவரால் பாடப்பெற்றது வேங்கைக் கோவை (திருவெங்கைக் கோவை) ஆகும்.

## பாம்பலங்காரர் வருக்கக் கோவை

தொண்டை நாட்டில் தென் களத்தூரில் செங்குந்தர் குடியிற் பிறந்தவர் படிக்காசுப் புலவர் (1686 - 1723). வைத்திய நாத தேசிகரிடம் இலக்கணங் கற்றவர். இவர், இரகுநாத சேதுபதி, வள்ளல் சீதக்காதி முதலியோரைப் பாடிய பல பாடல்கள் உண்டு. தொண்டை மண்டல சதகம் பாடிய இவர் 'பாம்பலங்காரர் வருக்கக் கோவை' என்ற நூலையும் இயற்றியவர்.

## சீகாழிக் கோவை

சோழமண்டலத்தில் தில்லையாடியில் கார்காத்த வேளாளர் குலத்தில், நல்ல தம்பிப் பிள்ளை - வள்ளியம்மையின் நான்காம் புதல்வராகப் பிறந்தவர் அருணாசலக் கவிராயர் (1712 - 1779). (எஸ். எஸ். அருணகிரிநாதர், தமிழ்ப் பெருமக்கள், பக்.23) தருமபுர ஆதீனத்து அம்பலவாணத் தம்பிரானிடம் இலக்கண இலக்கியங்கற்று சீகாழியில் வந்து தங்கி, அத்தலத்தில் இருந்து சீகாழிக் கோவை பாடியவர். தில்லையாடி மணலி முத்துக் கிருட்டிண முதலியாரால் ஆதரிக்கப் பெற்றவர்.

## குற்றாலக் கோவை

திருநெல்வேலி மாவட்டம் திருச்சீவரமங்கை (நாங்குனேரி) வட்டம் விசய நாராயணம் என்னும் ஊரில் பரம்பரைச் சைவ வேளாண் குடியில் தோன்றியவர் மகாகவி திரிகூட ராசப்ப கவிராயர்.[29] இளமையிலேயே திருக் குற்றாலத்திற்குக் கிழக்கே உள்ள மேலகரத்தில் வாழ்ந்து வந்த இவர் உலகப் பிரசித்தி பெற்ற குற்றலாக் குறவஞ்சி யினை இயற்றியவர். இவர் பாடிய கோவை நூல் குற்றாலக் கோவை ஆகும்.

## சேற்றூர்க் கோவை

18 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சிவஞான முனிவரின் மாணாக்கரில் ஒருவரான சங்கரமூர்த்தி கவிராயர் இராசபாளையத்தில் கார்காத்த வேளாள மரபிற் பிறந்தவர். கன்னிவாடி ஜமீன்தார் மீது கோவை பாடி யானைக் கன்றும் ஊரும் பெற்றவர். இவர் பாடியது 'சேற்றூர்க் கோவை' ஆகும்.

29 க. வச்சிரவேல் முதலியார் எழுதிய முகவுரை, திருக்குற்றாலத் தலபுராணம், திருவாவடுதுறை ஆதீனம், 1973, பக். 11.

## மயூரகிரிக் கோவை

பாண்டிய நாட்டில் திருப்புன வாயிலுக்கு அருகிலுள்ள சிறுகம்பை என்ற ஊரில் பிறந்த சாந்துப்புலவர் 18 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். இவர் பாடியது 'மயூரகிரிக் கோவை' ஆகும்.

## பழமலைக் கோவை

18 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த வீர சைவ மதத்தினர் சாமிநாத தேசிகர். இவர் இயற்றிய நூல் 'பழமலைக் கோவை'. 1935 இல் உ.வே. சாமிநாதையரவர்கள் இதனை மறுபதிப்புச் செய்துள்ளார்.

## கரவை வேலன் கோவை

யாழ்ப்பாணத்து நல்லூரில் வில்லவராய முதலியாரின் மகனாகப் பிறந்தவர் சின்னத் தம்பிப் புலவர் (1716 - 1780)

கரவை என்பது கரவெட்டியென்ற ஊராகும். 'கரவை வேலன் கோவை' இவர் பாடிய நூலாகும்.

## திருக்கழுக்குன்றக் கோவை

18 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சிவஞான முனிவரின் மாணாக்கரில் ஒருவர் சோமசுந்தரம் பிள்ளை. இவர் இயற்றிய நூல் திருக்கழுக்குன்றக் கோவை.

## விஞ்சைக் கோவை

18 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் தொண்டை நாட்டில் வாழ்ந்தவர் பலபட்டடைச் சொக்கநாதப் புலவர். சொக்கர் மீதும், மீனாட்சியம்மை மீதும், பல பாடல்கள் புனைந்தவர். இவர் இயற்றிய நூல் 'விஞ்சைக் கோவை' ஆகும்.

## ஒருதுறைக் கோவைகள்

'வண்டோச்சி மருங்கணைதல்' என்னும் துறை பற்றிய சசிவர்ணன் கோவையையும், 'வெறிவிலக்கு' என்னும் துறையில் கீழ்வேளூர்க் குருசாமி தேசிகர் பாடிய தியாகேசர் கோவையையும் ஒரு துறைக்கோவை இலக்கியங் களாக உ.வே. சாமிநாதையர் எடுத்துக் காட்டியுள்ளார்.

செண்டத்தூர் ஐயாத் துரை முதலியார் மீது துரைச்சாமிப் பாவலர் பாடிய ஒரு துறைக் கோவை 108 பாடல்கள் உடையது.

சோடசாவதானம் பொன்னுங்கூடக் கவிராயர் சாப்டூர் எனும் மருதூர் ஜமீந்தார் நாயகசாமி நாயக்கர் மீது ஒருதுறைக்கோவை பாடியுள்ளார்.

கல்போது பிச்சுவையரும் ஒருதுறைக் கோவை பாடல்களை இயற்றியுள்ளார்.

வைத்தியலிங்கம் என்பவரும் 'ஒருதுறைக்கோவை' பாடியுள்ளார்.

### இராசராச சேதுபதி ஒருதுறைக்கோவை

சேது சமத்தான மகா வித்துவான் ரா. இராகவையங்கார் முத்துராமலிங்க சேதுபதி என்ற இராசராச சேதுபதி மீது 400 பாடல்களைக் கொண்ட ஒருதுறைக் கோவை பாடியுள்ளார். [30]

### வருக்கக் கோவை

அகர முதலான தமிழ் எழுத்துக்களின் வரிசைப்படி தொடக்கம் அமைந்ததும், ஒவ்வொரு எழுத்திற்கும் ஒரு பாடல் எனப்படும் வருக்கக் கோவை என்பதொரு கிளையும் இதிற் பிரிந்து வளர்ந்தது. வடகரை சமஸ்தானம் முத்துசாமித் துரையவர்கள் பேரில் பாடப்பெற்ற வருக்கக் கோவையும், செம்புலிப் பெரிய சுவாமித்துரை அவர்கள் பேரில் சிவகுருநாதக் கவிராயர்கள் பாடிய வருக்கக் கோவையும் இதற்கு சான்றாக அமைந்துள்ளது. [31]

### திருவாவடுதுறைக் கோவை

திருவாவடுதுறையிற் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் ஸ்ரீ மாசிலாமணி ஈசர் மீது திருவாவடுதுறையாதீனத்துச் சுப்பிரமணி முனிவர் இயற்றியது 'திருவாவடுதுறைக் கோவை' ஆகும். இது துறைசைக் கோவை எனவும் வழங்கப்படும். (துறசை - திருவாவடுதுறையென்னும் பெயரின் மரூஉ)

சிவஞானமுனிவரின் மாணவரான இவர் 18 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியைச் சேர்ந்தவர். தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவரெனவும் அழைக்கப்பட்டவர். 1903 இல் பதிப்பிக்கப் பெற்ற இந்த நூலை, உ.வே. சாமிநாதையர் 1926 இல் திரும்பவும் அரும்பதவுரை முதலியவற்றுடன் பதிப்பித்தார். 457 பாடல்களைக் கொண்ட நூல் இது. [32]

### கலைசைக் கோவை

சிதம்பரத்தைச் சார்ந்த காட்டு மன்னார் கோயிலில், கார் காத்த வேளாளர் மரபில் பிறந்த தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர் இயற்றிய இன்னொரு கோவை நூல் 'கலைசைக் கோவை' ஆகும்.

சென்னைக்குச் சமீபமாயுள்ள ஆவடி அருகே உள்ளே தொட்டிக்கலையென்னும் தலத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீசிதம்பரேசரைப் பாட்டுடைத்

---

30 ரா. இராகவையங்கார், இராசராச சேதுபதி ஒருதுறைக்கோவை, சிதம்பரம், 1984.

31 திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள வடகரையாதிக்கத்தின் சரித்திரம், வாலம் II, பலவித்துவான்களியற்றிய பதினான்கு பிரபந்தங்கள், மதுரை, 1916, பக். 188 - 208, 315 - 331.

32 தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர் இயற்றிய திருவாவடுதுறைக் கோவை, உ.வே.சா. பதிப்பு, சென்னை, 1926. (128 பக்கங்களைக் கொண்ட நூல்.)

தலைவராக வைத்து பாடப்பட்டது இக்கோவை. தொட்டிக்கலை என்பதன் மருஉ கலைசையென்பதால் இது 'கலைசைக் கோவை' என்று அழைக்கப்பட்டது. 457 பாடல்களைக் கொண்ட இந்தக் கோவை நூல் உ.வே. சாமிநாதையரவர்களால் பதிப்பிக்கப்பட்டது. [33]

**அருளம்பலக் கோவை**

யாழ்ப்பாணத்தைச் சார்ந்த வல்லுவெட்டி என்ற ஊரில் கதிர்காம பூபதி முதலியாரின் மகனாகப் பிறந்தவர் குமாரசுவாமி முதலியார். 19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த இவர் பாடியது 'அருளம்பலக் கோவை' ஆகும்.

**அலங்காரக் கோவை**

இராமநாதபுரம் சிற்றரசில் தலைமை பெற்று கி.பி. 1890 வரை வாழ்ந்த பொன்னுச்சாமி தேவர் யமகம் பாடுவதில் வல்லவர். இராசமன்னார் கோவில் தலபுராணம் பாடிய இவர் 'அலங்காரக் கோவை'யையும் இயற்றியுள்ளார்.

**சொக்கலிங்க நாயகர் வருக்கக் கோவை**

அழகிய சிற்றம்பலக் கவிராயர் மரபில் வந்த மங்கைபாகக் கவிராயர் சொக்கலிங்க நாயக்கர் மீது வருக்கக் கோவை என்னும் நூல் பாடியுள்ளார்.

**குளத்தூர்க் கோவை**

6 - 4 - 1815 இல் சிதம்பரம்பிள்ளை - அன்னத்தாச்சி புதல்வராகத் தோன்றியவர் மீனாட்சி சுந்தரம் பிள்ளை. 75 நூல்களுக்கு மேல் பாடிய இவரிடத்துக் கல்வி பயின்ற மாணவருள் ஒருவர் உ.வே. சாமிநாதையர் ஆவார்.

மாயூரம் முன்சீப் வேதநாயகம் பிள்ளை தமிழ், ஆங்கில மொழிகளில் சிறந்த தேர்ச்சி பெற்றவர். தருமபுர ஆதீனத் தலைவருக்கு அடங்காமல் விரோதமாக நீதிக்குப் புறம்பாக நடக்க ஆரம்பித்த மலைக்கோட்டை தாயுமானவர் கோயில் கட்டளைத் தம்பிரானின் வழக்கில், முன்சீப் வேதநாயகம் பிள்ளை நியாயத்தின் பக்கம் நின்றார். அதனை அறிந்த, மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர் மீது 438 செய்யுட்களைக் கொண்ட ஐந்திணைக் கோவை நூலான குளத்தூர்க் கோவையை 1853 இல் பாடினார். [34]

---

33 மதுரைத் தமிழச்சங்க முத்திராசாலையுடன் 1935 இல் செந்தமிழ்ப் பிரசுரம் வெளியிட்ட 132 பக்கங்களைக் கொண்ட நூல்.

34 உ.வே. சாமிநாதையர், ஸ்ரீமீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம், 1938, பக். 152. (இதன் மறுபதிப்பினை 1986 இல் தஞ்சாவூர் தமிழப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ளது).

### வியாசைக் கோவை

திருமயிலைத் திருக்குளத்தின் தென்கரையிலுள்ளதும், இப்பொழுது சித்திரச் சத்திரமென்று வழங்கப்பெறுவதுமாகிய சத்திரத்தைக் கட்டுவித்து அதற்குப் பலவகையான வருவாய்களையும் ஏற்படுத்தி புகழ்பெற்று விளங்கியவர் வியாசர் பாடி விநாயக முதலியார். அவர் மீது மீனாட்சி சுந்தரம் பிள்ளை பாடியது வியாசைக் கோவை ஆகும். இக்கோவையின் முதல் நூறு பாடல்களுக்குப் பின் மீதியுள்ள 300 பாடல்களையும் அவரது மாணவரும் கும்பகோணம் அரசினர் கல்லூரி ஆசிரியருமான சி. தியாகராச செட்டியார் (1826 - 1888) பாடியது என்று உ.வே. சாமிநாதையர் தெரிவித்துள்ளார்.[35]

### சீகாழிக் கோவை

பதினெட்டாம் நூற்றாண்டில் அருணாசலக் கவிராயர் இயற்றிய சீகாழிக் கோவை பற்றி முன்னரே தெரிவித்துள்ளோம். 19 ஆம் நூற்றாண்டில் திருவாவடு துறை ஆதீனத்து மகாவித்துவான் திரிசிரபுரம் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர் களால் பாடப்பட்டது சீகாழிக் கோவை ஆகும்.

ஸ்ரீமீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களின் பிரபந்தத்திரட்டு எனும் ஆயிரம் பக்கங்களை நெருங்குகிற அந்த நூலில் 271 வது பக்கத்தில் பாடல் எண் 1152 என்ற எண்ணில் துவங்கி, 354 பக்கத்தில் 1704 என்ற எண்ணில் நிறைவடையும் வண்ணம் சீகாழிக் கோவை நூல் வெளிவந்துள்ளது.

கி.பி. 1875 இல் மீனாட்சி சுந்தரம் பிள்ளை காலமானார். இரண்டு கோவைகளை முழுமையாகவும், ஒரு கோவையில் நூறு பாடல்களையும் பாடிய இவர் தமிழ் இலக்கிய உலகில் என்றும் நிலைத்து வாழ்பவராவார்.

### திருச்செந்தூர்க் கோவை

வண்ணச் சரபம் திருப்புகழ் சுவாமி, தண்டபாணி சுவாமி எனவும் அழைக்கப்படும் முருகதாச சுவாமிகள் (1840 - 1899) திருநெல்வேலியில் வேளாண்குடியிற் பிறந்தவர். பல நூற்களை இயற்றியுள்ள இவரால் பாடப் பெற்றது 'திருச்செந்தூர்க் கோவை' ஆகும்.

### மருங்காபுரிக் கோவை

பாண்டிய நாட்டில் கொடுங்குன்றம் என்ற ஊரில் பிறந்த வெறிமங்கை பாகக் கவிராயர் மருங்காபுரி சிற்றரசராற் போற்றப்பட்டவர். தம்மை ஆதரித்த மருங்காபுரி சிற்றரசர் மீது குறவஞ்சி, உலா முதலியன இயற்றியதோடு நில்லாமல் மருங்காபுரிக் கோவையும் பாடியுள்ளார்.

---

35 மேலது பக். 161.

### கோடீச்சுரக் கோவை

கொட்டையூர் சிவக்கொழுந்து பண்டாரம் என்றும் அழைக்கப்படும் கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர் கி.பி. 1889 இல் இயற்றியது கோடீச்சுரக் கோவை ஆகும்.

### பேரூர்க் கோவை

கொங்கு நாட்டின் 24 பிரிவுகளில் ஒன்றாகிய ஆறை நாட்டின் உட்பிரிவான பேரூரில் கோயில் கொண்டிருக்கும் பட்டீசப் பெருமான் மீது பாடப் பெற்றது 'திருப்பேரூர் பட்டீசர்க் கோவை' ஆகும்.

கோவைக்குத் தெற்கே 16 கி.மீ. தூரத்திலிருக்கிற ஓராட்டுக் குப்பைச் செட்டிப் பாளையத்தைச் சேர்ந்த முத்து நயினாத்தை முதலியார் என்பவர் பாடியது இந்த நூலாகும்.[36] இதில் 360 பாடல்கள் மட்டுமே கிடைத்துள்ளன. இந்த நூல் 55 பக்கங்களைக் கொண்டு அச்சாகியுள்ளது.

### தாண்டவராயப் பிள்ளை கோவை

சர்க்கரைப் புலவரால் பாடப்பட்டது. தாண்டவராயப் பிள்ளைக் கோவை என்பர் முனைவர் ந.வீ. செய ராமன்.[37]

### அலங்காரக் கோவை

திரிசிரபுரம் கோவிந்தசாமி பிள்ளையால் பாடப்பெற்றது அலங்காரக் கோவையாகும்.

### ஐந்திணைக் கோவை

கொட்டாம்பட்டியில் 1844 இல் பிறந்தவர் கருப்பையா பாவலர். இவர் பாடியது 'ஐந்திணைக் கோவை' ஆகும். ஐந்திணை நெறி யளாவுதலின் ஐந்திணைக் கோவை யெனவும் இவ்வகை நூல் பெயர் பெறும் என்பர் உ.வே.சாமிநாதையர்.

### சிராமலைக் கோவை

தட்சிணகைலாய மென்னும் சிறப்புடைய திருச்சிராப்பள்ளியிலுள்ள மலையிற் கோயில் கொண்டெழுந் தருளியுள்ள தாயான செல்வரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு பாடப் பெற்றது சிராமலைக் கோவை. இதனைப் பாடியவர் பெயர் அறியப் படவில்லை. இது சிரகிரிக் கோவை என்றும் வழங்கப்படும். இந்நூலின் ஏட்டுப்பிரதி திருநெல்வேலி சாலீ வாடீசுவர ஓதுவாரவர்கள் வீட்டிலிருந்து உ.வே. சாமிநாதையருக்கு கிடைத்தது. இதனை செந்தமிழ்ப் பத்திரிகையில் அவர் வெளியிட்டார்.

---

36 பேரூர்க்கோவை, கோவை சி.எம். ராமச்சந்திரன் செட்டியாரின் முன்னுரையுடன், சென்னை, 1955, முகவுரை பக், xv, xvi.

37 சிற்றிலக்கியச் செல்வங்கள், பக் 193.

வித்துவான் வி.மு. சுப்பிரமணிய ஐயரும், சிரஞ்சீவி வித்துவான் கி.வா. ஜகந்நாதையர், மு. நடேச முதலியார் ஆகியோர் உதவியுடன் 1937 இல் உ.வே. சாமிநாதையர் 1937 இல் உ.வே. சாமிநாதையர் 140 பக்கங்களைக் கொண்ட நூலாக வெளியிட்டார். இக் கோவை 458 செய்யுட்களை உடையது. [38]

**நல்லூர்க் கந்தசாமிக் கோவை**

யாழ்ப்பாணத்தில் கரணவாயென்ற ஊரில் சைவகுருக்கள் மரபிற் பிறந்தவர் செவ்வந்திநாத தேசிகர் (1907 - 1932) வித்துவான் சி. கணேசையரிடம் கல்வி பயின்ற இவர் இயற்றியது 'நல்லூர்க் கந்தசாமிக் கோவை' ஆகும்.

**ஆனந்தரங்கன் கோவை**

கி.பி. 1709 மார்ச் 30 இல் சென்னை பிரம்பூரில் யாதவ குலத்தில் திருவேங்கடம்பிள்ளை என்பவரது புதல்வராகப் பிறந்தவர் ஆனந்தரங்கன் பிள்ளை. வரலாற்றுப் புகழ்பெற்ற துபாஷி (பலமொழி வல்லவர்) யாகப் பணியாற்றிய இவர் மீது திருவாரூரைச் சேர்ந்த தியாகராய தேசிகர் (இலக்கண விளக்கம் இயற்றிய வைத்தியநாத தேசிகரது குமாரர்) என்பவரால் கி.பி. 1739 இல் பாடத் தொடங்கி, 1755 இல் நிறைவு செய்யப் பட்ட 400 செய்யுட்களைக் கொண்டது ஆனந்தரங்கன் கோவை ஆகும். சிலர் (இதனை இயற்றியது சதாசிவ தேசிகர் என்றும் கூறுவர்). இந்தக் கோவை நூலுக்கு கடலூர் ந. பலராம ஐயர் (1876 - 1943) உரை இயற்றியுள்ளார். 1920 இல் இந்தப்பணி நிறைவடைந்தும், அப்போது நூல் வெளிவரவில்லை. அதன் பின் 1935 களில் சி.எம். இராமச்சந்திரன் செட்டியாரவர்களின் கொங்கு மலரில் நூறு பாடல்கள் வரை வெளிவந்துள்ளது. பின்னர் கால இடை வெளிக்குப் பின் 1955 இல் வித்துவான் பேராசிரியர் ந. சுப்பிரமணியன் அவர்களின் முகவுரையோடு, அரசாங்க உதவியோடு இந்த நூல் 151 பக்கங்களில் வெளிவந்துள்ளது. [39]

**மதுரைச் சொக்கநாதர் வருக்கக் கோவை**

திருநெல்வேலியில் சுப்பிரமணிய பிள்ளையின் மகனாகப் பிறந்த நல்ல சிவன் பிள்ளை (1882 - 1952) இயற்றிய நூல் மதுரைச் சொக்கநாதர் வருக்கக் கோவை.

**நீல கண்டேச்சுரக் கோவை**

திருத்துறைப் பூண்டிக்கு அருகில் உள்ள பின்னத்தூரைச் சேர்ந்தவர் நாராயண சாமி ஐயர் (1862 - 1914) நற்றிணைக்கு உரை எழுதியுள்ள இவர் இயற்றியது நீல கண்டேச்சுரக் கோவை.

---

38 சிராமலைக் கோவை, உ.வே. சாமிநாதையர் பதிப்பு, மதுரை, 1937.

39 ஆனந்தரங்கன் கோவை, சென்னை 1955.

## அரதைக் கோவை

நீல கண்டேச்சுரக் கோவை இயற்றிய பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் சிவபுராணம், சிவகீதை போன்ற பல நூற்களை இயற்றியுள்ளார். அவர் பாடிய மற்றொரு கோவை ' அரதைக் கோவை ' ஆகும்.

## மதுரைக் கோவை

1934 இல் எஸ். வையாபுரிப் பிள்ளையால் பதிப்பிக்கப்பட்டது மதுரைக் கோவை. இதனை இயற்றியவர் வேம்பத்தூர் ( வேப்பற்றூர், நிம்பை, குலசேகரச் சதுர்வேதி மங்கலம்) சங்கர நாராயணர் ஆவார். மதுரையில் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள சொக்கேசப் பெருமானைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டது; திருவிளையாடற்புராண சரிதங்கள் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது; 403 பாடல்களையுடையது.

## பரங்கிரிக் கோவை

19 ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் 20ஆம் நூற்றாண்டின் முற் பகுதியிலும் வாழ்ந்தவர் மு.ரா. அருணாசலக்கவிராயர். சேற்றூர் ஜமீனில் வாழ்ந்த இராமசாமிக் கவிராயரின் மகனாகப் பிறந்த இவர் தமிழ் இலக்கிய உலகிற்கு அருந் தொண்டாற்றியுள்ளார். இவர் பாடியது 'பரங்கிரிக் கோவை' ஆகும்.

## இன்னபிற கோவைகள்

அம்பிகாபதி இயற்றிய நெல்லை வருக்கக் கோவை, காவு பால சித்தரின் காவுபால சித்தர் ஆணிக் கோவை, குமரசேனாசிரியரின் குமர சேனாசிரியர் கோவை, சட்டை முனியின், சடாட்சரக் கோவை, தாண்டவராயரின், திருமயிலைக் கோவை, தமிழ்க்கோவை, வங்கர் கோவை, நந்திக் கோவை, தானக் கோவை, காரிக் கோவை, இராமீகரக் கோவை, அண்ணாமலைக் கோவை, அண்மையில் வெளிவந்த நாகர்கோவில் கிருஷ்ணன் கோவிலைச் சேர்ந்த கவிஞர் வெண்பா வேந்தன் அவர்களின் வெண்பாக்கோவை ஆகிய கோவைகளும் தமிழில் பாடப் பட்டுள்ள செய்திகளை அறிகிறோம்.

அடியேனின் சிற்றறிவிற்கு எட்டாமல், காலகதியில் வெளிவராமல் மறைந்துபோன ஒரு சில கோவைகளும் இருக்கக்கூடும்.

## மும்மணிக் கோவை

தம்முள் நிறங்கள் வேறுபட்ட புருடராகம், வைடூரியம், கோமேதகம் என்னும் மூவகை மணிகளாற் கோக்கப்பெற்ற கோவையைப் போலவே, தம்முள் வேறுபட்ட ஆசிரியப்பா, வெண்பா, கட்டளைக் கலித்துறை என்னும் மூவகைச் செய்யுட்கள் முப்பதால் கோக்கப் பெற்ற பாமலை மும்மணிக்கோவை.

ஸ்ரீமத் குமர குருபர சுவாமிகள் நடராசப் பெருமான் மீது அருளிச் செய்த 'சிதம்பரச் செய்யுட்கோவை, தருமபுரம் மாசிலாமணி தேசிகர் மீது பாடிய பண்டார மும்மணிக் கோவை' பிரசித்தி பெற்றவை. [40]

கோயமுத்தூர் கந்தசாமி முதலியாரின் பேரூர் மும்மணிக் கோவை (1882), கனக சபை நாயகரின் 'சடாரணியம் சுப்பிரமணிய சுவாமியார் மும்மணிக் கோவை'(1881), மாயூரம் கிருஷ்ணானந்த யோகிகளின் ஞான சித்தமும் மணிக் கோவை(1896), கல்லிடைக்குறிச்சி சிதம்பரநாதக் கவிராயரின் திருநெல்லை மும்மணிக்கோவை (1867), சொக்கலிங்க சிவப் பிரகாச பண்டார சந்நிதியின் குமார தேவ சுவாமிகள் மும்மணிக் கோவை (1883), காயாறு ஞான கந்தரையரின் மயிலாசலம் ஸ்ரீ சிவஞான சுவாமிகள் மும்மணிக் கோவை(1879), தத்துவராய சுவாமிகளின் மும்மணிக் கோவை (1869), தெ.சி. துரைசாமிப் பிள்ளையின் திருப்புன்கூர் மும்மணிக் கோவை (1895), பால சுப்பிரமணிய ஐயரின் கொப்புடைநாயகி மும்மணிக் கோவை (1895), க. வேலுசாமி பிள்ளையின் சிதம்பரம் கற்பக விநாயகர் மும்மணிக் கோவை (1885) [41] போன்ற பல மும்மணிக் கோவைகளின் விவரங்களை அறியமுடிகிறது.

உ.வே. சாமிநாதையர் 1932 இல் மதுரை மும்மணிக் கோவையையும், 1934 இல் வலிவல மும்மணிக் கோவையையும் மறுபதிப்புச் செய்துள்ளார்.

## இஸ்லாமியக் கோவை இலக்கியங்கள்

பக்தி மார்க்கம் என்ற நிலையில் தமிழ் இலக்கியத்தின் பல்வேறு பிரிவுகளுடனும் தொடர்புடைய நூல்களை இயற்றி தமிழுக்குப் புகழ் சேர்த்த முஸ்லிம் புலவர்கள், அகப் பொருள் சுவையுடைய கோவை இலக்கிய வடிவத்திலும் சில படைப்புகளைத் தந்துள்ளனர்.

அகப் பொருட் சுவையுடைய கோவை இலக்கியங்கள், இஸ்லாமிய நெறிகளுக்கு உட்பட்டு படைக்கும் முயற்சியில் 'கோவை' இயற்றிய ஆசிரியர்கள் கத்தி மேல் நிற்பது போன்ற நிலையில் நின்று, மரபுக் குட்பட்டும் தாம் பின்பற்றும் இஸ்லாமிய நெறிக்கும், பாட்டுடைத் தலைவருக்கும் களங்கம் ஏற்படாவண்ணம் பாடல்களைப் பாடவேண்டிய நிலையில் இருந்தனர். இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாற்றில் முதல் நிலையில் 'பல்சந்தமாலை' என்னும் இலக்கியம் உள்ளது; இது ஒரு 'கோவை' நூலாக இருந்திருக்க வேண்டும் என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

---

40 ஸ்ரீமத் அருணந்தித் தம்பிரான் 1937 இல் பதிப்பித்த 36 பக்கங்களைக் கொண்ட நூல்.

41 தமிழ் நூல் விவர அட்டவணை (1867 - 1900) முதல் தொகுதி, இரண்டாம் பகுதி, சென்னை, 1962, பக் 715 - 717.

### மும்மணிக் கோவை

நாகூரில் வாப்புராவுத்தரின் புதல்வராகப் பிறந்த குலாம் காதிறு நாவலர் மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் மாணவர் 28 நூற்களை இயற்றியவர்; புலவர் ஆற்றுப்படை பாடி அதனை பாண்டித் துரைத் தேவர் தலைமையில் அரங்கேற்றியவர். அண்ணல் நபிகள் நாயம் (ஸல்) அவர்கள் மீது இவர் பாடியது 'மும்மணிக் கோவை' ஆகும். வெண்பா, ஆசிரியப்பாவும், நேரிசையாய் இருக்க அவற்றுடன் கலித் துறையும் இணைந்து வர முப்பது செய்யுட்களில் இதனைப் பாடியுள்ளார்.

### பதானந்தக் கோவை

திருச்சியைச் சேர்ந்த சித்திரக்கவி பாடுவதில் வல்லவரான சையது இமாம் புலவர் அவர்களால் 1915 இல் பாடப்பட்டது பதானந்தக் கோவை ஆகும். இறைவனின் இறுதித் தூதர் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் விண்ணேற்றப் பயணத்தை (மிஃராஜ்) வருணித்துப் பாடும் இக்கோவையில் அகப் பொருட் செய்திகள் எதுவும் இடம் பெறவில்லை.

### ஆசாரக் கோவை

கீழக்கரையைச் சார்ந்த மு.அ.க. அப்துல் மஜீது பாடிய ஆசாரக் கோவை 1902 இல் பதிப்பிக்கப்பட்டது. இந்நூலின் ஒவ்வொரு பாடலின் அடியையும் 'முஹம்மது தம்பி மாமரைக்காய சகாயனே' என்று தம்மை அரவணைத்த புரவலரை நினைவு கூறும் வண்ணம் பாடியுள்ளார். புரவலரின் குணநலச் சிறப்புக்களை உள்ளடக்கச் செய்திகளைக் கொண்டு மட்டும் இக் கோவை அமைந்துள்ளது. இதில் அகப்பொருட் செய்திகள் இல்லை.

### கொள்கை மணிக் கோவை

1955 ஆம் ஆண்டு மீ.உ. கான் முஹம்மது இஸ்லாமியக் கொள்கை விளக்கும் செய்யுட்களை கோர்வை செய்து எழுதி வெளியிட்டுள்ள கொள்கை மணிக் கோவையிலும் அகப் பொருட் செய்திகளைக் காண முடியவில்லை.

### முஹம்மது காசிம் பொன் மொழிக் கோவை

வாழ்க்கை சிறப்படைய வழிமுறைகளை வழங்கும் செய்யுட்கள் அடங்கிய நூல்; முஹம்மது காசிம் என்னும் நல்லோரின் நெறிமுறைகள் பேசப் படுகின்றன. இதன் 'இறைநேசன்' யாத் துள்ளார். இஸ்லாமியக் கருத்துக்கள் அடங்கிய மேற்சொன்ன 'கோவை' என்னும் பெயரினைத் தலைப்பாகப் பெற்றிருக்கும் இந்த நூல்கள் அகப்பொருள் சார்ந்தனவாக இல்லை என்பதால் இவைகளை கோவை என்னும் சிற்றிலக்கியப் பிரிவின் பாற் சேர்த்திடல் இயலாது.

### மக்காக் கோவை

அகப்பொருள் கோவை நூற்கள் மூன்றினை இஸ்லாமியத் தமிழ் பெற்றுள்ளது. நாகூர் தர்கா வித்துவான் செவத்தமரைக்காயர் பாடியது மக்காக் கோவை.

இது கி.பி. 1890 இல் நாகப் பட்டினம் மகாராணி கைத்தொழில் பாடசாலை அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டு, திருச்சி வெ. நாராயண சுவாமிப் பிள்ளையவர்களால் பார்வையிடப்பட்டு வெளி வந்த கோவை நூலாகும்.

437 கலித்துறைச் செய்யுட்களும், நூலுக்குப் பொருள் உதவி செய்த நாகூர் தர்கா மேலாளர் சின்னமரைக்காயர் மாலுமியார் அவர்களை வாழ்த்திப் பன்னிரெண்டு செய்யுட்கள் 'வாழி' என்னும் தலைப்பில் தனியாகவும் கொண்டது இக்கோவை.

இஸ்லாமியரின் புண்ணியத்தலமான மக்கமா நகரினையும், இறுதித் தூதர் நாயகம் பெருமானார் (ஸல்) அவர்களையும் சிறப்பித்துப் பாடப் பெற்றது இக்கோவை ஆகும். அதிகமான அளவில் அரபுச் சொல்லாட்சி இதில் காணப்படுகிறது.

### விஜயன் அப்துல் ரகிமான் அகப்பொருள் பலதுறைக் கோவை

கொலை, கொள்ளை, கொடுமை செய்து திரிந்த கொடியவன் ஒருவனை அடக்கி வென்றதால் 'விஜயன் அம்பலம்' என்ற பட்டம் பெற்ற பரம்பரையில் வந்தவர் அப்துல் ரகுமான். இராமநாதபுரம் நத்தம் என்ற ஊரைச் சேர்ந்த இவர் மீது கி.பி. 1911 இல் சோதுகுடி எம்.கே.எம். அப்துல் காதிறுராவுத்தர் பாடியது 'விஜயன் அப்துல் ரகுமான் அகப்பொருள் பலதுறைக் கோவை' ஆகும்.

### ஷம்சுத்தாசீன் கோவை

நெல்லை மாவட்டம் பாளையங் கோட்டையில் மாஜிஸ் டிரேட்டாகப் பதவி வகித்த, பிரபல வர்த்தகர், வெட்டுவாங்குளம் கிராம இனாம் தாருமான மேலப்பாளையம் கொடை வள்ளல் வ.செ.த. ஷம்சுத்தாசீன் அவர்கள் மீது சதாவதானி செய்குத்தம்பிப் பாவலர் அவர்களால் பாடப்பட்டது 'ஷம்சுத்தாசீன் கோவை' ஆகும்.

நமது மாவட்டத்தில், நாம் குடியிருக்கும் பாளையங் கோட்டைக்கு அருகில் உள்ள மேலப்பாளையத்தில் வாழ்ந்த வ.செ.த. ஷம்சுத்தாசீன் மீது கோவை நூல் ஒன்று மகாமதி சதாவதானி செய்குதம்பிப் பாவலரால் பாடப் பட்டிருக்கிறது என்பதனை அறிந்தேன். இந்தக் கோவை நூலை எப்படியும் தேடிக் கண்டுபிடித்திட வேண்டும் என்று முயன்றேன். எங்கெல்லாமோ அலைந்து திரிந்தேன்.

### கே.பி.எஸ். ஹமீது

அண்மையில் பாளையங்கோட்டையில் மாநிலத் தமிழ்ச் சங்கம் சார்பில் பாவலர் விழாவிற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தது. அந்த விழாவிற்கு பாவலரின் புதல்வர் அகில இந்திய வானொலியில் பணியாற்றி ஓய்வு பெற்ற வாஞ்சைமிகு அண்ணன் கே.பி.எஸ். ஹமீது அவர்களும் வந்திருந்தார்கள். விழாவில் உரையாற்றும் போது 'பாவலரின் நூற்கள் தேடி எடுத்துப்

பதிப்பிக்கப்பட வேண்டும்' என்று பேசினேன். 'அருகிலிருக்கும் மேலப்பாளையம் வ.செ.த. ஷம்சுத்தாசீன் மீது கோவை ஒன்று பாவலரால் பாடப்பட்டுள்ளது. அந்த நூல் கிடைத்தால் இறைவனின் அருளால் பதிப்பித்து விடலாம்', என்றும் கூறினேன். அருகிலிருந்த அண்ணன் கே.பி.எஸ். ஹமீது அவர்களும் அதற்கு முழுமனதுடன் ஒப்புதல் தந்தார்கள்.

**சுசீந்திரம் சி. குமரேசபிள்ளை**

பாவலரின் விழாவிற்கு பெருமைக்குரிய வித்துவான் சைவத் தென்றல் சி. குமரேசபிள்ளை அவர்களும் வந்திருந்தார்கள். 'என்னிடம் அந்த கோவை நூல் இருக்கிறது' என்றார்கள். ஆண்டுகள் பல தேடித் திரிந்தும் அகப்படாத நூல் அதிர்ஷ்டவசமாக நமக்கு கிடைக்கப் போகிறது என்று மகிழ்ந்தேன். அவர்களிடம் தொடர்பு கொண்டேன். அவர்களே அடியேன் இல்லத்திற்கு வந்து அந்தக் கோவை நூலைத் தந்தார்கள். அவர்களுக்குப் பெரிதும் நன்றிக் கடன்பட்டுள்ளேன். தமிழ் இலக்கியத்திற்கும், சைவத் திற்கும் சேவை செய்து வரும் அன்னாரின் அன்பையும், பண்பையும் எண்ணி எண்ணி மகிழ்கிறேன். இவர்கள் சதாவதானி செய்குதம்பிப் பாவலர் அவர்கள் வரலாற்றை 'செந்தமிழ் வளர்த்த செய்குதம்பி' என்றும் நூலாக யாத்துள்ளார்.

இந்நூலை இலவசமாக வெளியிட ஏற்கனவே எண்ணியிருந்த மேலப்பாளையம் VST ஷம்சுத்தாசீன் தரகனார் அறக்கட்டளை, ஹாமீம் பள்ளி மதரஸா குடும்ப அறக் கட்டளையினரிடம் தெரிவித்த போது உடனே அதனை நூலாக்கிட மனமுவந்து முன்வந்தனர். அவர்களுக்கு மென்மேலும் எல்லா வளங்களையும் இறைவன் அருள்வானாக!

அன்னைத் தமிழுக்கு சேவையாகவும் இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்திற்கு, துணையாகவும் "ஷம்சுத்தாசீன் கோவை" நூல் அமைந்திடும் என்று எண்ணுகிறேன். தமிழில் போதிய பாண்டித்தியம் பெற்றிராத அடியேனது முயற்சியினைத் தொடர்ந்து, பாவலரின் அச்சில் வராத, மறுபதிப்புக் காணாத பலநூற்களும் அச்சிலேற தமிழ் ஆர்வலர்களும் புரவலர்களும் முயன்றிட வேண்டும்;

இந்த முயற்சியால், தமிழ் இலக்கியமும், இஸ்லாமியத் தமிழ் இலக்கியமும் துளியேனும் செழித்து வளர உதவும் என்று நம்புகிறேன். இதுபோன்ற பல நூல்களை வெளிக் கொண்டுவர இறைவன் அருள்மழை பொழிவானாக!

# சதாவதானி செய்குத்தம்பிப் பாவலரின் வாழ்க்கை நிகழ்ச்சிகள்

அன்னைத் தமிழுக்கு அணிசெய்திட்ட பெரும்பணியில் சமயச் சழக்கில்லாமல், சைவமும், சமணமும், வைணவமும், இஸ்லாமும், கிறிஸ்தவமும், பௌத்தமும், ஒன்றையொன்று முந்தும் வகையில் முயற்சிகளை மேற்கொண்டன. மங்காச் சிறப்புடைய, மாறா இளமையுடைய முத்தமிழுக்குத் தொண்டாற்றிய முஸ்லிம் புலவர்கள் பலர். அதில் சரித்திரத்தில் மறைக்கப் பட்டவர்கள் சிலர், மறக்கடிக்கப் பட்டவர்கள் சிலர். சாகா சரித்திரத்தில், வாழும் வரலாற்றில் கால வெள்ளத்தைக் கடந்து வாழ்ந்து கொண்டிருப்ப வர்கள் சிலர். வளரும் தலைமுறையினரால் எண்ணிப் பார்க்கப்படுபவர் சிலர். அவ்வாறு எண்ணிப் பார்க்கப்பட்டு, எந்நாளும் போற்றப்பட வேண்டியவர் சதாவதானி செய்கு தம்பிப்பாவலர் என்றால் அது மிகையாகாது. தனக்கென தன்னேரில்லாத் தனிச்சிறப்புப் பெற்ற அந்த மகாமதிப் புலவரின் வாழ்க்கை நிகழ்ச்சிகள்....

### பிறப்பு

ஸூஃபி ஞானி எனப் போற்றப்படும் சித்த வித்தகர் ஞானியார் அப்பா வின் பரம்பரையில், நாஞ்சில் நாட்டில், பண்டக சாலையும் சண்டை செய் களமும் தன்னகம் கொண்ட பழம்பெரும் பதியாம் கோட்டாறு என்னும் பகுதிக்குட்பட்ட இளங்கடை என்னும் எழில் சேர் ஊரில், பக்கீர் மீரான் சாகிப்- இடலாக்குடி சந்தித் தெருவில் வாழ்ந்த அமீனா தம்பதியாருக்கு 1874 ஜீலை 31 இல் தோன்றியவர் செய்கு தம்பிப் பாவலர்.

### கல்வி

ஐந்து வயதில் திருகுர்ஆனை ஓதத் தொடங்கினார். இளங்கடை ஆதாரப்பள்ளியில் எட்டாவது வயதில் அரைவகுப்பில் சேர்க்கப்பட்டு, இருபது நாளில் அவர் தம் அறிவாற்றல் கண்டு முதல் வகுப்பில் அனுப்பப் பட்டு, ஆறு மாதங்களில் நான்கு வகுப்புக்களையும் படிப்படியாக முடித்துக் கொண்டார். சங்கர நாராயண அண்ணாவியாரிடம் கல்வி கற்றார்.

### சென்னையில் திருப்பாடல் திரட்டு

ஹலரத் ஞானியார்சாகிப் அவர்களின் 'மெஞ்ஞானத்திருப்பாடல்திரட்டு' நூலினை அச்சிட்டுவெளிக்கொணரும் முயற்சியில் 19வது வயதில் சென்னை சென்றார். சென்னை ஸ்ரீபத்மநாப விலாசம் அச்சுக்கூடத்தில் அந்த எண்ணம் நிறைவேறியது. (அதே அச்சுக் கூடத்தில் 1919 இல் அச்சிடப்பட்டது தான் ஷம்சுத்தாசீன் கோவை)

### இட்டாபார்த்தசாரதி நாயுடு

செய்கு தம்பிப்பாவலரின் தமிழாற்றலில் மனத்தைப் பறிகொடுத்த அச்சக உரிமையார் இட்டா பார்த்தசாரதி நாயுடு அவர்கள் பாவலரைத் தமது அச்சகத்திலேயே தலைமைப்பிழை திருத்துவார் பொறுப்பினைத் தந்து சென்னையிலே வைத்துக் கொண்டார். பத்ம நாப விலாசம் பல நூல்களை அச்சிட்டு வெளியிட்டது. தமது 27வது வயதில் சீறாப் புராணத்திற்கு உரை எழுதி வெளியிட்டவர் பாவலர்.

### தேவாமிர்தப் பிரசங்கக் களஞ்சியம்

வடலூர் ராமலிங்க சுவாமிகள் பாடிய தீஞ்சுவை அமுதமான கவிதை களை 'திருஅருட்பா' என்று பெரிதும் போற்றி வந்தனர் தொழுவூர் வேலாயுத முதலியார், கோ. வடிவேலுச் செட்டியார், மறைமலை அடிகள். இது 'அருட்பா' தான் என்று வாதிட, கதிரைவேற் பிள்ளை, திரு.வி.க முதலியோர் அதை 'மருட்பா' என்று கூறி வந்தனர். மருட்பாக் காரர்கள் கூட்டம் நடத்திய இடத்திலேயே மறுநாள் மறுப்புரைப்போர் கூட்டம் நடைபெறும். நமது பாவலர் அவர்கள் ஆணித்தரமான உரை அங்கு நிகழ்த்துவார். அது கேட்டு 'அருட்பா' அணியினர் பாவலரை மகிழ்ந்து போற்றினார்கள். [42]

காஞ்சிபுரம் வீதிகளில் ஊர்வலமாக அழைத்து வரப்பட்டு பெரிய கோயிலில், பூரண கும்ப மரியாதையுடன் பாவலர் அவர்கள் வரவேற்கப் பட்டு, 'தேவாமிர்தப் பிரசங்கக் களஞ்சியம்' என்ற பட்டம் சூட்டியும் கௌரவிக்கப்பட்டார். [43]

### ஷோட சாவதானி

கி.பி. 1906 இல் தமது குரு சங்கர நாராயண உபாத்தியாயரைப் பார்ப்பதற்காக கோட்டாற்றிற்கு வந்தார் பாவலர். ஆற்றக்கோயா எனும் காரணப் பெயரையுடைய ஹசாறரத்து செய்யிது முஹம்மது அபூபக்கருல் ஐதுரூஸ் தங்கள் எனும் பெரியார் இடலாக்குடி வந்திருந்தார். அவரது தலைமையில் ஷோடச (16) அவதானங்களை அற்புதமாகச் செய்து 'ஷோடசாவதானி' என்ற பட்டம் பெற்றார் பாவலர்.

### சதாவதானி

1907 மார்ச் 10இல் விக்டோரியா நினைவு மண்டபத்தில் கண்ணபிரான் முதலியார் தலைமையில் பாவலர் நூறு செயல்களைக் கொண்ட சதாவதானம் செய்யப் போகிறார் என்ற அறிக்கைகள் திருச்சி, லால்குடி, தஞ்சை, மதுரை, காஞ்சிபுரம், திருநெல்வேலி முதலிய இடங்களுக்கும், தமிழ்நாடு முழுவதும் பறந்தது. கூட்டம் பெருந்திரளாகக் கூடியது. காஞ்சி மகாவித்துவான் இராமசாமி நாயுடு, தஞ்சாவூர் சுப்பிரமணிய ஐயர், பச்சையப்பன் கல்லூரி

42 செ. சதாசிவம், சேரநாட்டுத் தமிழ்ப் பெருமக்கள் வரலாறு, நாகர் கோவில், 1947, பாகம் II, பக் 60.

43 கே.பி. செய்குதம்பி, பதிப்பாசிரியர், சதாவதானி செய்குதம்பிப் பாவலர், சென்னை, 1987, பக் 47.

தமிழ்த் துறைத் தலைவர் வேங்கடசாமி நாயுடு, புலவர் கா. நமசிவாய முதலியார், ஹிந்து ஜி. சுப்பிரமணிய ஐயர், தமிழ்த்தென்றல் திரு.வி.க, ரசிகமணி டி.கே. சிதம்பரநாத முதலியார் மற்றும் பலரது முன்னிலையில் சதாவதான சாதனை புரிந்து சரித்திரத்தில் நிலைத்து நிற்பவர் பாவலர்.

### மகாமதி

மகமதியருள் இவர் மகாமதியர் என்பதால் 'மகாமதி' என்றும் சதாவதானம் புரிந்ததால் 'சதாவதானி' என்றும் பட்டங்கள் சூட்டிக் கௌரவிக்கப்பட்டவர் பாவலர். சதாவதானம் நிகழ்ந்த அன்று பாவலர்கள் பலர் பாமாலை சூட்டிப் புகழ்ந்தனர். அது 'சதாவதானச் சிறப்பு' எனும் சிறு நூலாக வெளி வந்துள்ளது.

### திருமணம்

பாவலர் தமது 33 வது வயதில் 1907 இல் [44] பதினைந்து வயதான முஹம்மது பாத்திமா பீவியை மணம் முடித்தார். பாவலர்க்கு மக்கள் ஐவர். அதில் ஆண்கள் நால்வர். கோட்டாற்றில் குடும்ப வாழ்க்கையை நடத்த பாவலர் நூல் வாணிகம் செய்தார். பாவலரிடம் பாடம் கேட்டுச் சென்ற புலவர்களும் பலர். [45]

### இந்திய சுதந்திரப் போரில்

1920 ஆம் ஆண்டுகளில் நாஞ்சில் நன்னாட்டில் விடுதலை இயக்கம் தோன்றி வளர்ந்தது. டாக்டர் எம்.இ. நாயுடுவின் வலக்கரமாக தூய கதராடையும், காந்திக் குல்லாயும் அணிந்து திகழ்ந்த பாவலரின் சொல்லாற்றல் காங்கிரஸ் இயக்கத்துக்குப் பெரிதும் வலுவூட்டியது. தென் தமிழ்நாட்டில் காங்கிரஸ் இயக்கத்திற்குப் பிரச்சாரம் செய்து பெரு வெற்றி பெற்றத் தந்தவர் பாவலர்.

### இரவிப்புதூரில்

1924 இல் இரவிப்புதூரில் கதர் அணிவதை வற்புறுத்தி பேசிய பாவலர் கூறை என்றால் திருமணத்திற்குரிய புதுஆடை அதற்கு கைத்தறி ஆடைகளை எடுப்பது வழக்கம்; இறப்பின் போது பிணத்திற்கு போர்த்திட புது ஆடை எடுப்பர். அது மில் துணியாக இருக்கும். எனவே மண வாடையாக நாட்டுத் துணியும், பிணவாடையாக மில் துணியையும் அணிவர். நீங்களெல்லாம் மணமக்களா? பிணமக்களா ? என்று கேட்டார்; பரபரப்பு ஏற்பட்டது. மில் உடைகள் வீசி எறியப்பட்டு, வானளாவச் செந்தீ எழுந்தது; சுதந்திரத் தீ பரவியது. 46

---

44 கரு நாகராசன், அவதானக் கலை, சென்னை, 1983 பக் 96.

45 செ. பகலுமுகியிதீன், மகாமதிப் பாவலர், சென்னை, 1986, பக் 15,16.

46 சி. குமரசே பிள்ளை, அவதானக் கலைஞர், சென்னை, 1968, பக் 102.

**V.S.T. செய்கு மன்சூர்**

1937 தேர்தலில் பாளையங் கோட்டையில் காங்கிரஸ் வேட்பாளராக நின்ற V.S.T. செய்கு மன்சூருக்கு ஆதரவாகப் பிரச்சாரம் செய்த பாவலர் 'மஞ்சள் பெட்டி, மங்கலப் பெட்டி, வெள்ளைப் பெட்டி, வெறும் பெட்டி ' என்று பேசினார். வாக்குகள் எண்ணப்பட்ட போது, எதிரணியில் நின்ற வேட்பாளரின் வெள்ளைப்பெட்டி திறந்தபோது அந்த முதற்பெட்டியில் ஒரு வாக்குகூட இல்லாதிருந்தது பாவலரின் வார்த்தைகளின் வலிவு தான் என்ன? [47] தேர்தல் காலங்களில் இவர் ஆற்றிய சொற்பொழிவுகளால் நாட்டு மக்கள் காங்கிரசுக் கட்சிக்கே வாக்களித்து வெற்றி பெறச் செய்தனர்.

**இறுதி**

கி.பி. 1950 பிப்ரவரி 13 ஆம் நாள் பாவலரின் இவ்வுலக வாழ்வு நிறைவு பெற்றது.

'ஒரும் அவதானம் ஒரு நூறு செய்திந்தப்
பாரில் புகழ் படைத்த பண்டிதனைச்
சீரிய செந்தமிழ்ச் செல்வனை செய்கு தம்பிப் பாவலனை
எந்த நாள் காண்போம் இனி'

என்று அவலமுற்று நாஞ்சில் நாட்டு நல்லிசைப் புலவர் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை பாடியுள்ளார். [49]

ம.ப. செயிக் தலைவராகவும், செ.ப. ஜமால் முகம்மது செயலாளராகவும் கொண்டு, இயங்கிய சதாவதானி பாவலர் மன்றம், 1961 இல் 'செய்குத் தம்பிப் பாவலர் நினைவு மலர்' ஒன்றினை வெளியிட்டது.

---

47 சி. குமரேச பிள்ளை செந்தமிழ் வளர்த்த செய்கு தம்பி, சுசீந்திரம், 1997, பக் 114 செ. திவான், விடுதலைப் போரில் தமிழக முஸ்லிம்கள், பாளையங் கோட்டை, 1994, பக் 169.

48 சொ. முருகேச முதலியார், குமரி நாட்டுப் புலவர்கள், சென்னை, 1995, பக் 30.

49 சி. குமரேசன், குமரி மாவட்டப் புலவர்கள் சுதந்திரம், 1987, பக் 49.
சி. குமரசேபிள்ளை, சதாவதானி செய்குத் தம்பிப் பாவலர், நாகர்கோயில், 1980, பக் 17.

# மகாமதி செய்கு தம்பிப் பாவலரின் இலக்கியப் பணிகள்

*பழந்தமிழ்ப் புலவர் மரபில் வைத்து எண்ணிப் போற்றத் தகுந்த பாவலர் அவர்களின் நூற்கள் இப்புவி உள்ள காலம் வரை நிலைத்து நிற்கும் என்பதில் எவருக்கும் சந்தேகம் இருந்திட முடியாது.*

**பத்திரிகை ஆசிரியர்**

*சென்னையில் 'யதார்த்தவாதி', 'இஸ்லாமிய மித்திரன்' என்ற இரு செய்தித்தாள்களை நடத்தியவர் செய்குத் தம்பிப் பாவலர்.*

**உரைநடை நூற்கள்**

**தேவலோகக் கிரிமினல் கேஸ்**

*'அரிச்சந்திர சரித்திரம், சூர்ப்பநகை பங்கம், வாலிவதம், இலங்காதகனம், அதற்கு அப்பீல், அரம்பைப்பலவந்தப் புணர்ச்சி, கோபிகாஸ்திரீகள் வஸ்திராபகரணம், துரோபதை வஸ்திரா பகரணம், அதற்கு புனர் விசாரணை, அதற்கு அப்பீல், கீசகன் பலவந்தம்' என 8 விஷயங்களை 250 பக்கங்களில் எழுதி வெளியிட்ட பாவலர், அந்த நூலின் 2ம் பதிப்பை 1908இல் பர்டன் அண்டு கோ சொந்தக்காரர் T.A. பொன்னுசாமி முதலியார் அவர்களின் துணைவியோடு, பிரஸிடென்ஸி அச்சியந்திர சாலையிற் அச்சிட்டு வெளியிட்டார். ஒரு ரூபாய் எட்டணா விலையில் வெளியான அந்த நூலின் முதற்பக்கத்தில் பாவலரே கையொப்பமிட்டு, கையெழுத்து இல்லாத புஸ்தகங்கள் திருட்டுப் புஸ்தகங்கள் என்றும் அறிவித்தார்.*

**வேதாந்த விவகாரக் கிரிமினல் கேஸ்**

*1923 இல் ஒரு ரூபாய் நாலணா விலையில், சென்னை எம். ஆதி அண்டு கம்பெனியாரின் சந்திரா பிரஸில் பதிப்பிக்கப்பட்டு, மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் புலவர்களுள் ஒருவரான செய்கு தம்பிப் பாவலரால் 312 பக்கங்களைக் கொண்டு வெளியிடப்பட்ட நூல் 'வேதாந்த விவகாரக் கிரிமினல் கேஸ்' ஆகும்.*

**சீறாப் புராண உரை**

*கி.பி. 1902 இல் சீறாப் புராணத்தின் விலாதத்துக் காண்டம், நுபுவ்வத்துக் காண்டங்களைஉரையுடன் வெளியிட்டவர் பாவலர். சென்னை 84,-ஆசாரப்பன் தெருவில் இயங்கி வந்த இட்டா பார்த்த சாரதி நாயுடுவின் அலுவலகத்திலேயே 'முகம்மதிய புத்தக ஷாப்' என்ற பெயரில் பாவலர் இந்த நூலை மூன்று ரூபாய் விலைக்கு விற்றார்கள். 855 பக்கங்களைக் கொண்டு வெளிவந்த அந்த நூலின்*

இறுதியில் இரண்டாம் பாகம் விரைவில் வெளிவரும் என்றும் அறிவித்திருந்தார். ஹிஜ்றத்துக் காண்டத்திற்கு உரை எழுதி 1026 பக்கங்களில் கி.பி. 1908 இல், மேலப்பாளையம் பிரபல வர்த்தகர் வ.அ. மலுக்கா அலித்தரகனாரவர்களுக்கு உரிமையாக்கி பாவலர் வெளியிட்டார். பின் 1912லும், 1929லும், நாச்சி குளத்தார் பதிப்பாக 1999லும் இவ் உரைகள் தொடர்ந்து வெளிவந்துள்ளது. 'சீறா நாடகம்' என்னும் நூலையும் பாவலர் எழுதினார். நபிகள் நாயகத்தின் ஜீவிய சரித்திரத்தையும் பாவலர் உரை நடையில் எழுதியுள்ளார்.

### பாவலரின் செய்யுள் நூல்கள்

### திருக்கோட்டாற்றுப் பதிற்றுப் பத்தந்தாதி

ஒரு பாடலின் இறுதியில் நிற்கும் அடியோ, சீரோ, அசையோ, எழுத்தோ, சொல்லோ அடுத்த பாடலின் ஆதியில் வருமாறு பாடுவது அந்தாதி. இது சிற்றிலக்கிய வகைகளில் ஒன்று.

பாவலர் தம் ஊராகிய கோட்டாற்றில் வாழ்ந்த தம் குல குருவாகிய ஞானியார் அப்பா மீது பாடிய நூல் திருக்கோட்டாற்றுப் பதிற்றுப் பத்தந்தாதி.

கோட்டாற்றுப் பிள்ளைத் தமிழும் பாவலர் பாடியுள்ளார். [50]

### கல்வத்து நாயகம் இன்னிசைப் பாமாலை

மலர் பல கோக்கப்பட்டு அணிபெற அமைவது மாலை; பாடல்கள் பல சேர்க்கப்பட்டு ஒரு கருத்தை விளக்கும் நூல் மாலை ஆகும். கீழக்கரை கல்வத்து நாயகம் என்னும் இஸ்லாமிய மாமேதையின் மீது பாவலரால் பாடப் பெற்ற காப்புச் செய்யுள் நீங்கலாக நூறு பாடல்களை உடைய, சுரிதகம் இல்லாத் தரவு கொச்சகக் கலிப்பாவெனும் ஓரினப் பாக்களால் கோக்கப் பட்ட மாலை 'கல்வத்து நாயகம் இன்னிசைப் பாமாலை' ஆகும். இதன் முதற்பதிப்பு 1990 லும், அதன்பின் மேலப்பாளையத்திலிருந்து ஒரு பதிப்பும் வெளியாகியுள்ளது.

### நபிகள் நாயக மான்மிய மஞ்சரி

மான்மியம் என்றால் பெருமை. மஞ்சரி என்பது பூங்கொத்து. அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களது பெருமையாகிய பூங்கொத்து என்னும் பொருளில் பாவலரால் பாடப்பட்ட நூல் 'நபிகள் நாயக மான்மிய மஞ்சரி' ஆகும்.

இஸ்லாத்தின் ஐம்பெரும் கொள்கைகளையும் எடுத்து இயம்புகிற இந்த நூல், நான்கு அடிகளால், நான்காவது அடி மிக்கு வந்த வெண்டளைக் கொச்சகக் கலிப்பாக்கள் 102 கொண்டது. உத்தமபாளையம் கே.சி. முகமது இஸ்மாயில்

---

50 செய்கு தம்பிப் பாவலரின் நபிகள் நாயகமான்மிய மஞ்சரி, அகரம் பதிப்பு, 1976, பக் 36.

அவர்களின் பொருளுதவியோடு நாஞ்சில் ஆரிது முயற்சியுடன் 1976 இல் முதற் பதிப்பு வெளி வந்தது.

### திருநாகூர்த் திரிபந்தாதி

செய்யுள் அடிகள் நான்கிலும் முதலெழுத்து முதல் பத்தெழுத்துக்கள் வரை சொல்லால் ஒன்றிப் 'பொருளால் வேறுபட்டு நிற்பது யமகம் எனப்படும். இரண்டாம் எழுத்து முதல் பத்தெழுத்துக்கள் வரை சொல்லால் ஒன்றிப் பொருளால் வேறுபட்டு நிற்பது திரிபு எனப்படும். இவை சொல்லணியைச்சார்ந்தவை. யமகப் பாடல்களை அந்தாதியாகப் பாடுவது யமக அந்தாதி யென்றும், திரிபுப் பாடல்களை அந்தாதியாகப் பாடுவது திரி பந்தாதி யென்றும் கூறுவர். [51]

நாகூர் ஆண்டவர் அருள் வேண்டி பாவலர் பாடிய நூல் திருநாகூர் திரிபந்தாதி என்றாலும், இந்த நூலுள், நாகூர் ஆண்டவனின் பெயர்ஐயன், நாகையன், நாயகம், அண்ணல் என்பவை போன்ற சொற்களிலேயே வருகின்றன.

### நீதி வெண்பா

பாவலர் சொல்லிலும், செயலிலும் நீதியை விரும்புபவர். அறிஞரிடையே உரையாடிக் கொண்டிருக்கும் போதும், மாணவர்களுக்கு கற்பித்துக் கொண்டிருக்கும் போது, இடித்துரைத்தும், போற்றியும் உணர்த்த வேண்டிய நீதிகளை உணர்த்தி வந்தார். அவ்வாறு பாவலரால் நீதிகள் வெண்பாக்களாகவே பாடப்பட்டது. அவைகளும், பாவலரின் தனிப் பாடல்களும் அச்சேறாத நிலையிலேயே இருக்கின்றன.

### அச்சில் வராத நூல்கள்

உத்தம பாளையம் முகமது இஸ்மாயில் கோவை, சசிவோத்தமக் கோவை, அழகப்பக் கோவை ஆகியவை அச்சில் வராத முழுமை பெறாத பாவலரின் நூற்களாகும். சசிவோத்தமக் கோவை சர்.சி.பி. இராமசாமி ஐயர் மீது பாடியதாகும். [52]

### நாகைக் கோவை

செய்குத் தம்பிப்பாவலர் நாகைக் கோவை பாடியுள்ளார். ஆனால் அதுவும் இதுவரையில் அச்சேறவில்லை. [53]

---

51 சி. குப்பிரமணியபிள்ளை, செந்தமிழ் வளர்த்த செய்கு தம்பி, சுசீந்திரம், 1986, பகுதி 2, பக் 35.

52 தமிழ் வளர்த்த பெரியோர்கள், தமிழக அரசு வெளியிடு, பக்.20.

53 ஆர்.பி.எம்.கனி, இஸ்லாமிய இலக்கியக் கருவூலம், தென்காசி, 1963, பக் 176, 192.

## கலைக் கடலின் ஷம்சுதாசீன் கோவை

தொண்டிச் சான்றோர்களால் 'கலைக்கடல்' என்றும், திண்டுக்கல் சான்றோர்களால் 'அல்லாமா டாக்டர்' என்றும், நாஞ்சில் நாட்டவர்களால், 'தமிழ்ப் பெரும்புலவர்', என்றும் 'செய்கு' என்று தந்தையாராலும், 'தம்பி' என்று தாயாராலும் 'பாவலர்' என்று பாரோராலும் பாராட்டப் பெற்றவர் செய்கு தம்பிப் பாவலர்.

மேலப்பாளையத்தில் பிறந்து வாழ்ந்து, பெரும்புகழுடன் மறைந்த பெரியார் ஷம்சுத்தாசின் அவர்கள் மீது ஷெய்கு தம்பிப் பாவலரவர்களால் பாடப்பெற்ற 'கோவை' ஷம்சுத்தாசீன் கோவை ஆகும்.

சொல் பொருள் அணிகள் பல அமைந்து கற்றோர் வியக்கும் வண்ணம், 425 கட்டளைக் கலித்துறைச் செய்யுட்களைக் கொண்டு விளங்குவது இக் கோவை ஆகும்.

## 425 பாடல்களிலும் ஷம்சுத்தாசீன் பெயர்

இக்கோவை நூலில் இஸ்லாமியக் கொள்கை விளக்கங்கள் என்று அதிகம் இடம் பெறவில்லை. தமிழ்ப்பா மரபுகளும் பழக்க வழக்கங்களுமே இடம் பெற்றிருக்கின்றன. அறபுச் சொல்லாட்சி மிகவும் குறைவாகவே உள்ளது. பாட்டுடைத் தலைவரான ஷம்சுத்தாசீன் பெயர் இதில் இடம் பெற்றுள்ள 425 பாடல்களிலும் இடம் பெற்றிருக்கிறது. எத்துறையைச் சார்ந்த பொருளாயினும் அங்கு தம் நெஞ்சில் நிறைந்துள்ள புரவலரைப் போற்ற ஆசிரியர் மறந்துவிட வில்லை என்பது தெளிவாகத் தெரிகிறது. 55

## மாரியென வாரி வழங்கும் வள்ளல்

பாட்டுடைத் தலைவரான வள்ளல் வ.செ.த. ஷம்சுத்தாசீன் அவர்களது சிறப்பைப் பற்றி கோவையின் இறுதியில் ஷெய்குத் தம்பிப் பாவலர் பாடிய பாடல் இதோ:

---

54 கே.பி.எஸ். ஹமீது (பாவலரின் மைந்தர்) மாகாணத் தமிழ்ச் சங்கத்தில் ஆற்றிய உரையினை 31.7.99 இல் நேரில் கேட்டவர் பதிப்பாசிரியர் செ. திவான்.

55 மு. முகம்மது உவைஸ், பீ.மு. அஜ்மல்கான், இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு, தொகுதி 3, மதுரை காமராசர் பல்கலைக் கழக வெளியீடு, 1994, பக் 319, 321.

*" செய்யா ளெனவருந் தேவியு நானுஞ் செகதலத்தோர்*
*மெய்யாருயிரென மேவிக் கலந்தன மேலுமின்றும்*
*பொய்யா வரத்துர வோன் ஷம்சுத்தாசீன் பொருப்பிலவன்*
*கையாய்ப் பொழிபொழி மாதமும் மாரி கன மழையே"*

(ஷம்சுத்தாசீன் கோவை நிறைவுப் பாடல் 425)

தலைவியும் நானும் ஒருடலும் அதனிடத்துப் பொருந்திய உயிரு மெனச் சேர்ந்தோம். இனி எக் காலத்தும் பொய்க்காத ஆசிர்வாதத்தையுடைய அறிஞனான ஷம்சுத்தாசீன் கைகளைப் போன்று பெருமை பொருந்திய மேகமே, மாதத்திற்கு மூன்று மழைகளைப் பொழிவாயாக! பொழிவாயாக! எனக் கூறுகின்றான் தலைவன்.

வள்ளல் ஷம்சுத்தாசீன் அவர்களது பெருமையினை முழுவதுமாக அறிந்திட, இலக்கிய இன்பம் பெற்றிட 'ஷம்சுத்தாசீன் கோவை' முழுவதும், இதோ உங்கள் கரங்களில் -----

**செ. திவான்.**
*(பதிப்பாசிரியர்)*

*6.4.2000*
*கல்வித் தந்தை சுலைமான் இல்லம்*
*106 F, 4A திருவனந்தபுரம் சாலை*
*பாளையங்கோட்டை.*
*© 0462 - 572665.*

*ஹாமீம்.*

*பிஸ்மில்லாஹி*

------

# ஷம்சுத்தாசீன் கோவை

*இது பிரபல வர்த்தகரும் வெட்டுவாங்குளமாதிய கிராமங்களுக்கினாந்தாரும் பாளையங்கோட்டை ஆனரெரி மாஜிஸ்ட்டிரேட்டுமான மேலப்பாளையம் ஸ்ரீமான்* **வ. செ. த. ஷம்சுத்தாசீன் தரகனாரவர்கள்** *மீது*

*மதுரைத் தமிழ்ச்சங்கத்துப் புலவரு ளொருவரான தேவாமிர்தப் பிரசங்கக் களஞ்சியம் மகாமதி, சதாவதானி கோட்டாறு* **கா. ப. செய்குதம்பிப் பாவலரவர்கள்** *இயற்றியது.*

------

*மேலப்பாளையம், வித்வான்* **வ. அ. மல்க்கான் அலி சாகிபவர்கள்** *இயற்றிய அரும்பதவுரையோடு சென்னை ஸ்ரீபத்மநாப விலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.*

------

*1919.*

## இப்புத்தகத்தில் அடங்கியவை



------

ஹாமீம்.

பிஸ்மில்லாஹி.

# சாத்துகவிகள்

-----★-----

சென்னை கிறிஸ்டியன் காலேஜ் தமிழ்ப் பண்டிதரும் ஸர்வகலாசங்கத்துத் தமிழ்ப் பரீக்ஷகருமான ஸ்ரீலஸ்ரீ, கா. **ஸ்ரீ. கோபாலசாரியாரவர்களால்** இயற்றப்பட்டது.

**கட்டளைக் கலித்துறை.**

*கோட்டாறு வந்தசெய் குத்தம்பிப் பாவலன் கூறுதமிழ்ப்*
*பாட்டாருங் கோவைமே லப்பாளையத்துதி பானுதென்சொன்*
*மாட்டா தரஞ்செயும் ஷம்சுத்தா சீன்கன வான்றருமேற்*
*கூட்டாப் படர்ந்து புகழ்மணம் வீசிக் குலாகின்றதே.*

--------

மதுரைவாசியும், இப்பாட்டுடைத் தலைவரது இரங்கூன் தலைமை ஆபீஸ்மானேஜரும் இரங்கூன் சோலியா முஸ்லீம் சங்கத்தின் மாஜி காரியதரிசியுமான **வித்வான், ம-ள-ள-ஸ்ரீ, ம. கா. மு. காதிறுமுஹியித் தீனவர்கள்** இயற்றியது.

**அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.**

*அன்னவயல் சூழ்மேலப் பாளயமா மருநகரா னயலார்க் கென்று*
*நன்னலமே நாடும்வட கரைஷெய்கு மன்சூ றென்னாமத் தோன்செய்*
*இன்னலமே சடமெடுத்தா லன்னஷம்சுத் தாசிமெனு மெழிலோன் யார்க்கும்*
*பன்னலமே பணிக்கவிந்தப் பாரிலவ தரித்தவள்ளல் பாரி யொப்பான்.*

*அத்துவித சித்தாந்த வருணிலைக்கோர் பொருணிலையா யகில மெல்லாஞ்*
*சித்திபெற வந்துதித்த செய்யதிருக் கோடைவளர் செல்வ ரென்னும்*
*வித்தக மெய்ஞ் ஞானேசர் வீறுமலர்த் தாட்டுணையே வேண்டி நாளும்*
*பத்தியொடு மனம்வாக்குக் காயமெலா மொருசேரப் பணித்த தூயன்.*

*சீராருந் தென்னாட்டிற் றிகழ்பாளை யங்கோட்டைச் செழும்ப திக்குப்*
*பேராரு மானரரி மாஜிஸ்ற்றேட் டானபெரும் பெற்றி யாள*
*னேரான வண்மைவெட்டு வாங்குளமர் தியபலவூர்க் கினாம்தா ரிந்தத்*
*தாரானும்ஜார்ஜ்ஜுமன்னன்றகைமையுணர்ந்தளித்தமெடல்தரிக்கப் பெற்றோன்.*

*தென்னாட்டிற் குமரிகல்கத் தாகடலூர் புதுவைசென்னை தேர்தெ லுங்க*
*நன்னாட்டிற் காக்கியநா டாவிலுங்கொச் சீயதிலு நவிலும் பர்மா*
*வின்னாட்டிற் றிகழிரங்கோன் ஞவ்வுமாண் டலேமிஞ்சா னின்னு முள்ள*
*பன்னாட்டி லும்பரந்த வாணிபச்சா லைகள்பல படைத்த யோகன்.*

*வறியவருக் கீவதுவே யீகையென வள்ளுவனந் நாள்வ குத்த*
*நெறியதனுக் கிலக்கியமா நிற்பர்சிலர் நித்தநித்த நிறையச் சொன்னங்*
*குறியறிந்து கொடுப்பதன்றிக் குடியிருக்கக் குடில்பல்சதங் குயிற்றி வறாமீம்*
*புரியதென்னும் பெயர்புனைந்து வறிஞருக்கெ லாமளித்த புண்ய சீலன்.*

*எத்தானத் தினுமன்ன தானமதே யேற்றமென விசைப்பர் பல்லோ*
*ரத்தானத் தினுமிக்க தாகும்வித்தி யாதான மதற்கீ ரைந்து*
*பத்தாயி ரங்கொடுத்தக் குடியேற்றத் தார்க்காகப் பள்ளி யொன்றுங்*
*கத்தாவைத் தொழுதிடற்கோ ராலயமுங் கட்டிவைத்த கனத யாளன்.*

*ஆக்கமிலாத் தனமதென்று மதைப்படைத்த மாந்தரெலா மவனி மீது*
*நோக்கமுதற் காதுகரங் கால்களெனு மங்கமொடு நோயில் லாத*
*வாக்குமிருந் தாலுமவை யில்லாராய் வாழ்வரென வழங்கு முன்னோர்*
*வாக்கையெலாம் பொய்யாக்க வாக்கையெடுத் தவதரித்த வாய்மை யாளன்*

*இன்னாசெய் தார்நாண விதஞ்செய்த லேமுறையென் றியம்பு மாறே*
*மின்னாளுந் தானுமில்ல மிழிந்தயலி னோரிடத்து மேவுங் காலை*
*யொன்னாரி னுரைக்கிணங்கி யுபயபுத்தி ரர்க்கும்விட வுண்டி யீந்த*
*வன்னாளுக் காயிரங்கி யபயமுட னர்த்தமளித் தாண்ட வண்ணல்.*

*இத்தகைய வாண்டகைமேற் கோவையொரு நானூற்றி னோடி ரண்டு*
*பத்ததன்மே லைந்துகவி யாலியற்றிப் பார்க்களித்தான் பகரு மந்த*
*வுத்தமனா ரோவென்னி னுரைக்குதுங் கோட் டாறுநக ருறைந்திடுஞ்செய்*
*குத்தம்பிப் பாவலனா முத்தமிழின் சாகரமாங் குரிசின் மாதோ.*

*தேவாமிர் தப்பிரசங் கக்களஞ்சி யம்மெனவுந் தெரிந்த மேலோர்*
*நாவான்ம காமதியா னெனவுமிரு பட்டங்க ணல்கப் பெற்றுப்*
*பூவாருஞ் சென்னைமிசை யவதான மொருநூறும் புரிந்த வித்தப்*
*பாவாண னருள் கோவைப் பயன்விரித்த லெவர்க்கும்வெகு பார மம்மா.*

--------

**நல்லாசிரியன்** பத்திராதிபரும் மதுரைத் தமிழ்ச்சங்கத்துப் புலவருளொருவரும் சென்னை வேப்பேரி குயின்மேரி காலேஜ்

*தமிழ்ப்பண்டிதருமான ம-ள-ள-ஸ்ரீ,* **கா. நமச்சிவாய முதலியார்** *அவர்கள் இயற்றியது.*

**அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.**

*பாமருவும் புகழ்படைத்த மேலப்பா ளயம்புரக்கும் பண்பு வாய்ந்தோன்*
*நாமருவுங் கவிவாணர் நயமருவப் பொருள்வயங்கும் நல்மே சான்றோன்*
*காமருவு கொடையாளன் ஷம்சுத்தாசீன் பெயர்கொள் காவ லோன்மேற்*
*தேமருவு சுவைமருவு கோவைநூல் வளம்பெறவே செய்திட் டானால்.*

*எவ்வகைய பனுவலையு மிம்மென்னு மளவையினி லியற்ற வல்லோன்*
*செவ்வியநற் றமிழ்ப்புலவன் ஷெய்குதம்பிப் பாவலனாத் திகழு மேலோன்*
*அவ்வியலின் நூலகத்துக் காணுமரும் பொருளனைத்து மறிவித் தானால்*
*திவ்வியநற் புலமைபழுத் தெழுமல்கான் அலியென்னுஞ் சீரி யோனே.*

-------

இந்நூலாசிரியரது மாணாக்கருளொருவரான தெங்கம் புதூர் வித்வான் ம-ள-ள-ஸ்ரீ, **சாத்தான்குட்டிப்பிள்ளை** அவர்கள் இயற்றியது.

**அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.**

*சீரேறு கலையுடையான் செய்யதிருக் குணமுடையான் சேணு லாவுங்*
*காரேறு கரதலத்தான் காட்சிமிகு ஹாமிமெனக் கழறு மூரான்*
*பாரேறு புகழுடையான் பரம்பொருளை யுளநிறுத்தும் பான்மையுள்ளான்*
*தாரேறு செழுமார்பன் ஷம்சுத்தா சீன்பெயர்கொள் தக்கோன் மீதே*

*தெள்ளியபாற் கடல்கடைந்து தேவர்பொருட் டாலமுதம் திரட்டுமாபோ,*
*லொள்ளியதீந் தமிழ்க்கடலி னுயர்வுபெறு மகப்பொருளி லோதுமன்பி,*
*னுள்ளியவைந் திணைக்கோவை யெனவொருநூ லுவந்திசைத்தா னுலகமுய்யத்*
*தள்ளியவெவ் வினைதுணித்த தக்கோனை யாவனெ னச் சாற்றக் கேண்மோ.*

*விண்பட்ட தருமலிபூம் பொதிகையில்வாழ் குறுமுனிவன் விரித்த வைந்து,*
*பண்பட்ட விலக்கணமு மிலக்கியமு முலகுவப்பப் படித்துத் தேர்ந்தோன்,*
*கண்பட்ட மணிபோல்வான் கருதுமுயிர் பான்மையுளான் கற்றோர்போற்று*
*மெண்பட்ட புகழுடையா னிகழ்வடையான் கோடைநகரிருந்து வாழ்வோன்.*

*முன்னரிய சென்னைதனில் மூதறிஞர் பலர்கூட முறையே நூறு*
*பன்னரிய வவதானப் பண்பெடுத்துக் காட்டிமிகு பரிசு பெற்றோ*
*னுன்னரிய புலவரெனு முடுக்களிடை மாமதியா யொளிரு மேலோன்*
*மன்னரிய நலனுடையான் ஷெய்குதம்பிப் பாவலனா மதிவல் லோனே.*

-------

இந்நூலாசிரியரது மாணாக்கருளொருவரான பறக்கை, வித்வான் ம-ள-ள-ஸ்ரீ, **தா. மாணிக்கவாசகம்பிள்ளை** இயற்றியது.

**அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.**

கார்தழுவுஞ் சோலையிடைக் கனிதேனுங் கைமாவின் கடமுங் காவு
மேர்தழுவுஞ் செந்தமிழு மிடைச்சேரி யானைந்து மிருஞ்செஞ் சாந்தும்
போர்தழுவி யிருமருங்கும் பொன்வீசி மணநாறும் பொருனைப் பாங்கர்ப்
பார்தழுவும் பாளையத்தோர் பழம்பதிஹா மீன்புரமென் பார்கண்மன்னோ

அந்நகரான் றன்னிடையே யடைந்தவர்க்குக் குறிப்பறிந்தங் கருளு மாற்றாற்,
பொன்னகரான் றருநிகரான் புயவொளியான் மதனிகரான் பொருந்து கீர்த்திக்,
கென்னிகரான் ஷம்சுத்தா சீன்புயத்திற் கேற்றிடவே யியற்றுக் கோவை,
பன்னரிய துறையிணைத்த பாமாலை நானறும்பணி த்தான் மாதோ.

சொன்னலமும் பொருணலமுந் தொடைநலமு நடைநலமுந் துறையிற்றோன்று,
மின்னலமு மிதனிடையே யெழின்மடக்குச் சிலேடையுட னெதுகை மோனைப்
பன்னலமும் பழந்தமிழாற் பழுத்தொழுகு மிந்நூலைப் பண்டு ளோர்செய்,
நன்னலமு முறுகோவை நடுவிருத்தி நாவார நவிற்ற லாமே.

அன்னவன்யா ரெனிலுரைப்ப னருந்தமிழைப் பண்டறிஞர்க் கருளிவைத்த,
முன்னவனே யிப்புவியின் முன்னினனென் றன்றோர்கண் மொழியு மாற்றான்,
சென்னைதனி லவதானஞ் செய்துபல கற்றறிஞர் தேர்ந்துரைத்த,
மன்னவனாய் மிகச்சிறந்தோன் மதிவலர்க்கு மிடியேறா மகிமை சான்றோன்.

அருளுருவோ பொருளுருவோ வன்புருவோ வின்புருவோ வான செல்வன்,
கருவுருவோ வினியிலதான் காசினியிற் புக்குருவே கற்ற யாரும்
வெருளுறவே விடைபகர்வோன் வேறுமுள வெம்மதமும் வேறென் னாம
லொருபொருளே கடவுளென வுரைபகர்வோன் வரைதலுறா வுண்மை மிக்கோன்.

திருவாரு நலம்படைத்த திருநகராங் கோட்டாற்றிற் சிறப்புற் றோங்கு,
மொருவாத நண்புடையா னொளிர்பக்கீர் மீறானன் பொருவா நெஞ்சன்,
தருவான கொடைக்கரத்தான் றன்மகவென் றுலகுதித்தான் றழங்கும் வேலை,
பொருவாத நற்கலையான் புலவர்மகா மதியனெனப் புகழ்ப்பெற்றான்.

மாவாரு மேருதனை மருவினருக் குயர்வருளு மாறே கல்விக்,
காவாரு மடையினுட னரும்புலமைக் காளாக்கு மருமை வாய்ந்தோன்,
நாவாரு நறுந்தமிழை நன்றெனக்கு மருள்குரவன் ஞான ரூபன்,
பாவாரு நாவுடையான் பண்புடைசெய் குத்தம்பிப் பாவலோனே.

-------

இந்நூலாசிரியரது மாணாக்கருளொருவரான கோட்டாறு வித்வான் ம-ள-ள-ஸ்ரீ, **பி. ஆறுமுகம்பிள்ளை** அவர்கள் இயற்றியது.

**கொச்சகக்கலிப்பா.**

*பூமணக்கும் பொழிலுமெழிற் புனன்மணக்குந் தடமுமரு*
*ணாமணக்குந் தமிழுமிரு நலமணக்கும் புலனுடைய*
*தேமணக்கு மறிவினருந் திகழவமர்ந் துயருறுநற்*
*கோமணக்கும் புகழ்மணக்குங் கோட்டா றெனும்பதியில்.*

*எண்ணருமெய்ஞ் ஞானியா ரெனுமுனிவர் மகமரபே*
*பண்ணியால் லறப்பயனும் பகர்தரும்பன் னூலுணர்வி*
*னுண்ணியபக் கீர்மீறான் கோன்மையுஞ்செந் தமிழணங்கு*
*நண்ணியமெய் யோகமுமே நல்லுருக்கொண் டெழுந் தவென.*

*உதித்துமிகு கலைதெளிந்து முட்பொருளின் பயனுளத்திற்*
*பதித்துமயங் கியபொருட்குப் பகர்தருக்க நூலோரும்*
*மதித்திடநல் லுரை வழங்கி மணந்தருசீர் வள்ளுவர் நூல்*
*விதித்தபடி நடைபயின்று விளங்குறுஞ்சற் குணமேலோன்*

*செந்நெல்வளர் திருநாகூர்க் குத்திரிபா மந்தாதி*
*பன்னருந் தண் கோட்டாற்றுக் குப்பதிற்றுப் பத்துமுதற்*
*சொன்னவன்றன் றூயபெரும் புகழுடையான் துகளடையான்*
*அன்னவனா ரென்னின்மிக வன்புளனால் வம்பிலனே.*

*என்னிதயத திருளுடைலித் தெழிறருதற் கெந்நாளும்*
*தன்னருகிற் றனியிருத்தித் தகுகலைகள் பலமொழிந்தே*
*யுன்னரும்பே ரீரைம்பா னவதான மொருங்கியற்றும்*
*பன்னருஞ்சீர் செய்குதம்பிப் பாவலவன் பரிவினொடு.*

*பண்பரவு புகழ்மேலப் பாளையமாம் பெரும்பதியில்*
*விண்பரவு கொடையாலே மேவியசீ ரேவிரும்பும்*
*எண்பரவு மெழில்ஷம்சுத் தாசீனா மிருந்தவன்றன்*
*றிண்பரவு புயவலியின் சிறப்பொளிறற் கெண்ணியரோ.*

*எழுத்துமுத லிலக்கணமு மிலக்கியத்தின் பெருஞ்செறிவும்*
*பழுத்தொழுகிப் படிக்குநர்க்கும் பகருநர்க்கும் பழகுநர்க்கும்*
*விழுத்தகுசீ ரறிவுதர மேன்மையுடை யகப்பொருளால்*
*வழுத்தினனைந் திணைக்கோவை மகிதலத்து வளமையுற*

*சொற்கண்டு பொருள்கண்டு தொடைகண்டு நடைகண்டு*
*முற்கண்ட நற்சுவையே முதிர்கண்ட வந்நூற்குக்*
*கற்கண்டு சர்க்கரைமுக் கனியமிழ்திற் றுணைகாணேன்*
*மற்கண்ட நாக்கொண்டு வாயார வாழ்த்துதற்கே.*

--------

இந்நூலாசிரியரது மாணாக்கரு ளொருவரும் கோட்டாறு ஹையர்கிரேட் செகின்டரி ஸ்கூல் தமிழ்ப் பண்டிதருமானபறக்கை, ம-ள-ள-ஸ்ரீ, **எம். குமாரசாமிப்பிள்ளை** *அவர்கள் இயற்றியது.*

**நேரிசை வெண்பா.**

*வெற்றி தருங்கரத்தான் வேள்ஷம்சுத் தாசீனாங்*
*கொற்றவன்றன் மார்பங் குலவுதற்கே - கற்றவர்கள்*
*உய்குமமு தாப்புனைந்தா னோரைந் திணைக்கோவை*
*செய்குதம்பி பாவலவன் றேர்ந்து.*

-------

இந்நூலாசிரியரது மாணாக்கருளொருவரானகோட்டாறு வித்வான், ம-ள-ள-ஸ்ரீ, **கிருஷ்ணசாமிப்பிள்ளை** அவர்கள் இயற்றியது.

**நேரிசையாசிரியப்பா.**

*திருவளர் தாமரைத் தீம்பொழி லுடுத்த*
*மருவளர் பாண்டி வளநாட் டின்கண்*
*தண்டுறை மேவுந் தாம்பிர வன்னியும்*
*வண்டுறை சோலையு மருங்கு விளங்கும்*
*ஹாமீம் புரமெனு மரும்பதி வாழுஞ்*
*சோமீ வெண்குடை தூக்கிய செல்வன்*
*தக்கோன் ஷம்சுத் தாசீ னெனும்புகழ்*
*மிக்கோ னாகம் விளங்க வைந்திணைக்*
*கோவை யென்னுங் குலவிய வாரம்*
*மேவச் சூட்டினன் வீரிநீர்க் கோடைப்*
*பதிவாழ் செல்வன் பண்புறு குணத்தோன்*
*கதிபெற வெற்குத் தமிழ்கற் பித்தோன்*

*தொல்காப் பியமுதல் தோன்றி லஷணமும்*
*பல்காப் பியமும் பயிறகு நாவினன்*
*சொன்னய முதலாச் சொன்னபன் னயமுந்*
*தோன்றப் பாடுந் தூயநற் கவிஞ*
*னுன்னு மவதான மொருநூறும்*
*பன்னிய செய்குத் தம்பிப்பா வலனே.*

-------

இந்நூலாசிரியரது மாணாக்கருளொருவரான தாமரகுளம் ம-ள-ள-ஸ்ரீ,
**எம். சிவதாணுக்கவியராயரவர்கள்** இயற்றியது.

**நேரிசை வெண்பா.**

*பொன்னணிகொண் மாடமலி ஹற மீம்புரிக்கோர்*
*மன்னனென வந்துதித்த வள்ளலெனும் - மின்னொளிசேர்*
*கோவை பலபுனைந்த கோன்மைஷம்சுத் தாசின்மேல் -*
*கோவையொன்று செய்தளித்தான் கூர்ந்து.*
*சீரார்செய் குத்தம்பிச் சீரியன்றன் தீம்பாவை*
*ஆரார் புகழாதா ரம்புவியிற் - பேராரும்*
*கண்மணியா யென்னுட் கலந்துநின்ற கற்பகமா*
*யெண்ணுங் கவிராச ரேறு.*

ஹாமீம்.

பிஸ்மில்லாஹி.

## சிறப்புப்பாயிரம்.

சென்னை பச்சையப்பன் காலேஜ் தமிழ்ப்பண்டிதர்ம-ள-ள-ஸ்ரீ,
**கா. ர. கோவிந்தராஜ முதலியார்** அவர்கள் இயற்றியது.

**அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.**

*சீர்கொண்ட குணங்களுக்குச் செவ்வியநல் லியவிடமாய்த் திகழு நல்லோன்,*
*ஏர்கொண்ட நிலமெல்லா மெழில்கொண்ட தன்புகழே யிலக வைத்து,*
*நார்கொண்ட மனத்தோர்க ணன்மொழிகொண் டினிதுரைக்கு நலமே கொண்டோன்,*
*கார்கொண்ட கொடைக்கரத்தோன் கவின்கொண்ட நன்முகத்தோன் கனிந்த சொல்லோன்.*

*உய்யுநெறி முறைக்கு றுநல் லுறுதியெலா மினி துணரா வுலக முய்யச்*
*செய்யவமு தனையவருந் தீங்கவிகள் பலவியற்றிச் சிறந்தோர் தாமும்,*

அய்யனெனப் பணிந்திடச்சா ருண்ஞானி யரிசாய்பா மலர் பொற்பார்,
துய்யவடி யிணைக்கமலந் துன்னவுறு கயமெனவே துலங்கு நெஞ்சன்.

இசையாருங் கிளிமழலை யேய்ந்து றுதன் மக்களுக்கா யீந்த நஞ்ச,
வசையாரு மொருவனுக்கு மதிபுலத்தா னலம்புரிந்து மாசை தந்த,
அசையாத வறநெறியோ னளியினுக்கோ ராகரமா யமைந்த மேலோன்,
இசை யாரும் விழைதருஞ்சீர் வெட்டுவாங் குளந்தனக்கிங் கினாந்தா ரானோன்

தண்மதிநேர் குளிர்முகத்துச் சார்சென்னு மரசர்பிரான் றந்த வொப்பில்,
மண்மதிசீர்ப் பொற்பதக்க மாண்புறுதன் றகைமையினால் வாய்க்கப் பெற்றோன்,
பண்மதிக்கு மொழிமழலைப் பைங்குழன்மெல் லிடைமடவார் பார்த்து றாநாள்,
விண்மதிக்கு மிகத்தளர்ந்து மெலிவுற்று மணங்கவலும் வேளே போல்வான்

பேசரிய பெருஞ்செல்வன் பெருமைமிகு வாணிபத்திற் பிறங்கு கிற்போன்,
மாசிலருண் முகம்மதிறை மாமறையி னெறியகலா மாண்பார் நெஞ்சன்,
தேசுறுநல் ஷம்சுத்தா சினெனப் பேர் செறிந்திலகு செம்மை யோன்றன்,
ஆசிலருங் குணங்களெலா மகத்துன்னி யதனாலா மன்பு தூண்ட.

பொன்னணியி னன்மணிகள் பொருத்தியவாத் தன்னரிய புலமை சான்றன்
பன்னணிகொண் டினிதிலகும் பாக்களிடை யவன்புகழே பதிய வைத்து,
மன்னவிரு மியற்றமிழின் வளஞ்சார்ந்த கோவையொன்று வழங்கி னானால்,
முன்னருஞ்சொற் புலவோர்கண் முதறிரு னிவனென்றுமொழிய மன்னோ.

அன்னவன்றா னல்லாறா மருங்கோட்டின் வரம்புக்கு ளமைத லாலே
இன்னலஞ்சேர் கோட்டாறென் றினிதியம்பும் பதியினிடை யிலகி வாழ்வோன்
உன்னருஞ்சீ ரவதான மொருநூறு நன்கியற்றி யுவகை யோடு,
மன்னுமெழிற் சொற்புலவோர் மாமதியென் றிசைத்திடுநன் மாண்பு பெற்றோ

பண்டையருந் தமிழ்நூற்கள் பலவுணர்ந்தோ னரியகுறான் பகர்ந்த மாசில்,
எண்டயங்கு நெறிநிற்போ னிசைசெய்குத் தம்பிப்பா வலனென்றோதும்
பண்டழையுங் கவிவாணன் பண்புடைய நட்பாளன் படியிற் சீர்த்தி
எண்டிசையுந் தழைவித்தோ னின்மொழியன் பன்னலஞ்சார்ந் திலகு வோனே.

அன்னவளக் கோவையகத் தரும்பொருளை யாவருமே யறியும் வண்ணம்
பன்னுமருந் பதவுரையைப் பகுத்தளித்தான் பாங்காகப் பகரிற் செய்ய
பொன்னினுக்கும் பொன்னாகிப் பொலிகுணத்தான் வாணிபத் தின் புலமைமிக்கான்
உன்னருஞ்சீர்ப் புகழ்மணமிவ் வுலகமெலாம் பரவவுறு முறுதி யாளன்

*கற்றவர்க்கு நற்றுணைவன் கனிதோற்கு மின்மொழியன் காசி னெஞ்சன்*
*நற்றிறஞ்சார் செந்தமிழ்நூ னவிலுமரும் பொருட்டுறைக ணயந்தநாவன்*
*செற்றமிலாக் கோட்டாற்றுச் செய்யவருண் ஞானியர்பாற் செழித்த வன்பன்*
*பற்றியநீர்க் கருமுகில்போற் பாவலர்பாற் றண்ணளிசெய்பண்பின் மிக்கோன்.*

*பொன்றலில்சீர் முகம்மதிறை புனிதமறை வழியொழுகும் புலமா ரன்பன்*
*என்றனக்கு மின்றுணைவ னெழிலார்ந்து பொலிமுகத்த னியைந்தசெல்வன்*
*மன்றல்செறி குழன்மடவார் வளர்தனங்க டோயவிழை வளங் காண்மார்பன்*
*துன்றுமல்கா னலியெனுஞ்சீர் தோய்பெயர்கொ ணற்றவத்துத் தூயன் மன்னோ.*

சிறப்புப்பாயிரம்
முற்றிற்று.

-------

ஹாமீம்.

பிஸ்மில்லாஹி.

# ஷம்சுத்தாசீன் கோவை

----- ★ -----

## காப்பு.

### கட்டளைக்கலித்துறை.

திருவார் மருமநற் செய்குமன் சூர்தினஞ் செய்தவமோ
ருருவா யமைந்தபு மான்ஷம்சுத் தாசீ னுவந்தணியுங்
கருவா ரகப்பொரு ளைந்திணைக் கோவை கழறநித
மருவா ருருவி னகப்பொருட் குள்ள மமைக்குதுமே.

-------

## நூல்.

### களவியல்.

அஃதாவது-பொருளதிகாரத்துட் கூறப்பட்ட உருவும் திருவும் பருவமும் குலனும் குணனும் அன்பும் பிறவுந் தம்முளொத்த பதினைந்தாண்டும் பத்து மாதமுஞ்சென்ற தலைவனும் பதினோராண்டும் பத்துமாதமுஞ்சென்ற தலைவியும் கொடுப்போரும் பிறருமின்றி யூழ் வயத்தாற் றாமேயெதிர்ப்பட்டுப் புணர்தற்றன்மை. இங்ஙனம் புணர்தல் அகப்பொருளிற் கூறிய எண்வகை மணத்துட் காந்தருவ மணமாய்க் கைக்கிளை முதல் வரைவிடை வைத்துப் பொருள் வயிற் பிரிதலீறாகிய பதினேழு கிளவித் தொகைகளையுடையது; அவை வருமாறு:-

-------

### கைக்கிளை.

அஃதாவது-தலைவன் மாட்டாவது தலைவி மாட்டாவது நிகழுமொரு தலைக் காமம்; அவற்றுளிது-தலைவன் பாற்படு மொருதலைக் காமமாய்க் காட்சி, ஐயம், துணிவு, குறிப்பறிதல் என நான்கு வகைப்படும்; அவை வருமாறு:-

#### காட்சி.

(இ-ள்.) தலைவன் தலைவியை ஒரு பூஞ்சோலையிடத்துக் காணுதல்.

மாவே தழைத்து வனசமுங் கோங்கு மருவியல்லிப்
பூவே புணர்ந்து புதுநற வேற்றளி பூண்டுபுகழ்க்
கோவே யெனவரு வோன்ஷம்சுத் தாசீன் குளிர்சிலம்பின்
காவே சிறப்ப நடுவிலொர் பூங்கொடி காண்கின்றதே. (1)

### ஐயம்.

*(இ-ள்.) கண்ட தலைவன் இவள் எந்த வுலகத்துப் பெண்ணோ? வென்று சந்தேகப்படுதலைக் கூறுதல்.*

*வானோ புவியோ மலையோ கடலோ மதியிரவி*
*தானோ வனசத் தனித்தவி சோவுற்ற தண்டமிழ்க்கோர்*
*கோனோ வெனவருள் வோன்ஷம்சுத் தாசீன் குளிர்சிலம்பின்*
*கானோ டொளிதரு வாளிரு டந்தவக் காவகமே.* (2)

### துணிவு

*(இ-ள்.) சந்தேகிக்கப்பட்ட தலைமகள் பாதம் பூமியிற் படிதலாலுங் கண்புடை பெயர்ச்சியாலும் பூலோகத்துப் பெண்ணெனத் தெளிந்து கூறுதல்.*

*காலே பதிந்தன கண்ணே யிமைத்தன காணுமலர்*
*மேலே புலர்ந்தன மெய்ந்நிழல் கண்டன மேவுமிவற்*
*றாலே யரசர்பி ரான்ஷம்சுத் தாசீ னருட்சிலம்பின்*
*பாலே யமரிட மன்றிமற் றில்லையிப் பாவையர்க்கே.* (3)

### குறிப்பறிதல்.

*(இ-ள்.) தெளிந்த தலைமகன் தலைவியின் வேட்கை அவள் பார்வையாற் றன்னிடத்துள்ள தென்றறிதலைக் கூறுதல்.*

*படையேறு கைத்தலத் தோன்ஷம்சுத் தாசீன் பனிவரைசேர்*
*தடையே யிலருளர் நெஞ்சென் றிரண்டொரு தண்கமலப்*
*புடையே சுமந்தனர் நீத்தல்செய் பண்டிதர் போன்றவிவ*
*ளிடையே யிலையா லினித்தன மோவந்திங் கெய்துறுமே.* (4)

*கைக்கிளை - முற்றிற்று.*

------

## இயற்கைப் புணர்ச்சி.

*அஃதாவது - தெய்வத்தானாவது தலைவியானாவது கூடுதல்; அவற்றுளிது - தலைவியாற் கூடுதலென்க. அது: வேட்கையுணர்த்தல், மறுத்தல், உடன்படல், கூட்டமென நான்கு வகைப்படும்; அந்நான்கும் இரந்து பின்னிற்றற் கெண்ணல் முதலிய பதினாறும் பிறவுமாகிய விரிகளையுடையன; அவை வருமாறு:-*

### இரந்துபின் னிற்றற் கெண்ணல்.

*(இ-ள்.) தலைவன் தலைவியையாசித்துப் பின்னிற்றற்கு நினைத்தல்.*

*தேடித் தனந்தரு வோன்ஷம்சுத் தாசீன் செழுஞ்சிலம்பில்*
*வாடி யலையேல் வருவாய் மனமே மகிழ்ந்திரத்தற்*

கோடி யுறுவோ முறுவா யமுதோ டொளிர்வரைபோற்
கோடித் தனமுள ரொன்றிரண் டீகுவர் கூடுநர்க்கே. (5)

**இரந்து பின் னிற்றல்.**

(இ-ள்.) அங்ஙனமெண்ணிய தலைவன் தலைவிக்கு இதஞ்சொல்லிப் பின்னே நிற்றல்.

செம்போ டொளிர்புயத் தோன்ஷம்சுத் தாசீன் கிளர்வரைசேர்
வம்போடு கூந்தன் மடமயி லேயுன்றன் வார்தனப்பொற்
கொம்போட விட்ட கொழுமுரத் துன்னிரு கூர்விழியா
மம்போட வைப்பி னமையுங்கொ லோவென்ற னாருயிரே. (6)

**முன்னிலையாக்கல்.**

(இ-ள்.) தலைவி நிற்பது தன்காரியத்திற்கு வேண்டுங் காரணமென்றெண்ணி அவளைத் தலைமகன் முன்னிலையாக்கி மொழிதல்.

கோடும் பிறைநுதற் கோமள மேயுளங் கூர்ந்தெவரும்
பாடும் புகழ்ப்பெரு மான்ஷம்சுத் தாசீன் பனிவரையாய்
நாடும் பொழிலுஞ் சுனையு மடுத்துன்ற னாரியரோ
டாடுந் தொழின்மறந் தாய்தனித் தாயென்கொ லாதரமே. (7)

**வண்டோச்சி மருங்கணைதல்.**

(இ-ள்.) தலைவன் தலைவியினது கூந்தலிலுள்ள வண்டுகளை யோட்டுதல் போலத் தலைவியினது பக்கத்திற் சார்தல்.

தாதை யெனப்புரப் போன்ஷம்சுத் தாசீன் றமிழ்க்கிரிசேர்
பேதை யிவள்பா லளிகா ளிசைவகை பேசியிவள்
கோதை யடைந்தீர் மறந்தீ ரொருநூல் கொளுமியனீர்
மேதை யுறுவீர் செலுவீ ரிசைவலர் மேவகமே. (8)

**மெய் தொட்டுப் பயிறல்.**

(இ-ள்.) தலைவன் தலைவி சரீரத்தினோ ருறுப்பைத் தீண்டிப்பழகுதல்; அஃதாவது - தோளைத் தொட்டுரையாடல்.

சொற்கண்ட வாணர் தொடையொடு பூந்தொடை சூடுமுயர்
மற்கண்ட திண்புய மால்ஷம்சுத் தாசீன் மலையவெற்பிற்
கற்கண்டு வேண்டுங் கனதன நம்மிரு கைப்பட்டதான்
முற்கண்ட மெய்ப்பொரு ளோர்க்கரு ரேதித முந்துறுமே. (9)

## பொய்பாராட்டல்.

(இ-ள்.) தலைமகன் தலைமகள்மாட்டுள்ளது மில்லதுங் கூறிப்புகழ்ந்து கொண்டாடுதல். ஆயின்; உள்ளது கூறுதலும் பொய்பாராட்டலோவெனின்? அற்றன்று. மற்றென்னையெனின்? இல்லது கூறுவான் உள்ளதை விட்டுவிடுவா னல்லனென்க.

*எல்லாரு மேத்துமிக் கோன்ஷம்சுத் தாசீ னிருஞ்சிலம்பில்*
*வல்லாருங் கொங்கை மடமயி லேயுன்றன் வார்குழற்சீர்*
*செல்லார வேண்டி யலைவாய்ப் பயமிகச் சென்றலறி*
*யல்லாரு மேலுமக் கோசலம் விட்டங் கழுங்கிடுமே.* (10)

## இடம்பெற்றுத் தழால்.

(இ-ள்.) தலைவன் தலைவியைத் தழுவுதற்கு வாய்த்த இடத்தைக்கண்டு கூறுதல்.

*முந்தத் தவத்தின் முழுதுல கேத்த முதிர்ந்துதித்த*
*சந்தத் தடமுலை யீர்நுந்தங் கட்கணை தைத்தவலஞ்*
*சிந்தத் தயங்குமென் சிந்தா குலமறச் சேர்ந்ததர*
*விந்தத் திருப்பத வேள்ஷம்சுத் தாசீன் வியன்பொழிலே.* (11)

## வழிபாடு மறுத்தல்.

(இ-ள்.) இரந்து பின்னிற்றன் முதலாகப் பொய்பாராட்ட லீறாகத் தலைவன் வழிபட்டதனைத் தலைவி மறுத்தல்.

*பண்ணேறு மென்மொழிப் பாவலர் போற்றுநற் பைந்தமிழ்ச்சீர்*
*விண்ணேறு மாறமைத் தோன்ஷம்சுத் தாசீன் வியன்சிலம்பிற்*
*றண்ணேறு சாந்தஞ் சமைந்தளி தேறலுஞ் சார்ந்தளவி*
*லெண்ணேறு போதங்கொண் மாதவி யேயெம்மை யேற்றருளே.* (12)

## இடையூறு கிளத்தல்.

(இ-ள்.) தலைவி வெட்கமுற்றுக் கண்ணை மூடிக்கொண்டு நிற்றலினா லெழுந்த துன்பத்தைக் கூறுதல்.

*பாட்டாற்றி வந்தநற் பாவலர் வேண்டும் பரிசனைத்துங்*
*கேட்டாற்ற வல்லபு மான்ஷம்சுத் தாசீன் கிளர்வரையீர்*
*தேட்டாற் றிகழ்ந்த செழுந்தன நீத்துக்கை சேரலர்போற்*
*கோட்டாற்றை விட்டுய ராமீன் புரங்கொளுங் கொள்கைநன்றே.* (13)

## நீடுநினைந்திரங்கல்.

(இ-ள்.) புணர்ச்சி யெய்தாமையா லிவளுள்ள மெஞ்ஞான்றியையுமோ? வென நெடுநேரந் தலைவனினைந்து தலைவியைப் பார்த்துக் கூறுதல்.

*பாராளு மன்னர்பி ரான்ஷம்சுத் தாசீன் பனிவரைசேர்*
*காராளுங் கூந்தற் கனியமு தேயுன் கனகவட*
*மாராளுங் கும்பத் திணையே துணையாய் மதித்தெழுந்துண்*
*ணீராளு மந்தக் கடிதட நீந்தி நிலைப்பதென்றே.* (14)

**மறுத்தெதிர் கோடல்.**

(இ-ள்.) முன்வழிபாடு மறுத்ததனை மறுத்துத் தலைவி தலைவன் கூறிய சொல்லை யேற்றுக் கோடலைக் கூறுதல். போரேற்றா னென்பதற்குப் போரெதிர்ந்தானென்புழிப்போல, எதிர்தல் - ஏற்றல்.

*கோடா தருள்குணத் தோன்ஷம்சுத் தாசீன் குளிர்வரைவாய்*
*வாடா மலர்த்தொடை மன்னர் தங் காமவெவ் வாரிபொங்கி*
*யோடா தெழுந்துறி னெஞ்சே நமக்கோ ருறுந்துணையாய்*
*நாடா தடுத்தெதிர் நிற்குங்கொ லோநந்த நாணணையே.* (15).

**வறிது நகைதோற்றல்.**

(இ-ள்.) தலைவி முகத்திலே சிறுநகை தோன்றுதல்.

*பொன்னா யொளிருமிப் பூங்கொடி தன்னுளப் போக்கனைத்து*
*மென்னா மெனமயங் கேந்தறம் மேக்க விருட்கரசர்*
*மன்னா யொளிருமெம் மான்ஷம்சுத் தாசீன் மலையவெற்பின்*
*மின்னா யொளிர்ந்தது மெல்லிநல் லாண்முத்த வெண்ணகையே.* (16)

இக்கவி உரைப்போருங் கேட்போரு மின்மையாற் கவிக்கூற்றென்று கொள்க.

**முறுவற் குறிப்புணர்தல்.**

(இ-ள்.) தலைவி சிறுநகையின் குறிப்பைத் தலைவனுணர்தல்.

*பகைதந்த மன்னர் தினந்தந்த மூல பலந்தனக்கோர்*
*தகைதந்த வண்ணல்பி ரான்ஷம்சுத் தாசீன் றமிழ்ச்சிலம்பில்*
*வகைதந்த வேரளி கொண்டோர் முலைக்கொடி மையலரு*
*ணகைதந்த தாலினி மன்றற் சுகமிவ ணண்ணிடுமே.* (17)

**முயங்குத லுறுத்தல்.**

(இ-ள்.) தலைவி புணர்ச்சிக்குடன்பட்ட அருமையை வற்புறுத்திக் கூறுதல்.

*கலையாள வந்த கவிவாணர் தம்மைக் கனகருவி*
*யலையாள வைத்தபு மான்ஷம்சுத் தாசீ னருஞ்சிகர*

*மலையாளங் கண்டந்தக் கோட்டா றடைந்தன மாமதன்வாய்ச்*
*சிலையாளஞ் செய்தரு தேரூர் தெரிந்தினிச் சேருதுமே.* (18)

**கலவியின் மகிழ்தல்.**

(இ-ள்.) தலைவன் தலைவியைக் கலத்தலான் மகிழ்தல்.

*திடங்கண்ட வாணர்பி ரான்ஷம்சுத் தாசீன் செழுங்கிரிசேர்*
*விடங்கண்ட வேல்விழி மாதர சேயுன்றன் மெய்படுமோ*
*ரிடங்கண்ட சொர்க்கந்தந் தின்பக் கனியமு தீந்தெனையுன்*
*றடங்கண்ட வாநந்த வெள்ளத்து ளாழ்த்த தகைமைநன்றே.* (19)

**புகழ்தல்.**

(இ-ள்.) தலைவியினது நலத்தைத் தலைவன் வியந்து பாராட்டல்.

*குன்றா மணிப்புயக் கோன்ஷம்சுத் தாசீன் குளிர்வரைவாய்*
*மின்றா ரணிகுழ லேயர விந்தமுன் மெல்லடிச்சீ*
*ரொன்றார வாடி யலைவாய்ப் பய்மலிந் தோங்கு கண்ணீர்*
*பொன்றா திறைத்தொரு காவின்றண் ணாந்தங்கண் பூத்ததுவே.* (20)

இப்பதினாறு துறைகளுள், இரந்து பின்னிற்றற் கெண்ணல் முதல் நீடுநினைந்திரங்கலீறாகிய பத்தனுள், வழிபாடு மறுத்தலொழிந்த ஒன்பதும் வேட்கை யுணர்த்தற்கும், வழிபாடு மறுத்தலொன்றும் மறுத்தற்கும், மறுத்தெதிர்கோடலும் வறிதுநகை தோற்றலுமாகிய இரண்டும் உடன்படற்கும், ஏனைய நான்குங் கூட்டத்திற்கு முரியன.

இயற்கைப் புணர்ச்சி முற்றிற்று.

-------

## வன்புறை

அஃதாவது-தலைவி ஐயுற்றவழி ஐயந்தீரத்தலைவன் வற்புறுத்திக் கூறல்: அஃது-ஐயந்தீர்த்தல், பிரிவறிவுறுத்தலென இருவகைப்படும்; அவை: ஏற்புறவணிதல் முதல் இடமணித்தென்ற லீறாகிய ஏழுவிரிகளையுடையன: அவை வருமாறு:-

**ஏற்புற வணிதல்.**

(இ-ள்.) புணர்ச்சியிடத்துத் தலைவி புனைந்த முத்தார முதலிய கொங்கையணி குழலணிகள்வேறுபட்டவற்றைத்தலைவன்றன்கையினால்வேறுபாடுதீரப்புனைதல்.

*பொன்னணி சேர்புயத் தோன்ஷம்சுத் தாசீன் பொலன்கிரிவாழ்*
*மின்னணி நுண்ணிடை மெல்லிநல் லாயுண் மெலிந்திரங்கேன்*

முன்னணி பின்னணி முற்றும் வகுத்து முதலிடைகான்
மன்னணி யாவுநின் னாயமு மின்புற மாட்டுவனே. (21)

### அணிந்துழிநாணிய துணர்ந்து தெளிவித்தல்.

(இ-ள்.) தலைவன் அவ்வாறு புனைந்துழித் தலைவி பாங்கியாலணியப்பட்ட அணிக்கு இவர் கையாலணியும் அணி வேறுபடுமென்றும், அதைப் பாங்கியறியில் ஐயம்பிறக்குமென்றும், நாணுற்றுவெட்கப்பட்டாளாக, அதைத்தலைவனறிந்து தலைவியைத் தெளிவித்தல்.

பாவிய லாய்ந்தருள் வோன்ஷம்சுத் தாசீன் பனிவரையி
னோவிய மன்ன வொளிர்முகத் தாயுன்ற னுண்மைசெறி
காவியங் கைவைத் தெழுத்தொடு சொற்பொருள் கண்டழியாப்
பாவிய லோதி முடித்தே னணியும்பின் னாய்தரவே. (22)

### பெருநயப் புரைத்தல்.

(இ-ள்.) இனி, தலைவன் வருவானோ? வாரானோ? வென்று தலைவிமுகம் வேறுபட; அதைத்தலைவன் குறிப்பாலுணர்ந்து தனது மிகுந்த காதலைக் கூறுதல்.

காதுங் கனிந்துட் கரைதரப் பாடளி காளறியி
னோது மொருகைப் பிடியனம் போனடந் தோங்குமிரு
போது முலைமுத்தந் தந்துரை யாடற் புதவலியோன்
றேதும் பரும்புகழ் மால்ஷம்சுத் தாசீ னிறும்பகத்தே. (23)

### தெய்வத்திறம் பேசல்.

(இ-ள்.) மேற்கூறியதைத் தலைவிதெளியா தவளாகத் தலைவன் அவளூழ்வலியின் றிறத்தைக் கூறுதல்.

நிதியா லுயர்ந்த துரைஷம்சுத் தாசீ னெடுவரைவாய்த்
துதியா ரயில்விழித் தூமொழி யேயுடற் றோமொழியே
மதியா தியற்றும் வலியுள தாயின் மருவருமோர்
விதியாம் பிணையிற் பிணைப்புறு நம்மையும் வெல்லரிதே. (24)

### பிரியேனென்றல்.

(இ-ள்.) தலைவன் பிரிவனென்னுங் கவற்சியால் தலைவி யுடல் விளர்ப்பக்கண்ட தலைவன் உன்னைவிட்டுப் பிரியமாட்டே னென்று கூறுதல்.

சிறந்து வளர்நிதி யோன்ஷம்சுத் தாசீன் செழுங்கிரிவாய்ப்
பிறந்து வளர்ந்தநற் பெண்கொடி யேயஞ்சிப் பேதுறனிற்
றுறந்துங் கனவி னனவோ டணுவுங்கை சோர்ந்திதய
மறந்தும் பிரியேன் பிரியிற் றரிக்கிலன் மன்னுயிரே. (25)

### பிரிந்து வரு கென்றல்.

(இ-ள்.) பிரியேனென்றது கேட்டு மகிழ்ந்த தலைவிக்குத் தலைவன் பின்பிரிந்து வருவேனென்று கூறுதல்.

அற்றே ரணிகுழ லாயிழை யாய்பொழி லாடுதிபோர்ச்
செற்றே பகைதடிந் தோன்ஷம்சுத் தாசீன் செழுங்கிரிவாய்ச்
சற்றே பிரிந்து வருவேன் றரியேன் றரிக்கினுமங்
குற்றே யெனைக்கொடு வந்திடு மென்னக முன்னகமே. (26)

### இடமணித்தென்றல்.

(இ-ள்.) தலைவனூர்தூரத்திலுள்ளதோ? சமீபத்திலுள்ளதோ? வென்று தலைவி வருந்திய அதனைக் குறிப்பாற்கண்ட தலைவன் ஊரிருக்குமிட மிகச் சமீபத்திலுள்ளதென்று கூறுதல்.

யோகத்திற் சீரி லுயர்விற் றகையி லுற்றபல
போகத்திற் சீர்த்தபு மான்ஷம்சுத் தாசீன் பொலங்கிரிவாய்
மேகத்தி லோங்கு குழன்மட வீர்நகர் வேறலநம்
பூகத்தி லும்மூர் கறிக்கொடி யேறிப் புணர்ந்திடுமே. (27)

இவற்றுள் முன்னைய நான்கும் ஐயந்தீர்த்தற்கும், பின்னைய மூன்றும் பிரிவறிவுறுத்தற்கு முரியன.

வன்புறை முற்றிற்று.

### தெளிவு.

அஃதாவது - தலைவன் கூறிய சொல்லைத் தலைவி மெய்யெனத்தெளிந்தாற்றுவது; இது - வகையும் விரியுமில்லாமனின்றது.

வான்பிறழ்ந் தாலு மலைபிறழ்ந் தாலு மதியிரவி
தான்பிறழ்ந் தாலும் பிறழாத் தகையர்சொற் றான்றவறி
யேன்பிறழ் வார்பிற ழார்வரு வார்மன மேங்குறல்பூந்
தேன்பிறழ் மார்பகத் தோன்ஷம்சுத் தாசீன் சிலம்பகத்தே. (28)

தெளிவு - முற்றிற்று.

## பிரிவுழி மகிழ்ச்சி

அஃதாவது - பிரிந்து போகுமிடத்துப் போகின்ற தலைவி தன்மையைக் கண்டு தலைவன் மகிழ்தல்; இது - வகையின்றிச் செல்லுங்கிழத்தி செலவுகண் டுளத்தோடு சொல்லலும் பாகனொடு சொல்லலுமாகிய இரண்டு விரிகளை யுடையது; அவை வருமாறு:-

### செல்லுங்கிழத்தி செலவுகண் டுளத்தோடு சொல்லல்.

(இ-ள்.) புணர்ச்சிக்குறி யிடத்தினின்றும் பெயர்ந்து செல்லாநின்ற தலைமகளது செலவைக்கண்டு தலைவன்றன்னெஞ்சொடு சொல்லுதல்.

*மேகமு மோர்கைவெண் சோமனு மோர்கை விளக்கியிரு*
*நாகமுங் கொண்டொரு நாகமு மன்னமு நாணுறவெச்*
*சோகமுந் தீர்த்தருள் வோன்ஷம்சுத் தாசீன் சுடர்க்கிரிவா*
*யாகமு மொல்க வசைந்துறு மாணந்த மாருயிரே.* (29)

**பாகனொடு சொல்லல்.**

*(இ-ள்.) தலைவன் றன்னைத் தேடிவந்த தேர்ச்சாரதியிடத்தில்தலைவி செல்லுதலைக் காட்டிக் கூறுதல்.*

*முன்னோடு பின்னு முறைமுறை பார்த்துண் முதிருமச்சந்*
*தன்னொடு வேர்ப்புந் தளர்வுமென் பேரன்புந் தாங்கிமன்னர்*
*மன்னொடு மானிகர்த் தோன்ஷம்சுத் தாசீன் மலைவலவ*
*பொன்னொடு மின்னெனப் போவது பாரொரு பூங்கொடியே.* (30)

*பிரிவுழி மகிழ்ச்சி - முற்றிற்று.*

## பிரிவுழிக் கலங்கல்.

*அஃதாவது - தலைவி பிரிந்த இடத்துத் தலைவன் வருந்துவது; அது மருளுற்றுரைத்தல் தெருளுற்றுரைத்தலென இரண்டு வகைப்படும்; அவை: ஆயவெள்ளம் வழிபடக்கண்டிது மாயமோவென்றல் முதல் கண்படை பெறாது கங்குனோத லீறாகிய ஐந்து விரிகளையுடையன; அவை வருமாறு:-*

**ஆயவெள்ளம் வழிபடக் கண்டிது மாயமோவென்றல்.**

*(இ-ள்.) தலைவியைப் பிரிந்த மாதர்கூட்டம் வந்து வழிபடுதலைக் கண்டு இம்மாதர் கூட்டத் துள்ளாளென்னைத் தனித்துக் கூடியது என்ன மாயமோ? வென்று தலைவன் மயங்கிக் கூறுதல்.*

*மெய்யோ டிரண்டெடுத் தன்பொன் றளித்துயர் மென்குழுவின்*
*மையோ டொளிருங் கணமதி போல்வதி வானிவணோர்*
*கையோ டமர்தரு வோன்ஷம்சுத் தாசீன் கனகவெற்பிற்*
*பொய்யோ கனவோ பிறிதோ வறியேன் புணர்ந்ததுவே.* (31)

**வாயில் பெற்றுய்தல்.**

*(இ-ள்.) தலைவி உயிர்ப்பாங்கி முகத்தை நோக்கிச் செல்லுதலைப் பார்த்துத் தலைவன் அப்பாங்கியைத் தூதராகப் பெற்று உய்வதாகக் கூறுதல். பாங்கி - பக்கத்திலிருக்கு முயிர்த்துணைவி.*

*வருத்தி மயக்கு மயனோ யகற்ற மருந்துளதோர்ந்*
*திருத்தி மனமே யினையே லிவட னிணைவிழிவண்*

டருத்தி யறிந்தளிப் போன்ஷம்சுத் தாசீ னருட்கிரிவா
யொருத்தி முகதா மரைமல ரோடி யொளித்ததுவே. (32)

**பண்பு பாராட்டல்.**

(இ-ள்.) தலைவியின தழகைத் தலைவன் வியந்து கொண்டாடுதல். பண்பு - ஈண்டு அழகின்மே னின்றது.

அடிபடும் வட்டு மலர்படும் போது மமரிலெதிர்த்
தொடிபடுங் கொம்பு முடைபடும் வெற்பு மொளிர்சிறைக்குட்
பிடிபடும் புள்ளும்பெம் மான்ஷம்சுத் தாசீன் பெருங்கிரிவாய்த்
துடிபடு நுண்ணிடை கொங்கைக் கிணைசொலத் தோற்றுறுமே. (33)

**பயந்தோர்ப் பழிச்சல்.**

(இ-ள்.) தலைவியைப் பெற்றோரைத் தலைவன் வாழ்த்தல்.

வந்திரந் தார்க்கருண் மால்ஷம்சுத் தாசீன் மலையமின்னை
யெந்திர வாவியை யின்பக் கனியை யெமக்களித்தோர்
சந்திர சூரிய ருள்ளள வும்புகழ்ச் சம்பனரா
யிந்திர னுஞ்சசி யுங்கடுத் தோங்கி யிலங்குகவே. (34)

**கண்படைபெறாது கங்குனோதல்.**

(இ-ள்.) அன்றிரவிலே தலைவி தந்த ஆசையால் நித்திரை பெறாது இருட்காலத்தைத் தலைவன் நொந்து கூறுதல்.

படியோர் குடையிற்கொள் வோன்ஷம்சுத் தாசீன் பனிவரைமின்
முடியோ நிசிகட லோவிழி யிந்தோ முகமெனயாந்
துடியோ டுரைத்த தொடரா லெமையவை சூழ்ந்தெழுந்து
விடியோ மெனநீண் டுறுக்கிக் கருக்கி வெகுண்டிடுமே. (35)

இவற்றுள் முன்னைய தொன்றும் மருளுற்றுரைத்தற்கும், பின்னைய நான்குந் தெருளுற்றுரைத்தற்கு முரியன. காட்சி முதல் கண் படை பெறாது கங்குனோ தலிறுதியாகக் கூறிய முப்பத்தைந்து துறைகளும் முதல்நாள் நிகழ்ச்சி யென்க.

பிரிவுழிக் கலங்கல் - முற்றிற்று.

......

## இடந்தலைப்பாடு.

அஃதாவது - இயற்கைப் புணர்ச்சியிற் கலந்த தலைவன் மறுநாளவ்விடத்தில் வந்து தலைவியைக் கூடுதல்; அது: தெய்வந்தெளிதல்,

கூடல் விடுத்தலென மூவகைப்படும்; அம்மூன்றுந் தந்த தெய்வந் தருமெனச் சேறல் முதல் ஆயத்துய்த்தலீறாகிய ஐந்து விரிகளையுடையன; அவை வருமாறு:-

## தந்ததெய்வந் தருமெனச் சேறல்.

(இ-ள்.) முன் கூட்டியவிதி யின்னுமவ்விடத்திற் சென்றாற் கூட்டுமெனத் தலைவன் சேறல்.

*இன்றந்த வீகையு மின்மையும் யார்க்கு மியல்பெனிற்செம்*
*பொன்றந்த மார்பன்பு மான்ஷம்சுத் தாசீன் பொதியவெற்பிற்*
*றுன்றந்த வண்பொழிற் றோகையி னெம்முயிர்த் தோகைமின்னை*
*முன்றந்த தெய்வ மினுந்தரு மாலங்கு முந்துதுமே.* (36)

## முந்துறக் காண்டல்.

(இ-ள்.) முன்போலத் தலைவியைத் தலைவன் காணுதல்.

*மாறா வமுத மழையோ சுகிர்த மருவுருவோ*
*நூறா மணிவிளக் கோமதி யோவிதி நுண்ணழகோ*
*தேறார் குடிகெடுத் தோன்ஷம்சுத் தாசீன் சிலம்பகத்தோர்*
*கூறா யொளிரு முயிர்க்குயி ராமென் குலதெய்வமே.* (37)

## முயங்கல்.

(இ-ள்.) தலைவியைத் தலைவன் புணர்தல்.

*மன்னர்க் கதிபதி மால்ஷம்சுத் தாசீன் மலையமுத*
*மன்ன வருவா ளகங்கனிந் தாடு மருள்வெளியு*
*ளென்னி லவளு மவளகம் யானு மிரண்டறவொன்*
*றென்னக் கலந்த விருஞ்சுகம் யார்க்கு மியம்பரிதே.* (38)

## புகழ்தல்.

(இ-ள்.) தலைவன் தலைவியைப் புகழ்ந்து கூறுதல்.

*குடைபட்ட கோலுடைக் கோன்ஷம்சுத் தாசீன் குளிர்சிலம்பின்*
*றொடைபட்ட கோதை யிவள்விழி நோக்கித் தொடர்ந்துலைவாய்க்*
*கடைபட்டுத் தீப்பட் டடிபட்டுச் செம்புனற் கக்கிக்கக்கி*
*முடைபட்ட தன்றிச் சரிப்பட் டிலையினு மொய்கணையே.* (39)

## ஆயத்துய்த்தல்.

(இ-ள்.) தலைவன் தலைவியை மகளிர் கூட்டத்துள் விடுத்தல்.

*முலைகாட்டி முத்த நகையிதழ் காட்டி முழுதுமின்ப*

*நிலைகாட்டிக் காட்டுமென் னெஞ்சமன் னீர்கமழ் நெய்ந்நிணவே*
*லிலைகாட்டி யோங்குகை யோன்ஷம்சுத் தாசீ னிருஞ்சிகர*
*மலைகாட்டி யாடும் மாயத்துட் போந்தங்கு மன்னுகவே.* (40)

இவற்றுள் - தந்ததெய்வந் தருமெனச்சேறலொன்றுந் தெய்வந் தெளிதற்கும், காண்டல் முயங்கல் புகழ்தலாகிய மூன்றுங்கூடற்கும் ஆயத்துய்த்தலொன்றும் விடுத்தற்கு முரியன. இதுவரையும் இரண்டா நாள் நிகழ்ச்சி.

இடந்தலைப்பாடு முற்றிற்று.

-------

## பாங்கற் கூட்டம்

*அஃதாவது - மூன்றாநாள் தோழனாற் கூடுங் கூட்டம்; அது: சார்தல் கேட்டல், சாற்றல், எதிர்மறை, நேர்தல், கூடல், பாங்கிற் கூட்டலென எழுவகைப்படும்; அவ்வேழுந் தலைவன் பாங்கனைச் சார்தல் முதல் பாங்கிற் கூட்டலீறாகிய இருபத்து நான்கு விரிகளையுடையன; அவை வருமாறு:-*

**தலைவன் பாங்கனைச் சார்தல்.**

(இ-ள்.) தலைவன் தலைவியால் வந்த ஆசைநோய் தோழனா லன்றித் தீராதென்றெண்ணி அவனைச் சார்தல்.

*வாவியிற் காவிநற் பாலொடு நீறென மாதலசஞ்*
*சீவியி லோங்குபு மான்ஷம்சுத் தாசீன் சிமையமத*
*னேவிய வெஞ்சிகிக் கஞ்சிநெஞ் சேயினை யேல்வருவா*
*யாவியி னாவியன் னானுள னின்றென் னருந்துணைக்கே.* (41)

**பாங்கன் தலைவனையுற்றது வினாவல்.**

(இ-ள்.) பாங்கன் தலைவனது மனமும் புயமும் வாடிய வேறுபாடு கண்டு இவ்வேறுபாடு வந்ததற்குக்காரண மென்னை? யென்று கேட்டல்.

*நீடாழி வைய நிலைபிறழ்ந் தாலு நிலாப்பகலற்*
*றோடா தொழியினு மொண்டமிழ் தேர்ந்துணர்ந் தோர்க்கொருத்தல்*
*கோடானு கோடிதந் தோன்ஷம்சுத் தாசீன் குளிர்சிலம்ப*
*வாடா மலர்ப்புயம் வாடிய வாறென் வழுத்துகவே.* (42)

**தலைவனுற்றதுரைத்தல்.**

*(இ-ள்.) அங்ஙனங் கேட்ட பாங்கனுக்குத் தலைவன் தனக்குற்ற வேறுபாட்டின் காரணத்தைக் கூறுதல்.*

*நீதஞ் செறிகுணத் தோன்ஷம்சுத் தாசீ னெடுங்கிரிவா*
*யேதந் தவிருற வோயெழிற் காமனுற் றெய்தருமென்*
*போதஞ் சரியப் பொறியளி சாடப் பொருதுதந்த*
*வாதங் கடுப்ப மலிபுலன் றூர்த்ததொர் மாதங்கமே.* (43)

**கற்றறி பாங்கன் கழறல்.**

(இ-ள்.) வேதாகமங்கள் யாவுங் கற்றறிந்த பாங்கன் தலைவனை பிடித்துக் கூறல்.

*என்னே கலைகண் முழுதுற வாய்ந்தின் றெழிலளகை*
*மன்னே யெனவரு மால்ஷம்சுத் தாசீன் மலையவெற்பின்*
*பொன்னே புரையுமெய் பூணலங் கண்ட புரவலவம்*
*மின்னே நிகர்த்தபெண் பேதைக் கழிதல் வியப்பலவே.* (44)

**கிழவோன் கழற்றெதிர் மறுத்தல்.**

(இ-ள்.) பாங்கன் கூறிய உறுதிமொழியைத் தலைவன் மறுத்தல்.

*ஆட்சியுங் கோலுங்கொள் வோன்ஷம்சுத் தாசீ னருண்மலைமின்*
*மாட்சியுங் கொங்கை மலையும் வதன மலருமைம்பா*
*னீட்சியும் பால நிலவும் புருவ நிலைமையுங்கண்*
*காட்சியுங் காண்கிலை காண்கிற் கவல்வைகொல் கட்டுரையே.* (45)

**பாங்கன் கிழவோற் பழித்தல்.**

(இ-ள்.) அங்ஙனங் கூறிய தலைவனைப் பாங்கன் நிந்தித்துக்கூறுதல்.

*காரைத் தருவையன் னோன்ஷம்சுத் தாசீன் கனகவெற்பொன்*
*னாரை நிகர்ப்பவொ ராயிழை யாட்கங்கி லாதவிடைச்*
*சீரை நினைந்துடைந் தாயர சேயிது தேரிற்சிறு*
*கோரை வளர்ந்துயர் கோபுர மாய்த்தெனுங் கொள்கைத்தன்றே.* (46)

**கிழவோன் வேட்கை தாங்கற் கருமைசாற்றல்.**

(இ-ள்.) தலைவன் பாங்கனை நோக்கி நீ பழிக்கின்ற என்னுள்ளந்தேறுதற்கு வேட்கை யென்னாற் றாங்க முடியாதெனக் கூறுதல்.

*துங்கந் தருகுணத் தோன்ஷம்சுத் தாசீன் சுடர்க்கிரிவாய்த்*
*தங்கங் கடுத்தொளிர் தையனல் லாடனந் தாங்கிடைவெஞ்*
*சிங்கம் பிளந்த செழுமுரத் தன்பநின் றியெனுஞ்சொற்*
*புங்கம் புகுதிற் பொறுப்பன்கொ லோவுயிர் பொன்றுறுமே.* (47)

**பாங்கன் றன்மனத்தழுங்கல்.**

(இ-ள்.) அதுகேட்ட பாங்கன் எம்பெருமான் ஆற்றானா யிவ்வாறு கூறினால் அதற்கு நானென் சொல்வேனென்று தன்னுள்ளே வருந்துதல்.

முத்துண் டொளிர்புயத் தோன்ஷம்சுத் தாசீன் முதிர்கிரிவா
யெத்துண் டிலகுமொ ரேந்திழை யெய்த விணைவிழிவேற்
குத்துண் டிருமுலைக் கோடுண் டனுதினங் கூர்ந்தமையற்
பித்துண் டழிந்தன னம்மர சென்செயும் பேருலகே . (48)

**பாங்கன் றலைவனோடழுங்கல்.**

(இ-ள்.) இங்ஙனம் வருந்திய பாங்கன் சகியாதவனாய்த் தலைவனோடு வருந்துதல்.

கலகந் தருமொரு கட்கடை மாதிடு காமவலை
யிலகஞ் சுழலுனக் கென்சொலென் னோவினி யெங்குமொளிர்
திலக மெனவமர் வோன்ஷம்சுத் தாசீன் சிமையவெற்ப
வுலகம் புரளி லொருவருண் டோவதை யொத்திடற்கே. (49)

**எவ்விடத்தெவ்வியற்றென்றல்.**

(இ-ள்.) பாங்க னிவ்வாறு கூறியும் தலைவன் வருந்துதலைக்கண்டு இவன் தலைவியைக் கூடாதொழியின் இறந்துபடுமென்று தேறித் தலைவனை நோக்கி நின்னாற் காணப்பட்ட உரு எந்தவிடத்து எந்தவியலை யுடையதென்று வினாவுதல்.

வானகஞ் சூழ்ந்த மகிதலத் துன்மன வன்மையெல்லாந்
தானகற் றற்கெழு மம்மான் றனக்கிடந் தண்ணருட்கோ
ரானகம் போன்றமர் வோன்ஷம்சுத் தாசீ னருஞ்சிகரக்
கானக மோகட லோவிய லேது கழறெனக்கே. (50)

**அவனஃதிவ்விடத்திவ்வியற்றென்றல்.**

(இ-ள்.) தலைவன் என்னால் காணப்பட்டவுரு இந்தவிடத்து இந்த இயலை யுடையதென்று கூறுதல்.

புயலே குழலம் புயமே முகமுடற் பொன்னிடைநூல்
கயலே விழிமுக் கனியே மொழிமுலை கைக்களிறென்
மயலே தருவாட் கியலிட மார்வல மாமழை
பெயலே பெறுகரத் தோன்ஷம்சுத் தாசீன் பெருவனமே. (51)

**பாங்கனிறைவனைத் தேற்றல்.**

(இ-ள்.) இவ்வாறு நீ வருந்தா தொழிக: நீ சொன்ன குறியிடத்துச் சென்ற தலைவியைக் கண்டு யான் வருகிறேனென்று தலைவனைப் பாங்கன் தேற்றல்.

திருவே யமர்புயத் தோன்ஷம்சுத் தாசீன் செழுங்கிரிசேர்
மருவேய் பெருவனத் துன்மன மாள்வித்து மன்னுயிரைப்

*பொருவேல் விழியைப் புலன்கொளு மாசையைப் போந்தறிந்து*
*வருவேன் வருமள வும்பொறுப் பாயென்றன் மன்னவனே.* (52)

### குறிவழிச்சேறல்.

(இ-ள்.) தலைவன்கூறிய குறியிடத்துத் தலைவியைக்காணப்பாங்கன் தேடிப்போதல்.

*முலைப்பகை கண்டு மொழிப்பகை தேடி முழுதுமக்கக்*
*கொலைப்பகை கொய்ய வெழுவள்கொல் லோநறை கூர்வனத்தும்*
*பலைப்பகை கொள்ளுரத் தோன்ஷம்சுத் தாசீன் பனிவரைவாய்க்*
*கலைப்பகை தோட்டுணைக் காவலன் கண்டவக் காரிகையே.* (53)

### இறைவியைக் காண்டல்.

(இ-ள்.) அங்ஙனந் தேடிச் சென்ற பாங்கன் தலைவியைக் காணுதல்.

*வானே முடிவடி வாளே விழிமலர் வாய்வரைதோள்*
*தேனே மொழிமதிச் சீரே முகமுடற் றேகமெங்கு*
*நானே யெனப்புரப் போன்ஷம்சுத் தாசீ னளிர்வரைமின்*
*றானே பெருவனத் தெம்மிறை சொற்றவத் தாழ்குழலே.* (54)

### இகழ்ந்ததற்கிரங்கல்.

(இ-ள்.) தலைவி பேரழகைக் கண்ட பாங்கன் காணாமுன்னம் எம்பெருமானை யறிவின்றியிகழ்ந்தன மென்றிரங்கிக் கூறுதல்.

*தாவுண்டு செல்பரி வேள்ஷம்சுத் தாசீன் றமிழ்வரைவாய்*
*மேவுண்டு வாழுமிவ் வெண்ணகைத் தேமொழி யின்னுதனோக்*
*கேவுண்டு நெஞ்ச மினைவுண்டு வந்தவென் னேந்தலையா*
*னோவுண்டு வாட நுவன்றவெ லாமென்ற னொய்யறிவே.* (55)

### தலைவனை வியத்தல்.

(இ-ள்.) தலைவி கண்வலையிற்சிக்கி அத்தடையோடுந் தலைவன் நம்மிடத்து வந்தது வியப்பென்று பாங்கன் அதிசயித்துக்கூறுதல்.

*பொறையார் பெருந்தனப் பொற்றொடிச் சிற்றிடைப் பூவைமின்னா*
*ணிறையா ரலர்க்குழ னீண்முகி லோடி நிகழ்த்துபன்னூற்*
*குறையா துணர்ந்தவென் கோன்ஷம்சுத் தாசீன் கொழுங்கிரிவாய்*
*மறையா திருந்ததெவ் வாறெம்பி ரான்கலை மாமதியே.* (56)

### இதுவுமது.

*கலைதாண்டி யோங்குமிக் கோன்ஷம்சுத் தாசீன் கனவரைமின்*
*னிலை தாண்டிக் கூந்த னிசிதாண்டித் தேம னிலவுமுலை*

*மலைதாண்டித் தூண்ட மதிதாண்டி யெம்மன் மறிநயன*
*வலைதாண்டிக் காம வலைதாண்டி வந்ததங் கற்புதமே.* (57)

### தலைவியை வியத்தல்.

(இ-ள்.) தலைவியைப் பாங்கன் வியந்து கூறுதல்.

*பருக்கும் பெருமுலைப் பாரத்தி னந்தரப் பற்றொழிந்திங்*
*கிருக்கு மொருமின் னிவள்விழி நோக்கிணை யென்றுமுற்றோர்*
*திருக்குங் கருத்துமொத் தோன்ஷம்சுத் தாசீன் சிலம்பரசைக்*
*கருக்கு மயல்விடக் காய்வுக் கமுதெனக் காத்திடுமே.* (58)

இவ்வைந்தும் பாங்கன்றன்னுட் கூறியவை.

### தலைவன்றனக்குத் தலைவி நிலைகூறல்.

(இ-ள்.) தலைவி குறியிடத்துத் தனித்து நின்றகின்ற நிலையைப் பாங்கன் கண்டுவந்து தலைவனுக்குக் கூறுதல்.

*காவுங்கண் டேன்குழற் காடுங்கண் டேனின்னைக் காத்துறுகட்*
*கோவுங்கண் டேனுடற் கோலங்கண் டேனலங் கூர்பொருளும்*
*பாவுங்கண் டேமகிழ் வோன்ஷம்சுத் தாசீன் பனிவரையாய்*
*யாவுங்கண் டேன்கண்டி லேனிறை வாநின் னியலின்மையே.* (59)

### தலைவன் சேறல்.

(இ-ள்.) தலைவன் பாங்கன் சொற்படி குறியிடத்துப் போதல்.

*மனமாய் விரைந்தவண் மன்னுதற் கேற்ற வழியெதுவு*
*மினமா யறிந்தில மேயக மேசெய்வ தேதெளியோர்*
*தனமா யொளிரும்பு மான்ஷம்சுத் தாசீன் றடஞ்சிலம்பி*
*னனமா யமர்ந்துநிற் பார்தமைக் கூடி யளாவுவதற்கே.* (60)

### தலைவியைக் காண்டல்.

(இ-ள்.) தலைவன் தலைவியைப் பார்த்தல்.

*வற்றாச் சுகிர்தமெய் வாழ்வளித் தென்னுள மன்னிநின்ற*
*முற்றா முகிழ்முலை மொய்குழ லாள்கலை முற்றுமுற்றக்*
*கற்றார்க் கமுதனை யான்ஷம்சுத் தாசீன் கனகவெற்புட்*
*பொற்றா மரையனம் போற்றனி நின்றனள் பூம்புனத்தே.* (61)

### கலவியின் மகிழ்தல்.

(இ-ள்.) புணர்ச்சியின் மகிழ்தல்.

*மெய்யுஞ் செவியும் விழிநாசி வாயும் விரைந்தருத்திப்*
*பெய்யு மமுதப் பிழம்பனை யீரும்மிற் பெற்றசுகம்*

*பொய்யும் புலையுமற் றோன்ஷம்சுத் தாசீன் பொதியவெற்பி*
*லெய்யுங் ககனோ டிகதலத் தாருமிங் கெய்தரிதே.* (62)

### புகழ்தல்.

(இ-ள்.) தலைவன் புணர்ந்தபின் றலைவியைப் புகழ்ந்து கூறுதல்.

*அலைவாய்ப் படிந்தனை யாகமுங் கூனி யறக்குறுகி*
*மலைவா யெழுந்தனை மாசே செறிந்தனை மாமறை நூற்*
*கலைவாய் வருமியல் போன்ஷம்சுத் தாசீன் கனகமலை*
*நிலைவா யிணைமுலை நேர்நுத லொத்திலை நீணிலவே.* (63)

### பாங்கியொடு வருகெனப் பகர்தல்.

(இ-ள்.) இனி நீ யுன்னுயிர்ப்பாங்கியுடனே வருவாயென்று தலைவிக்குத் தலைவன் கூறுதல்.

*கண்ணுக் கிமையுங் கடத்துக் குயிருங் கலந்ததொத்தெம்*
*மெண்ணுக் கருளனை யீரினை நீரிவ ணேகினென்றும்*
*பண்ணுக் கிசைபுக ழோன்ஷம்சுத் தாசீன் பனிவரைவாய்*
*மண்ணுக் கணிசெய்நும் மன்னையர் தம்மொடு மன்னுகவே.* (64)

### பாங்கிற் கூட்டல்.

(இ-ள்.) தலைவன் தலைவியை ஆயத்துச் செலுத்துதல். ஆயம்-மாதர் கூட்டம்.

*கோவா யொளிருங் குளிர்மதி நோக்கிக் குலவுமல்லிப்*
*பூவாய்ப் பொலிவுறப் பூவைநல் லாய்பைம் பொருளனைத்து*
*நாவாய் தருகடற் கோன்ஷம்சுத் தாசீனளிர்வரைவா*
*யேவா தொழுகிநின் னேவல்செய் யாயங்கண் டேய்ந்தருளே.* (65)

இவற்றுள் - முன்னைய மூன்றுஞ் சார்தல் கேட்டல் சாற்றலென்னு மூன்றற்கும், பாங்கன் கழறல் முதல் கிழவோன் வேட்கை தாங்கற் கருமை சாற்றலீறாகிய நான்கும் எதிர்மறைக்கும், பாங்கன்றன் மனத்தழுங்கல் முதல் தலைவன் றனக்குத் தலைவி நிலைகூறலீறாகிய பதினொன்றும் நேர்தற்கும், தலைவன் சேறல் முதல் புகழ்தலீறாகிய நான்கும் கூடற்கும், தலைவன் றலைவியைப் பாங்கியொடு வருகெனப் பகர்தலும் தலைவன் றலைவியைப் பாங்கிற் கூட்டலுமாகிய இரண்டும் பாங்கிற் கூட்டற்கு முரியன.

பாங்கற்கூட்ட முற்றிற்று.

-------

# பாங்கிமதியுடன் பாடு.

அஃதாவது - தலைவி வேறுபாட்டைப் புணர்ச்சியுண்மை யறிந்தாராய்ந்து தோழி தன்மதியை யுடன்படுத்தல்; அது: முன்னுறவுணர்தல் குறையுறவுணர்தல் இருவருமுளவழி யவன்வர வுணர்தலென மூன்று வகைப்படும்; அவற்றுள் - முன்னுறவுணர்தலாவது தலைவனைப் புணர்ந்து மீண்டுவந்து தன் முன்னுற்ற தலைவியின் வேறுபாட்டைப் பாங்கி கண்டு அதனானே கூட்ட முண்மை யறிதல்; அது: வகையின் வகையாய் ஐயமுற்றோர்தல், ஐயந்தீர்தல், பல்வேறு கவர்பொருட் சொல்லி நாடலென மூன்றாம்; அவை வருமாறு:-

### தோற்றத்தாலாராய்தல்.

(இ-ள்.) தலைவி புணர்ச்சியாற் பெற்றதோ ரழகைக் கண்டு பாங்கி சந்தேகித்தல்.

*பந்தாடி யோவம் மணைபயின் றோமலர்ப் பைந்தடத்தின்*
*சிந்தாடி யோபுனற் சேறுசெய் தோதெவ்வர் தீர்தரச்சி*
*னந்தாடி வென்றபு மான்ஷம்சுத் தாசீன கத்தினிடைத்*
*தந்தாடி வாடு முலையிவண் மேனி தளர்ந்ததுவே.* (66)

### ஒழுக்கத்தாலாராய்தல்.

(இ-ள்.) தலைவி தெய்வந்தொழாமை முதலியகண்டு பாங்கி சந்தேகித்தல்.

*சதியாய்ச் சுழன்றெழு சந்தஞ் சரித்தடர் தாம்பிரநன்*
*னதியார் துறையனங் கோன்ஷம்சுத் தாசீ னகத்துளவன்*
*றுதியாய்ப் பெருகிச் சுருணமொத் தேவெண்மை சூழ்ந்துயர்ந்த*
*மதியாய்த் துலங்கு மதியே தொழத் மாதரசே.* (67)

### சுனைநயப்புரைத்தல்.

(இ-ள்.) பாங்கி தலைவி யுள்ள நிகழ்ச்சியை வெளிப்படுத்தச் சுனையினது நன்மையைக் கூறல்.

*அணியுந் திருத்தி யழகும் பொருத்தி யழிதருநற்*
*றுணியு மிருத்தித் துளிநீ ரருத்தித் தொடர்ந்தரசர்*
*பணியும் பதத்தனெம் மான்ஷம்சுத் தாசீன் பதியினலர்க்*
*கணியும் புனைந்ததெங் கண்மணி யீரெக் கவின்சுனையே.* (68)

### சுனைவியந்துரைத்தல்.

(இ-ள்.) பாங்கி அச்சுனை வியப்பை யானுமாடிக் காண்பேனென்று கூறல்.

*காவி சிவந்து கமலம் பசந்து கருதுமல்லி*
*மேவி வெளுத்து விடுமே லடியேன் விளங்குமொன்னா*
*ராவி யகற்றுமெம் மான்ஷம்சுத் தாசீ னணிவரைவாய்த்*
*தாவி யொளிருமின் னேகுடை வேனந்தத் தண்சுனையே.* (69)

### தகையணங்குறுத்தல்.

(இ-ள்.) தலைவியினது வேற்றழகு கண்டு அவளைத் தெய்வப் பெண்ணாகப் பாங்கி வலியுறுத்திக் கூறுதல்.

*காவே புகுந்து கழங்காடி யாடிக் கதித்தசுனைப்*
*பூவே கொணருமென் பொன்னுருப் போன்றுமிப் பூதலத்தோர்*
*கோவே யெனவரு வோன்ஷம்சுத் தாசீன் குலக்கிரிமின்*
*றேவே வெளுத்திதழ் மெய்பசந் தக்கஞ் சிவந்தனையே.* (70)

### நடுங்க நாட்டம்.

(இ-ள்.) தலைவி நடுங்கத்தக்கதாகப் பாங்கி யாராய்தல்.

*பொய்யா மொழித்திறத் தோன்ஷம்சுத் தாசீன் பொதியைமலர்ச்*
*செய்யா ளெனவொளிர் சேயிழை யீரவன் செம்பொன்மழை*
*பெய்யா விருந்து பிறங்கிச் சிவந்த பெருங்கரம்போன்*
*மையார் களிற்றொரு கோடுகண் டேமன மாழ்கினனே.* (71)

இத்துணையு மூன்றாநாள் நிகழ்ச்சி யென்க.

-------

## குறையுறவுணர்தல்.

அஃதாவது - தலைவன் தழை முதலியவற்றைக் கொண்டு தன்பாற் குறை யுற்று நிற்பக் கண்டு பாங்கி அதனானே கூட்டமுண்டென்றறிதல்; அது: தேர்தல் தெளிதலென இருவகைப்படும். தேர்தல்-ஆராய்ச்சி செய்தல். அவை வருமாறு:-

### பெட்டவாயில் பெற்றிரவு வலியுறுத்தல்.

(இ-ள்.) இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்னர்ப் பிரிவுழிக் கலங்கலின் வாயில் பெற்றுய்தலென ஆண்டு விரும்பப்பட்ட பாங்கியைத் தலைவன் தூதாகப் பெற்றுக் குறையிரத்தலை வற்புறுத்திக் கூறுதல்.

*பொருளா லறமும் பொலிவாற் புகழும் பொருந்துறல்போற்*
*றெருளா லுயர்ந்தபி ரான்ஷம்சுத் தாசீன் செழுஞ்சிலம்பி*
*லிருளா மதிமுகத் தேந்திழை தன்னுயி ரென்னுமிவ*
*ளருளாற் பெறலா மகமே யவட னருந்தனமே.* (72)

### ஊர் வினாதல்.

(இ-ள்.) தலைவன் கண்ணியுந் தழையுமேந்திக் குறையுற்றவன் போலவந்து நின்று ஊர்யாதென்று பாங்கியைக் கேட்டல்.

*மதியே நிகர்த்த மலர்முகத் தீர்வண்மை வாயந்தவிரு*
*நிதியே யெனவருள் வோன்ஷம்சுத் தாசீ னெடுவரைக்கோர்*

புதியேன் றனியிவண் போந்தன னும்மிற் பொலிவறுமப்
பதியே துரையீர் பகரிற் சிதறுங்கொல் பான்முத்தமே. (73)

**பெயர் வினாதல்.**

(இ-ள்.) வெளி.

காரே யனைய கருங்குழ லீர்நற் கனகமணிச்
சீரே பெறுகழ லோன்ஷம்சுத் தாசீன் செழுஞ்சிலம்பி
லூரே யுரைக்ககி லீருமக் கின்றுவந் துற்றதிருப்
பேரேனு மோதுதி ரேழையென் மீது பிரியமுற்றே. (74)

**கெடுதிவினாதல்.**

(இ-ள்.) கெட்ட பொருளைத் தலைவன் பாங்கியிடத்தில் வினாவுதல்.

துப்புண்டு சேக்குந் துவரித ழீரென் சுடர்க்கணைமுன்
றப்புண் டடிக்கடி தாவன் டொருமான் றரணிமுற்று
மொப்புண் டொளிர்புயத் தோன்ஷம்சுத் தாசீ னுயர்வரைவாய்
வெப்புண் டொழித்துறக் கண்டதுண் டோவிள்ளு வீரெமக்கே. (75)

**வழிவினாதல்.**

(இ-ள்.) தலைவன் றான்செல்லும் வழியைப் பாங்கியிடங் கேட்டல்.

கல்லுங் கருதுங் கனதனத் தீரொளி கண்டுகதி
ரெல்லும் பணிமுடி யோன்ஷம்சுத் தாசீ னிருஞ்சிலம்பிற்
செல்லும் வழிதெரி யேன்றிகைத் தேனுளந் தேர்ந்தகலச்
சொல்லு மொருவழி சொன்னா லிலையிலைச் சூழ்பிழையே. (76)

**ஒழிந்தது வினாதல்.**

(இ-ள்.) பாங்கி யொன்றும் பேசாதிருத்தலைத் தலைவன் கேட்டல்.

பெருவாய்ப் பிடிநடைப் பெண்ணணங் கீர்விண் பிறங்குமஞ்சு
தருவாய்த் தினந்தரு வோன்ஷம்சுத் தாசீன் றமிழ்ச்சிலம்பின்
மருவாய்க் கமல மலர்கண்டு வாடு மதிமுகத்துந்
திருவாய் திறந்தொரு செய்திசொன் னாலென்ன தீவினையே. (77)

**யாரே யிவர் மனத்தெண்ணம் யாதெனத் தேர்தல்.**

(இ-ள்.) மேற்கூறியவாறு கண்ணியுந் தழையு மேந்திவந்து ஊர் முதலியவை வினாவி நின்றவர் யாவரோ? இவர் மனத்தினினைப்பு யாதோ? எனப்பாங்கி தன்மனத்தில் ஆராய்ச்சி செய்தல்.

*ஊரும் பெயரு முரைவழி யாதின் றுழன்றொருமான்*
*றேரும் படியிவண் சென்றதுண் டோவென்பர் திக்கெட்டுமிப்*
*பாரும் புகழ்வளர்த் தோன்ஷம்சுத் தாசீன் பனிவரைசேர்ந்*
*தாருங் கருத்துமிங் காரென்னை யுற்றது மாய்ந்திலமே.* (78)

**எண்ணந்தெளிதல்.**

(இ-ள்.) தலைவனினைப்பைப் பாங்கி தெளிதல்.

*ஊரும் பெயரு முழையும் வழியு முவந்தவரன்*
*றாரும் புகழும்பு மான்ஷம்சுத் தாசீ னணிவரைவா*
*யேருங் குணமு மிசையும் பெருகிவ ளேயந்தவிள*
*நீருங் கனியு நினைந்தவர் காம நெடும்பசிக்கே.* (79)

--------

## இருவருமுளவழி யவன்வரவுணர்தல்.

அஃதாவது - தலைவியுந் தானுமொருங்கிருந்த விடத்தில் தலைவன்றனி வரப் பாங்கி கண்டு அதனானே கலப்புண்மையறிதல், அதன் விரி வருமாறு:-

**தலைவன் கையுறையேந்தி வருதல்.**

(இ-ள்.) தலைவியும் பாங்கியுஞ் சேர்ந்திருப்பது கண்டு தலைவன் கையுறை யேந்தி வருதல். கையுறை - காட்சிப் பொருள்.

*விண்பட்ட சோமனும் வெண்மையும் போலவிம் மேதினிக்கோர்*
*பண்பட்ட வள்ளல்பு மான்ஷம்சுத் தாசீன் பனிவரைவாய்த்*
*தண்பட்ட தேமொழி யாரிருந் தாரிது தான்சமயந்*
*புண்பட்ட காதற் பொலிவுற யாவும் புகலுதற்கே.* (80)

**தலைவனவ்வகை வினாதல்.**

(இ-ள்.) தலைவன் முன் கெடுதி வினாவியது போல் மீண்டும் யானை வந்ததோ? வென்று வினாவல்.

*பொய்ப்புண் டொளிரிடைப் பூவையன் னீருங்கட் புங்கமங்கண்*
*வைப்புண் டவிர்புய மால்ஷம்சுத் தாசீன் மலையவெற்பிற்*
*றைப்புண் டிரத்தந் ததும்புண்டு வாடித் தளர்ந்துளமிக்*
*கெய்ப்புண் டிரிந்திவண் வந்ததுண் டோவெ ரிருங்களிறே.* (81)

**எதிர்மொழி கொடுத்தல்.**

(இ-ள்.) பாங்கி தலைவன் வினாவுக்கு விடை கூறுதல்.

*என்னுயிர் மாதங்க மன்றியொர் மாதங்க மீர்ங்கணையுந்*
*தன்னுயி ருங்கொடு சார்ந்ததின் றாலென்றுந் தாரணிக்கோர்*
*மன்னுயிர் மாணவந் தோன்ஷம்சுத் தாசீன் மணிவரைவாய்ப்*
*பொன்னுயிர் போலும் புனிதமற் றேது புகலுதற்கே.* (82)

### இறைவனை நகுதல்.

(இ-ள்.) தலைவனப்பாற் சென்றானாகப் பாங்கி தலைவியை நோக்கி அசதியாடல். அசதியாடல் - சிரித்துப் பேசுதல்.

*தழையா லொருகரி தாண்படு மோகடற் றாணியின்*
*மழையா லிருமர மாய்வுறு மோவிவர் மாற்றமென்றுங்*
*குழையாப் பெருந்தவக் கோன்ஷம்சுத் தாசீன் குளிர்வரைவாய்ப்*
*பிழையாங் கபடாம் பிரித்தெடுத் தாயினெம் பெண்ணணங்கே.* (83)

### பாங்கி மதியி னவரவர் மனக்கருத்துணர்தல்.

(இ-ள்.) பாங்கி தன்னறிவால் தலைவன் தலைவியென்ற இருவர் மனக்குறிப்பை யாராய்தல்.

*வாயாற் கலையும் வனைவாற் புனமு மகிழ்ந்திருவ*
*ராயா வறினு மகமோ மயல்கொண் டலைதருங்கண்*
*ணோயா துறுகுறை யாவு முரைக்கு முலகனைத்துந்*
*தாயாய்ப் புரந்தளிப் போன்ஷம்சுத் தாசீன் றடத்தகத்தே.* (84)

இவ்வைந்து மிருவருமுளவழி யவன் வரவுணர்தலின் விரியென்க.

பாங்கிமதி யுடன் பாடு - முற்றிற்று.

-------

## பாங்கியிற் கூட்டம்

அஃதாவது - பாங்கியாற் கூட்டுவிக்கத் தலைவன் தலைவியைக் கூடுங் கூட்டம், அஃது இரந்து பின்னிற்றல் சேட்படை மடற்கூற்று மடல்விலக்கு உடன்படல் மடற்கூற்றொழிதல் குறைநயப்பித்தல் நயத்தல் கூட்டல் கூடல் ஆயங்கூட்டல் வேட்டல் எனப் பன்னிரண்டு வகையினை யுடைத்து; அவை வருமாறு:-

### தலைவ னுட்கோள் சாற்றல்.

(இ-ள்.) தலைவன் தான் தன்னுள்ளத்தின்கட் கொண்ட காதலைக் கூறுதல்.

*கண்டே நிகர்த்த கனிமொழி யீர்சொலிற் கற்பகமுங்*
*கொண்டே வருவ லிருநிதி யென்னோ குறுகலர்நாற்*

றண்டே பணிபதத் தோன்ஷம்சுத் தாசீன் றடத்திடைநுந்
தொண்டே பணிப்பத் துணைபுரிந் தாலுண்டென் றோத்திரமே. (85)

**பாங்கிகுலமுறை கிளத்தல்.**

(இ-ள்.) தலைவன் இவ்வாறு கூறியதற்குப் பாங்கி குலமுறைமையா லியையாதென மறுத்துக் கூறுதல்.

புனமே புவனம் பொதுவறக் காத்திவண் போந்தநுந்தங்
கனமே சிறுமை கருதிலை நாளுங் கருதலர்க்கு
வனமே தரும்பெரு மான்ஷம்சுத் தாசீன் மலையவெற்பி
லினமே யறிதி யிழிந்தோர்க் குயர்ந்தோ ரியைபிலரே. (86)

**தலைவன் றலைவி தன்னை யுயர்த்தல்.**

(இ-ள்.) தலைவன் தலைவியை யுயர்த்திக் கூறுதல்.

சிப்பியின் முத்தமுஞ் சேற்றுண் மரையுஞ் செனித்திடினு
மொப்பியிங் கேற்கில் ருண்டுகொ லோவுல குங்ககனுஞ்
செப்பிய மாதவத் தோன்ஷம்சுத் தாசீன் சிலம்பணையீ
ரப்பிய நன்னல மல்லா லிலைகுல மாயிழைக்கே. (87)

**பாங்கி யறியாள்போன்று வினாதல்.**

(இ-ள்.) தலைவன் தலைவியிடத்துக் காதல்கொண்ட தறியாள் போல நீ எவளிடத்துக் காதல்கொண்டாயெனப் பாங்கி வினாதல்.

சுனையும் பொழில்கழுங் கூசல்பந் தோடலர் சூழ்ந்தெழிலம்
மனையும் பயிலுநர் பற்பல ரான்மத மாரிசிந்தி
முனையுங் கடகளிற் றோன்ஷம்சுத் தாசீன் முழுமலைக்கென்
றனையு மறைத்துனைத் தான்மறை யாரெவர் தார்மன்னனே. (88)

**இறையோனிறைவி தன்மை யியம்பல்.**

(இ-ள்.) தலைவன் தான் காதலித்த தலைவி தன்மை கூறுதல். தன்மை - இலக்கணம்.

மருளும் பிணைவிழி மாகுஞ் சரமுலை வாய்குமுத
மிருளும் புயல்குழ லேதின் மதிமுக மென்றுமின்று
மருளுந் திருக்கரத் தான்ஷம்சுத் தாசீ னருட்சிலம்பிற்
றெருளும் பொலிவுங்கொள் சேயிழை யேயென்றன் றேமொழிக்கே. (89)

### பாங்கி தலைவி யருமை சாற்றல்.

(இ-ள்.) தலைவி கிடைத்தற்கரியளென்று பாங்கி கூறுதல்.

அறிவே யுருவா யவதரித் தெங்க ளருந்தவத்தின்
செறிவே யெனவருந் தெய்வத மின்முன் சினந்தெதிர்ந்தோர்
முறிவே தரப்பொரு தோன்ஷம்சுத் தாசீன் முதிர்கிரியீர்
பிறிவே தருமுறை யாதொன்றும் யாமங்குப் பேசரிதே. (90)

### தலைவனின்றியமையாமை யியம்பல்.

(இ-ள்.) தலைவியல்லாது வாழ்வெனக்கில்லையெனத் தலைவன் கூறுதல்.

சொன்னமி லாது சுகம்வரு மோவென்றுஞ் சூழ்ந்தரசர்
சின்னமி லாதழிப் போன்ஷம்சுத் தாசீன் செழுங்கிரிவாய்ப்
பின்னமி லாதொளிர் பேரரு ளீர்கைப் பிடிபடுமோ
ரன்னமி லாதின் றமையுங்கொ லோவென்ற னாருயிரே. (91)

### பாங்கி நின்குறை நீயேசென்றுரையென்றல்.

(இ-ள்.) தலைவயினிடத்து நினக்கு வேண்டுவனவற்றை நீயே சொல்லென்று பாங்கி கூறுதல்.

வாயே யெவர்க்கும் வருங்குறை சொற்றிட வாய்த்துளதிந்
நாயே னெதற்கு நவிலவொ ணாதுற்ற நற்றமிழ்க்கோர்
தாயே யெனவருள் வோன்ஷம்சுத் தாசீன் றனிச்சிலம்பி
னீயே நிகழ்த்துக நின்குறை யாவுமந் நேரிழைக்கே. (92)

### பாங்கியைத் தலைவன் பழித்தல்.

(இ-ள்.) தலைவன் பாங்கியை நிந்தித்துக் கூறுதல்.

செயலா லுயர்ந்தபு மான்ஷம்சுத் தாசீன் சிமையமின்னின்
கயலர யமர்ந்த கடுவிழி பாய்ந்து கலங்குமென்றன்
மயலாங் கனற்கு மழையாய் நினைத்தநின் வார்த்தைமுற்றும்
புயலாய் முடிந்தது பூவையன் னீரென்ன புத்தியிதே. (93)

குறையுறவுணர்தன் முதலிதுகாறு நான்காநாள் நிகழ்ச்சியென் றுணர்க.

### பாங்கி பேதைமை யூட்டல்.

(இ-ள்.) தலைவி பிறர்துயரமறியாளென அவளது பேதைமையைப்பாங்கி தலைவனுளங் கொளச்சாற்றல்.

பாரார் பழிச்சும்பு மான்ஷம்சுத் தாசீன் பதிக்கரசே
காரார் கரிகலை மான்முத லாம்பல கான்விலங்கை

யோரா துறவதைத் தூனுணும் வேட ருவந்தளித்த
கூரா ரயில்விழி நின்னோ வறியுங் குணமிலளே. (94)

**காதலன்றலைவி முதறிவுடைமை மொழிதல்.**

(இ-ள்.) அவ்வாறு கூறிய பாங்கியை நோக்கி முதிர்ந்த அறிவினையுடையாள் தலைவியாதலின் அவளை யங்ஙனங் கூறற் பாலையல்லையென்று தலைவன் கூறுதல்.

வாயா லுலகம் வழுத்துந்தம் மெண்ண மறிவிழிகொண்
டோயா துரைத்தெனக் குன்னையுந் தந்துடைந் தோடுநரைத்
தாயாய்ப் புரந்தருள் வோன்ஷம்சுத் தாசீன் சயிலமன்னா
யேயா மதனைய மேயவட் கோவில்லை யீங்குணமே (95)

**பாங்கிமுன்னுறு புணர்ச்சி முறையுறக்கூறல்.**

(இ-ள்.) இவ்வாறு கூறக்கேட்ட பாங்கி முன் நின்வேட்கை தீர்த்தாளென்ற கூறினையே? அங்ஙனமேயின்னங்கூடுகவென்று கூறுதல்.

முன்னா லறிந்தநின் முற்றிழை தன்னை முடுகுதற்குப்
பின்னா லொருதுணை வேண்டுங்கொ லோபுவிப் பெண்ணணங்கின்
மன்னா யுதித்தபு மான்ஷம்சுத் தாசீன் மலையவெற்ப
தன்னால் வருந்துயர் தானறி வாளங்குச் சாருதியே. (96)

**தன்னிலை தலைவன் சாற்றல்.**

(இ-ள்.) அதுகேட்டதலைவன் வேட்கை நோயால் வருந்துந்தன்னிலைமையைப் பாங்கிக்குக் கூறுதல்.

கடலிற் படிந்தெழு காவகம் புக்குக் கனிந்ததென்ற
லுடலிற் புகப்புணைந் தாலுந்தன் சீர்த்தி யுலகனைத்து
நடலிற் பெரியபு மான்ஷம்சுத் தாசீனன் னாடனையீர்
விடலி லவண்மயல் வெந்தீக் குனையன்றி வேறிலையே. (97)

**பாங்கியுலகியலுரைத்தல்.**

(இ-ள்.) உலகில் வேட்கை கொண்டார் சான்றோரை முன்னிட்டு வரைந்து கொள்வர். அவ்வா றுலகியலாதலால் நீயும்வரைந்து கொள்கவெனப் பாங்கி கூறுதல்.

மறையார் மொழிப்படி மானிலத் தெங்கு மகிழ்வுறநன்
னிறையார் கனிதரு நீண்மணங் காண்பது நேர்மையல்லாற்
பொறையார் சுகுணப்பு மான்ஷம்சுத் தாசீன் பொதியவெற்பிற்
குறையார் மொழிபல கூறிலென் னோவுயர் கொற்றவனே. (98)

### தலைமகன் மறுத்தல்.

(இ-ள்.) அவ்வுலகியலைத் தலைவன் வேட்கையாற்றானாய் மறுத்தல்.

வருத்தி மயக்கு மயனோ யளித்தவம் மாதரசை
விருத்தி யுறவரைந் தேற்றிடேன் றாயிது வெற்றரைக்குச்
செருத்தி யிளம்பிறைச் சேய்ஷம்சுத் தாசீன் சிமையமன்னாய்
பருத்தி விதைத்துப் படங்கொள நாடுமப் பான்மையன்றே. (99)

### பாங்கியஞ்சியச்சுறுத்தல்.

(இ-ள்.) பாங்கி இந்நிகழ்ச்சி பிறரறிவரென்று பயந்தவளாய்த் தலைவனை அப்புனம் விட்டுப் போக அச்சமுறுத்திக் கூறுதல்.

மாலையும் வந்ததெம் மன்னர்பொல் லார்வந்து வாய்ந்தவறச்
சாலையு நாடுமுள் ளோன்ஷம்சுத் தாசீன் றடஞ்சிலம்பிற்
சோலையுங் கொல்லையுஞ் சூழ்வர்வி டாரகல் சூரனுமவ்
வேலையுட் போந்தன னிற்கிங்கென் வேலையிவ் வேலையிலே. (100)

### தலைவன் கையுறை புகழ்தல்.

(இ-ள்.) இனிக்காலந் தாழ்த்தலாகாதென்று தான்கொண்டுவந்த கையுறையைத் தலைவன் புகழ்ந்து கூறுதல்.

தழையே யுடைக்குத் தரள முலைக்குத் தகுமலர்நும்
மழையேய் குழற்கு வளைக்குக் குவளை மகிழ்ந்துலகம்
பிழையே யறப்புரப் போன்ஷம்சுத் தாசீன் பெருஞ்சிலம்பிற்
கழையே பொருபுயத் தீர்கொணர்ந் தேன்கொளுங் கையகத்தே. (101)

### பாங்கி கையுறை மறுத்தல்.

(இ-ள்.) அங்ஙனம் புகழப்பட்ட கையுறையைப் பாங்கி யிகழ்ந்து மறுத்துக் கூறுதல்.

ஈவ துயர்வினி யேற்ப திழிவென வெங்குமுரை
யாவ தறிந்தன மாவியு மேற்கில மாய்ந்தெளியோர்
மேவ வறைபறை வேள்ஷம்சுத் தாசீன் வியன்சிலம்பிற்
றேவ மறக்குலம் யாமெமக் கேனிவை தேர்மன்னனே. (102)

### ஆற்று நெஞ்சினோடவன் புலத்தல்.

(இ-ள்.) பாங்கி மறுத்தலைச் சகியாத நெஞ்சுடனே தலைவன் வருந்திக் கூறுதல்.

என்செய்த தோமன மேதழை நம்போ லிருந்துலர்ந்து
மின்செய்த வேல்விழி வேண்டா தொறுத்து விரிமலர்சேர்

*பொன்செய்த மார்பன்பு மான்ஷம்சுத் தாசீன் பொதியவெற்பிற்*
*கொன்செய்த வன்சொற் கொழுங்கணற் கேநம்மைக் கூட்டினளே.* (103)

**பாங்கி யாற்றுவித் தகற்றல்.**

(இ-ள்.) இங்ஙனம் வருந்துதலைக் கண்ட பாங்கி தலைவனையஞ்சாதே! நாளைவாவெனக் கூறிவிடுத்தல்.

*குடியிற் பிறங்குங் குலக்கொழுந் தாமென்றன் கொற்றவைசிற்*
*றடியிற் பணிந்தங் கமைவன சொற்றின் றகன் றரார்*
*முடியிற் படுபதத் தோன்ஷம்சுத் தாசீன் முதிர்கிரிவாய்*
*விடியிற் பெறுவலுன் கைத்தழை போதிவெவ் வேற்கிறையே.* (104)

இவற்றுள் - தலைவன் கூற்றாயினவெல்லாம் இரந்துபின்னிற்றற்கும்; பாங்கி கூற்றாயினவெல்லாஞ் சேட்படுத்தற்கு முரியன. இதுகாறும் ஐந்தா நாள் நிகழ்ச்சி யென்க.

**இரந்து குறைபெறாது வருந்திய கிழவோன்**
**மடலே பொருளென மதித்தல்,**

(இ-ள்.) மறுநாட் காலையில் வந்த தலைவன் பாங்கியாற் காரியமின்றெனக்கருதி இரந்து குறைமுடியா தாயினோமென்று வருத்தமுற்று இனி நமக்குப் பொருளாவது ★ மடலேறலேயெனத் தன்னுள்ளே மதித்துக் கூறுதல்.

*மாறாக் கொடிய மயலஞர் கொண்டு மயங்கிநெஞ்சே*
*நீறாக் கரிந்த நெடுந்துயர்க் கேதிலர் நீடுமுடற்*
*கூறாக் கயிற்கரக் கோன்ஷம்சுத் தாசீன் குளிர்வரைவாய்ப்*
*பேறார்சுஞ் சீவிநிப் பெண்ணையல் லாலில்லைப் பேசுதற்கே.* (105)

**பாங்கிக்குலகின் மேல் வைத்துரைத்தல்.**

(இ-ள்.) தலைவன் அம்மடலேற்றினை உலகின் மேல் வைத்துப்பாங்கிக்குக் கூறுதல்.

*வீணா யொருத்திசெய் காமவெந் தீயுண் மிடைமிடைந்தோர்*
*தூணா யிருந்து துயரடைந் தோரென்றுஞ் சொன்னமணிப்*
*பூணா ரிணைப்புயத் தோன்ஷம்சுத் தாசீன் பொதியவெற்பி*
*லூணா ருயர்பனை யூர்ந்துறு வாரந்த வொண்டொடியே.* (106)

★ மடலேறலாவது - பனங்கருக்காற் குதிரையும் பனந்தருவினுள்ளன வற்றால் வண்டி முதலானவுஞ்செய்து அக்குதிரையின்மேலேறுவது. அங்ஙன மேறுவான் றிகம்பரனாய்த் தான் காமித்த தலைவியினுருவை யொருபடத்திற் றன்கையாலெழுதி அப்படத்தின் றலையிலே தன்பெயரை யெழுதித் தன்கையிற் பிடித்து நடுவூருள்ளே நாற்சந்தி லாகார நித்திரையின்றி அப்படத்தின்மேற் பார்வையையு மனத்தையுமிருத்தி ஆசைவயத்தனாய் வேறுணர்ச்சியின்றி ஆவுரிஞ்சினும் அழல்மேற்படினுமறிதலின்றி மழைவெயில் காற்றான் மயங்கா திருப்புழி, அவற்றைக் கண்ட அவ்வூரிலுள்ளோர் பலருங்கூடி வந்து நீ மடலேறிச்

சோதனை தந்தால் நீ யிச்சித்த பெண்ணைக் கொடுக்கச் செய்வோமென்று கூற, அதற்கவ னிசைந்தானாயி னரசனுக் கறிவித்து அவனேவலால் ஏறவேண்டு; அங்ஙனமேறும்போது பூளையெலும்பு எருக்கம்பூ இவைகளாற் கட்டிய மாலை புனைந்து கொள்ளல் வேண்டும். அக்குதிரையின் வடத்தை யிழுத்தலும், அக்குதிரையந்திரத் தினுருளை யுருண்டோடும் போது பனங்கருக்கு அறுத்த விடமெல்லாம் இரத்தம் வெளிப்படாது வீரியம் வெளிப்படின் அப்போ தவளை யலங்கரித்து அவனுக்கு அரசன் கொடுக்கச் செய்தல் வேண்டும். இரத்தம் வெளிப்படி லவனை யரசனாற் கொலை செய்துவிடல் வேண்டும் என்பன புலவரா னிருமிக்கப்பட்ட வழக்கு.

**தலைவன் றன்மேல் வைத்துரைத்தல்**

(இ-ள்.) தலைவன் அம்மடலேறுவேனென்று பாங்கிக்குக் கூறுதல்

*வேலையி னோங்குமிக் கோன்ஷம்சுத் தாசீன் வியனசலச்*
*சோலையி லாடும்பைந் தோகையன் னீர்மடல் சூழ்ந்தெருக்க*
*மாலையும் பூளையு மற்றவும் பூண்டினி மன்னுமதி*
*காலையி லும்மூர் வலம்வரு வேனும்மைக் காண்பதற்கே.* (107)

**பாங்கி தலைமகளவயவத்தருமை சாற்றல்.**

(இ-ள்.) அவ்வாறு கூறக்கேட்ட பாங்கி படமெழுதியபின்னன்றோ? மடலேறுவது. ஆதலால் தலைவியவயவந் தீட்டுதற் கருமையென்று கூறுதல்.

*குடையு மரசுங்கொள் கோன்ஷம்சுத் தாசீன் கொழுங்கிரிவா*
*படையுமென் காரிகை கோவையந் தாதி யனைத்துமொரு*
*தடையும் வராம லெழுதினு நன்னூல் தருமியலு*
*நடையு முரையு மெழுதலெவ் வாறு நவிற்றரசே.* (108)

**தலைமகன் றன்னைத்தானே புகழ்தல்.**

(இ-ள்.) இவ்வாறெழுத லரிதென்று கூறிய பாங்கியைநோக்கித் தலைவன் றன்னைத்தானே புகழ்ந்து கூறுதல்.

*மண்டலத் தோர்பெரு மான்ஷம்சுத் தாசீன் மலையநிலை*
*கொண்டவர்க் காகாக் குறையுள தோவின்றென் கூர்ங்கரத்தால்*
*விண்டமின் வேய்ந் தொளிர் காயமுஞ் சொர்க்கமு மேவிடைபல்*
*லண்டமு முள்ளுரு வோடமைப் பேமெமக் காரிணையே.* (109)

**பாங்கி யருளியல் கிளத்தல்.**

(இ-ள்.) அவ்வாறு தலைவன் கூறக்கேட்ட பாங்கி அருண்முறைமை கூறுதல்.

*விண்ணைப் பழித்தகை யான்ஷம்சுத் தாசீன் மிளிர்தடத்தென்*
*கண்ணைப் பொருவுகண் ணாளபல் லண்டமுங் காணுயிரு*
*மண்ணைப் பிரிந்து மறுகுற நீகொளும் வன்னெஞ்சினிப்*
*பெண்ணைக்கொன் றோவொரு பெண்ணைக் கொளலென்ன பேரருளே.* (110)

**பாங்கி கொண்டுநிலை கூறல்.**

(இ-ள்.) தலைவனுயிரைத் தாங்கிக் கொண்டு நிற்கு நிலைமையாகிய மொழியைப் பாங்கி கூறுதல்.

ஆகுங் கருமமின் றேதெனில் யான்சென் றடுத்தடுத்துன்
னோகுங் கரும நுவலுவ லன்னவ ளுண்டிறனும்
வாகும் படைத்தபு மான்ஷம்சுத் தாசீன் மலையவெற்பி
லீகும் பதிலறிந் தேற்பன காணென் னியலரசே. (111)

இவற்றுள் - தலைவன் கூற்றாயின வெல்லா மடற்கூற்றிற்கும் பாங்கி கூற்றாயின வெல்லா மடல்விலக்கிற்கு முரியன.

**தலைவியிளமைத்தன்மை பாங்கி தலைவற்குணர்த்தல்.**

(இ-ள்.) பாங்கி தலைவியனது மங்கைப்பருவ நிரம்பாமையைத் தலைவனுக்குக் கூறுதல்.

முலையோ பருத்தில மொழியோ நிறைந்தில முற்றுமங்கண்
கொலையோ பழகில கூந்தற் றிகைந்தில கூடலர்வெண்
டலையோ டமரயிற் கோன்ஷம்சுத் தாசீன் றடத்துறுபைங்
கலையோ வுடுக்கறி யாளிவண் மாட்டென் கவலுவகே. (112)

**தலைவன்றலைவி வருத்தியவண்ண முரைத்தல்**

(இ-ள்.) அங்ஙனங் கூறிய இளமைப்பருவமே தன்னை வருத்திய விதத்தைத் தலைவன் பாங்கிக்குக் கூறுதல்.

புள்ளிற் பொலியும் புணர்முலை யிர்மதன் பூவரும்போ
டெள்ளின் முலையரும் பேவுற் றிழைத்துழ வென்னுயிர்க்கே
விள்ளிற் பெருமத வேள்ஷம்சுத் தாசீன் மிளிர்வரைவாய்
முள்ளின் முனையென மொய்த்துள தாற்கொலை மொய்விழிக்கே. (113)

**பாங்கி செவ்வியருமை செப்பல்.**

(இ-ள்.) பாங்கி தலைவியின் சமையத்தினருமை தலைவனுக்குக் கூறுதல்.

சுனையுந் தடமுஞ் சுகமும் பணியுந் துணியுநல்லம்
மனையும் பொழிலு மறந்தன ளேயுற்ற மாற்றலர்மேன்
முனையும் பெருந்தளத் தோன்ஷம்சுத் தாசீன் முதிர்சிலம்ப
நினையும் படியவட் கிங்கொன்கொ லோயா .னிகழ்த்துவதே. (114)

**தலைவன் செவ்வியெளிமை செப்பல்.**

(இ-ள்.) தலைவன் றன்குறை சொல்லுதற்குத் தலைவி சமையமெளிதெனக் கூறுதல்.

*ஒருகான் மறந்துரைத் தாலுமென் பேருவந் தோடிவந்துன்*
*னருகாய்த் தழுவி யறைகில ளேது மணிமகுடந்*
*தருநாற் றழும்புடைக் கோன்ஷம்சுத் தாசீன் றடவரைவா*
*யிருகா லியம்பிலென் னாமிவை யாமுனிங் கேய்ந்திடுமே.* (115)

**பாங்கி யென்னை மறைத்தபின் னெளிதென நகுதல்.**

(இ-ள்.) நீவி ரிருவரு மெனக்குத் தெரியாமன் மனமொத்துக் கலந்தபின் இக்களவொழுக்க மொழுகுதற் கினியெளிதென நகையாடிப் பாங்கி கூறுதல்; எனவே யென்னையன்றி யுங்கள் களவொழுக்க நிகழாதென்பது குறிப்பாற் பெறப்பட்டது.

*நகமுஞ் சதையுமுண் ணண்ணினுந் தோரை நடுவிருந்துள்*
*ளகமும் புறமு மளிப்பதொத் துங்க ளருநினைவுக்*
*கிகமும் பரமும் புகழ்ஷம்சுத் தாசீ னெழிற்சிலம்ப*
*சுகமும் பொலிவு மெனையல துண்டுகொல் சொல்லுதற்கே.* (116)

**அந்நகை பொறாஅதவன் புலம்பல்.**

(இ-ள்.) பாங்கி நகையாடிக் கூறுதல் சகியாமற்றலைவன் வருந்திக் கூறுதல்.

*வெள்ளத்துண் மூழ்கி மிதக்குநர் மேற்கல் விரைந்திருத்திப்*
*பள்ளத்து ளாழ்த்துமப் பான்மையன் றோசெழும் பைந்தமிழோ*
*ருள்ளத்துள் வாழும்பு மான்ஷம்சுத் தாசீ னுலகவள்கட்*
*கள்ளத்துண் மாழ்கு மெனைநகைத் திங்ஙன் கலக்குவதே.* (117)

**பாங்கி தலைவனைத் தேற்றல்.**

(இ-ள்.) அங்ஙனம் வருந்திய தலைவனைப் பாங்கி நின்கருத்து முடிப்பலெனத் தெளிவித்தல்.

*என்னுயி ரன்னவ ளின்னுயிர் யானென் றிருப்பதல்லாற்*
*பின்னுயிர் வேறொன் றிலைசொலு மன்னதிப் பேருலகந்*
*தன்னுயி ரென்னுமெம் மான்ஷம்சுத் தாசீன் றடநகரோய்*
*நின்னுயிர் வாடி நிலைகுலை யேல்சுக நேர்வருமே.* (118)

**பாங்கி கையுறை யேற்றல்.**

(இ-ள்.) தலைவன் கொடுத்த காட்சிப் பொருளைப் பாங்கி யங்கீகரித்து வாங்கிக் கொள்ளுதல்.

*விதியே வலிதென மேதினி கூறுமம் மெய்ம்மொழிசம்*
*மதியே யெனவித் தழையான் மதித்தனம் வான்புவிக்கோர்*

*பதியே யெனவொளிர் வோன்ஷம்சுத் தாசீன் பனிவரைவாய்த்*
*துதியே பயிற்கரத் தோயருள் வாய்சென்று சூட்டுதற்கே.* (119)

**கிழவோனாற்றல்.**

(இ-ள்.) தலைவன் துன்ப நீங்கிச் சொல்லுதல்.

*பொய்க்கொண்ட வன்மொழி போதித் தலைவித்த புன்மையெல்லா*
*மெய்க்கொண்ட வன்பன்றி வேறிலைப் பூந்தலை வேட்டிருநீர்ச்*
*செய்க்கொண்ட ஹாமீம் புரஷம்சுத் தாசீன் சிலம்பிலெம்மைக்*
*கைக்கொண்ட வட்குற்ற கைம்மாறு யாதொன்றுங் காண்கிலமே.* (120)

இவற்றுள் - பாங்கி கூற்றாயின வெல்லாம் குறைநேர்தற்குந் தலைவன் கூற்றாயின வெல்லா மடற்கூற்றொழிதற்கு முரியன.

**இறைவன் றனக்குக் குறைநேர் பாங்கி**
**இறைவிக்கவன் குறையுணர்த்தல்.**

(இ-ள்.) தலைவன் வருத்தந்தணிப்பலென்று சொல்லிய பாங்கி அவ்வருத்தத்தைத் தலைவிக்குக் கூறுதல்.

*தழையார் கரமுந் தளர்வா ருடலுந் தனிமையுமாய்ப்*
*பழையாரி லோர்புதி யார்வரு வார்வந்து பற்றலர்போன்*
*மழையார் திருக்கர மால்ஷம்சுத் தாசீன் மலையவெற்பி*
*னுழையா ரகலா ருரையார் கருத்தென்கொ லோதுதற்கே.* (121)

**இறைவி யறியாள் போன்று குறியாள் கூறல்.**

(இ-ள்.) பாங்கி யிவ்வார்த்தை கூறவே தலைவி கேட்டுத் தானொன்று மறியாள் போல மனத்திற் கருதாத வேறொன்றைக் கருதிக் கூறுதல்.

*தினமே தருங்கரச் சேய்ஷம்சுத் தாசீன் செழுமலைச்சீர்க்*
*கனமே புகலாக் கருதல ரோடிக் கருத்தழிந்து*
*வனமே யிடனா வளரிலை காய்கனி மற்றுமடுத்*
*தினமே யலைவரென் னேந்திழை யீரிவ் விரும்பொழிற்கே.* (122)

**பாங்கி யிறையோற் கண்டமை பகர்தல்.**

(இ-ள்.) பாங்கி தலைவ னின்வயத்தனாக வந்தவதனைக் கண்டேனென்று கூறுதல்.

*பாருங் ககனும் பகர்ஷம்சுத் தாசீன் பனிவரைவா*
*யாரும் புகழு மணிமுலை யீரும் மருநலம்வேட்*

*டூரும் பெயரு முழையு வழியு முவந்தவரைக்*
*காரும் படருநங் காவகத் தின்றெதிர் கண்டனனே.* (123)

**பாங்கியைத் தலைவி மறைத்தல்.**

(இ-ள்.) தலைவி தன்களவொழுக்கத்தைப் பாங்கிக்கு மறைத்துக் கூறுதல்.

*வீணாய் விளம்பல்பெண் பாவம்பொல் லாது வெறுத்துனையான்*
*காணா தெழுந்து கரந்ததுண் டோகடற் காசினிக்கோர்*
*மாணா ரதிபதி மால்ஷம்சுத் தாசீன் மலையவெற்பிற்*
*பூணா ரிணைமுலை யாயுண்ப ரோநஞ்சம் புத்திவைத்தே.* (124)

**பாங்கி யென்னை மறைப்பதென்னெனத் தழாஅல்.**

(இ-ள்.) இவ்வாறு மறைத்துக் கூறிய தலைவியைப் பாங்கியுனக்கு நான் வேறோ? வென்று உவகையாகத் தழுவிக் கூறுதல்.

*ஊடறி யாவுரை யொன்றுள மொன்றுவப் பொன்றன்றின்றோர்*
*பாடறி யாவுயிர்ப் பாவையன் னீர்மறை பன்னலென்றுங்*
*கேடறி யாச்செழுங் கேலுஷம்சுத் தாசீன் கிளர்கிரிநன்*
*னாடறி யாச்சுடர் நாவறி யாச்சுவை நாளமின்றே.* (125)

**பாங்கி கையுறை புகழ்தல்.**

(இ-ள்.) பாங்கி தலைவன் கொடுத்த காட்சிப் பொருளைப் புகழ்ந்து கூறுதல்.

*சிலையுங் குலையுஞ் செழுந்தனத் தீர்செவி சிற்றிடைக்காங்*
*கலையுங் குழையுங் கணியுந் தினமுங் கருதலருண்*
*மலையும் படிபொரு மால்ஷம்சுத் தாசீன் யிமலையவெற்பி*
*னிலையுந் துணரு மணியு மிவையுவந் தேற்றருளே.* (126)

இவற்றுள் - பாங்கி கூற்றாயினவெல்லாங் குறைநயப்பித்தற்கும், தலைவி கூற்றாயினவெல்லா மறுத்தற்கு முரியன.

**தோழி கிழவோன்றுயர்நிலை கிளத்தல்.**

(இ-ள்.) பாங்கி தலைவது வேட்கை கொண்ட துயர்நிலையைத் தலைவிக்குக் கூறுதல்.

*குளிறுஞ் சனையுங் குழையு மருந்திக் குலவியென்று*
*மொளிறுங் கழற்றுணை யோன்ஷம்சுத். தாசீ னொளிர்தடத்தோர்*
*களிறும் பிடியுங் களிதுயில் கொண்டுறல் கண்டணங்கே*
*வெளிறு முகத்தி னுயிர்த்தெனை நோக்கி மெலிந்தனரே.* (127)

மறுத்தற் கருமை மாட்டல்.

(இ-ள்.) இவ்வாறு பாங்கி கூறிய சொற்கட்கு விடையின்மையால் இனி அத்தலைவன்வரி லென்னான் மறுத்தற்கரிதெனப் பொருத்திக் கூறுதல். மாட்டல் - பொருத்தல்.

*ஏவுஞ் சலித்த விழியீ ரிறைதழைக் கெம்மறிவு*
*யாவுஞ் சலித்தபு மான்ஷம்சுத் தாசீ ணிருஞ்சிலம்பிற்*
*காவுஞ் சலித்தசெங் கையுஞ் சலித்தபொய்க் கட்டுரைக்கோர்*
*நாவுஞ் சலித்தவிந் நாமுஞ் சலித்துன்க ணண்ணினமே.* (128)

**தலைவன் குறிப்புவேறுக நெறிபடக் கூறல்.**

(இ-ள்.) தலைவனெண்ணுங் குறிப்பு நம்பாலிரப்பவன் போற்றோற்றவில்லை. வேறு நினைப்பானாகத் தோன்றியதென் றொழுங்குபடப் பாங்கி கூறுதல்.

*வினையாற் பயனும் விளைவாற் பொருளும் விளங்கலொத்தோர்*
*பனையாற் கனிவரும் பாரெண்ப ரன்பர் பகையனைத்து*
*முனையாற் றெறுமயில் வேள்ஷம்சுத் தாசீன் முதிர்கிரிசேர்*
*நனையார் நறுங்குழ லீர்பொரு ளேதவர் நாட்டுரைக்கே.* (129)

**பாங்கி தலைவியை முனிதல்.**

(இ-ள்.) தலைவி யொன்றுக்கு மறுமொழி கொடாளாக அவளைச்சினந்து பாங்கி கூறுதல்.

*அறியா தறைந்தே னறிந்தே னருமைநிற் காமலரைக்*
*குறியா தடக்குங் குழுவோர்க் குரைகுறை கூறுபன்னூ*
*னெறியா யுணர்ந்தமிக் கோன்ஷம்சுத் தாசீ னெடுவரைசேர்*
*பொறியா ரிளமுலை யாய்கும்பிட் டேன்சொற் பொறுப்பதற்கே.* (130)

**தலைவி பாங்கியை முனிதல்.**

(இ-ள்.) அங்ஙனம் கூறிய பாங்கி சொற்களைப் பொறாதவளாய்த் தலைவி பாங்கியைக் கோபித்துக் கூறுதல்.

*வெறுக்கும் பழமொழி விண்டெனை தாவி மெலிவுறமெய்க்*
*குறுக்குங் குணத்தணங் கேகுல நீர்மை குறித்தினித்தெவ்*
*வறுக்கும் பெருமுரத் தான்ஷம்சுத் தாசீ னருட்கிரிவாய்*
*மறுக்கு முரைதர வோகொள வோசொலென் வாயகத்தே.* (131)

**தலைவி கையுறை யேற்றல்.**

(இ-ள்.) அங்ஙனங் கூறியபின் இனி, பாங்கியையன்றி யொன்று முடியாதென்று கருதி அவள் கொடுத்த கையுறைப் பொருளைத்தலைவி வாங்கிக் கொள்ளுதல்.

கொண்டாற் பழியொடு கொள்கில மேனின் குறைமொழியு
முண்டா மெனக்கலக் குற்றுலை வேமை யுவந்தொளிர்பூந்
தண்டா மரைப்பதத் தான்ஷம்சுத் தாசீன் சயிலமன்னாய்
விண்டா தரவி னளித்தனை யாவதில் வேண்டுதுமே. (132)

இவற்றுள் - பாங்கி கூற்றாயினவெல்லாங் குறைநயப்பித்தற்கும், தலைவி கூற்றாயினவெல்லாங் குறைநேர்தற்கு முரியன.

### இறைவி கையுறை யேற்றமை பாங்கி யிறைவற் குணர்த்தல்.

(இ-ள்.) தலைவி தழை முதலியவற்றை யேற்றுக்கொண்டமையைத் தலைவனுக்குப் பாங்கி கூறுதல்.

வாங்காய் தழையெனு முன்னுவந் தோடி வளர்முலைகண்
பாங்கார் முகமிதழ் வாய்சிரம் யாவும் பதித்தவனி
தாங்கா யிரங்கதி ரோன்ஷம்சுத் தாசீன் றமிழ்ச்சிலம்ப
நீங்காது நீயெனப் பல்கான் முகந்து நினைந்தனளே. (133)

### பாங்கி தலைமகற்குகுறியிடங் கூறல்.

(இ-ள்.) தலைவன் தலைவியைச் சந்திப்பதற்கு ஒரு அறிகுறியுள்ள இடத்தைப் பாங்கி கூறுதல். அறிகுறி - அடையாளம்.

செல்லுங் கருதுஞ் செழுங்கரத் தீருட் டிடுக்குறத்தெவ்
வெல்லும் பெருந்தள வேள்ஷம்சுத் தாசீன் மிளிர்வரைவெண்
கல்லும் வயிரமுங் கௌத்துவ முத்துங் கலத்தலிலோ
ரல்லும் பகலா யவிரிடம் யாம்பக லாடிடமே. (134)

### பாங்கி குறியிடத் திறைவியைக் கொண்டு சேறல்.

(இ-ள்.) முன்சொன்ன அடையாளமுள்ள இடத்துக்குத் தலைவியைப் பாங்கி கூட்டிக் கொண்டு செல்லுதல்.

பெண்ணா ரமுதப் பிழம்பே வருதி பெருமுலைச்சீ
ரெண்ணா தெழுமலைக் கின்றெதிர் கேட்டடி யிட்டலரை
மண்ணா ளதிபதி மால்ஷம்சுத் தாசீன் மலையவெற்பிற்
கண்ணா லலைவரு கண்ணீர்க் குவலயங் காண்பதற்கே. (135)

### பாங்கி தலைமகளைக் குறியிடத் துய்த்து நீங்கல்.

(இ-ள்.) கூட்டிச் சென்ற தலைவியைக் குறியிடத்து நிறுத்திவிட்டுப் பாங்கி நீங்குதல்.

கண்பகை காற்பகை கைப்பகை மேற்பகை கண்டுறுமோ

*ரண்பகை தீர்த்தடை வாமயி லாய்ந்திய லாகவென்று*
*மண்பகை தீர்த்தலெம் மான்ஷம்சுத் தாசீன் மணிவரைவாய்த்*
*தண்பகை தீர்த்தொளி ரின்சொனல் லாய்சற்றுத் தங்குகவே.* (136)

**இறைவி யிறையோனிடத் தெதிர்ப்படுதல்.**

(இ-ள்.) தலைவியைத் தலைவ னேரே வந்து காணுதல்.
*வாளாக் கிடந்து மயற்பசி கொண்டு மயங்குமென்னை*
*யாளாக்க வென்றோ வருள்வா யமுது மருந்தனமுங்*
*கோளாச் சுமந்தென் குலதெய்வம் போன்முன் குறுகினைசெந்*
*தாளா லரசளிப் போன்ஷம்சுத் தாசீன் றடத்தணங்கே.* (137)

**புணர்ச்சியின் மகிழ்தல்.**

(இ-ள்.) வெளி.
*வழுத்துஞ் சுகிர்த மருவுரு வாயெனை வாழ்வித்தின்ப*
*மழுத்துஞ் செழுந்தனத் தாருயி ரேயின் றரசர்முடி*
*விழுத்து மலர்ப்பத வேள்ஷம்சுத் தாசீன் வியன்சிலம்பின்*
*முழுத்துஞ் சுகாநந்த வாரிகண் டேயுண் முழுகினனே.* (138)

**புகழ்தல்.**

(இ-ள்.) வெளி.
*பூணு மகுடப்பு மான்ஷம்சுத் தாசீன் பொதியமன்னாய்*
*நாணுந் துடியு மடிபட் டலறியெந் நாளுமுடற்*
*கோணு மிழையுங் குழையு மரிவனங் கொண்டலையுஞ்*
*சேணு மதனுந் திகைதரு நேரற்றுன் சிற்றிடைக்கே.* (139)

**தலைமகளைத் தலைமகன் விடுத்தல்.**

(இ-ள்.) தலைவியைத் தலைவன் ஆயக்கூட்டத்திற்செல்லவிடுதல்.
*கனமா மமுதக் கடல்கடைந் தின்பக் கனிவருள்வோய்*
*சினமா ரயிற்கரச் சேய்ஷம்சுத் தாசீன் சிலம்பகத்தெம்*
*மனமாந் துணையின் வனங்கடந் துன்குழு மன்னியிங்கு*
*னினமா யனுப்புதி யேகுதி நல்விடை யீந்தெமக்கே.* (140)

**பாங்கி தலைவியைச் சார்ந்து கையுறை காட்டல்.**

(இ-ள்.) குறியிடத்து நிறுத்திப்போயின பாங்கி தலைவன் போயினபின் தான்

கையுறை கொண்டுவரப் போயின பாவனையாகக் கையுறை கொண்டுவந்து காட்டல்.

முலைகண்டு வாயிதழ் மூடரும் பெள்ளி முழுதுமுட
னிலைகண்டு வாடும சோகமு நீத்து நிருபர்திறை
மலைகண் டுவக்குமெம் மான்ஷம்சுத் தாசீன் மலையகம்பல்
லிலைகண்டு பூக்கண்டெடுத்துவந் தேன்கொள்ளெ னேந்திழையே. (141)

**தலைவியைப் பாங்கிற் கூட்டல்.**

(இ-ள்.) பாங்கி தலைவியை மகளிர் கூட்டத்திற் சேர்த்தல்.

நந்தா வனத்து நறுமலர்க் காவுள்ளு நண்ணுமல
ரெந்தா யெடுத்தணிந் தேன்குழற் கென்று மிரும்புவிக்கோர்
சிந்தா மணியனை யான்ஷம்சுத் தாசீன் சிலம்பிடையு
வந்தாயத் தார்விளை யாடிடங் கண்டங்கு மன்னுதுமே. (142)

**நீங்கித் தலைவற் கோம்படை சாற்றல்.**

(இ-ள்.) தலைமகளை ஆயத்துட்சேர்த்து மீண்டுவந்து பாங்கி தலைவற்கு ஓம்படை சொல்லுதல். ஓம்படை - மறவாமை.

நண்ணுஞ் சுகிர்தமெய்ஞ் ஞானசேகர் தாண்மலர் நாடியுள்ளத்
தெண்ணும் பெரும்பதத் தோன்ஷம்சுத் தாசீ னெழிற்சிலம்ப
கண்ணுங் கருத்துமென் றும்மிரு வோரைக் கலந்தவெற்குப்
பண்ணும் வரமற வாமைய தேயென்சௌ பாக்கியமே. (143)

**உலகியன் மேம்பட விருந்து விலக்கல்.**

(இ-ள்.) உற்றார் அயலூரிலிருந்து வந்தாலவர்க்கு உணவு கொடுத்துபசரிப்ப துலகியல் பாதலா லவ்வுலகியல் பெருமைப்படத் தலைவனை யெம்மூர்க்கு வந்திருந்து விருந்துண்டு போமெனப்பாங்கி தலைவன் செல்லுதலை விலக்குதல்.

வில்லிற் றுணையிலெம் வேள்ஷம்சுத் தாசீன் வியனசலப்
புல்லிற் கெழுமறிப் பாலுங் கறியும் புனத்தனமு
மல்லிற் பழனு மடுத்தே சிறிதெம் மனைவதிந்தோங்
கல்லிற் பகலோ டகலிற் பிழையென்கொ லாண்டகையே. (144)

**விருந்திறை விரும்பல்.**

(இ-ள்.) அவ்வுணவைத் தலைவன் விரும்பிக் கூறுதல்.

சித்தமும் புத்தியுங் கோடைமெய்ஞ் ஞானியர் சீரடிக்கண்
ணித்தமும் வைத்தபு மான்ஷம்சுத் தாசீ னெடுவரையி

*லத்தமு மன்புமொன் றாய்வர நீகொள் ளருவிடமும்*
*புத்தமு தாயின் புசிக்கல ருண்டுகொல் பூந்திருவே.* (145)

இவற்றுள் - பாங்கி கூற்றாயினவெல்லாம் கூட்டற்கும் பாங்கிற் கூட்டற்கும் தலைவன் கூற்றாயினவெல்லாங் கூட்டற்கும், வேட்டற்கு முரியன.

இத்துணையும் ஆறாநாள் நிகழ்ச்சி யென்க.

பாங்கியிற் கூட்டம் - முற்றிற்று.

-------

## ஒருசார் பகற்குறி.

அஃதாவது - ஒரு கூற்றுப் பகற்குறி; அது - யாதெனில்? தலைவன் மறுநாள் தன்வேட்கை மிகுதியால் பகற்குறியிடத்துவந்து நிற்கத் தலைவியைப் பாங்கி குறியிடத்துச் செலுத்தாது மறுத்துக்கூறத் தலைவன் வருந்திப் போதல். ஆதலாற் பகற்குறியாகாது ஒருசார் பகற்குறியாயிற்று; அஃது - இரங்கல் வன்புறை இற்செறிப் புணர்த்தலென மூவகைப்படும்; அவை வருமாறு:-

### கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலையம் போது கண்டிரங்கல்.

(இ-ள்.) மேற்கூறியவாறு தலைவன் பிரிந்து போகத் தலைவி மாலைக்காலத்தைக் கண்டு வருந்துதல்; இக்கூற்றுப் பாங்கியை நோக்கிக் கூறுதலும் மாலையை நோக்கிக் கூறுதலுந் தன்னுட் கூறுதலுமென மூன்றாம்; அவற்றுளிது தன்னுட் கூறுதல்.

*துறந்தார்ப் பிழைத்தார்ச் சுடுசினம் போலுமென் றோகைநல்லாய்*
*பிறந்தா ரிருள்செறி மாலையம் போழ்து பெரிதுறுத்தி*
*மறந்தார்ச் சிறைசெயு மால்ஷம்சுத் தாசீன் மணிவரைவாய்க்*
*கறந்தா ருயிருணு மென்செய்வ லெல்லைக் கடல்கவிழ்த்தே.* (146)

### பாங்கி புலம்பல்.

(இ-ள்.) தலைவி வருத்தங்கண்டு பாங்கி வருந்துதல்.

*மீறும் பெருந்தள வேள்ஷம்சுத் தாசீன் வியன்கிரிவாய்க்*
*கூறுங் குணநலத் தோர்செல மாமதன் கூர்ந்துவந்தங்*
*கேறும் பரியு மிரதமுங் காளமு மீர்ங்குடையுஞ்*
*சீறும் படிகரிக் கிங்கென்கொ லோவிவள் செய்ததுவே.* (147)

### தலைவனிடத் தலைவி வருந்தல்.

(இ-ள்.) தலைவன் வாராது நாழிகை நீடிக்கத் தலைவி வருந்திக் கூறுதல்.

பொங்கு மயலஞர் பூட்டியென் னின்பப் புதுநலங்கொண்
டெங்கும் புகழுநல் லோன்ஷம்சுத் தாசீ னிருஞ்சிலம்பிற்
றங்கு மெனைமறந் தன்னையர் சாருமுன் சார்ந்தவிந்த
மங்கு மிரவிடை வந்தொரு முத்தம் வழங்கிலரே. (148)

**தலைவியைப் பாங்கி கழறல்.**

(இ-ள்.) பாங்கி தலைவியை நீ வருந்துவது முறைமையன்றெனக் கட்டுரைத்தல்-கழறல்-கட்டுரை, இடித்துக்கூறல், உறுதிச்சொல்.

நஞ்சு மமுது நனவு மறப்பு நலனலலொத்
தஞ்சுஞ் செழுந்தனத் தஞ்சமன் னீருள் ளழுங்கலென்று
மிஞ்சும் பெரும்புகழ் வேள்ஷம்சுத் தாசீன் வியன்சிலம்பி
லொஞ்சும் பிரிவும் புணர்ப்பு முளவுவந் தோதுதற்கே. (149)

**தலைவி முன்னிலைப் புறமொழி மொழிதல்.**

(இ-ள்.) பாங்கி யெதிரே நிற்கவுந் தலைவி அவள்மேல் வெறுப்பாலவளை நோக்கிக் கூறாது புறமாய்க் கூறுதல்.

வெறியார் மயலும் விளைவுஞ் சிறையு மிலைந்துகனற்
பொறியா யுழலுமென் புன்கணுற் றோரன்றிப் போந்தமற்றோ
ரறியார் மலடி யறியாள் பிரசவ வல்லலென்று
நெறியா யுயர்தவத் தோன்ஷம்சுத் தாசீ னெடுவரைக்கே. (150)

**தலைவி பாங்கியொடு பகர்தல்.**

(இ-ள்.) வெறுப்பால் முன்னிலைப் புறமொழிகேட்ட பாங்கி தலைவியை யுபசரித்தலா லவ்வெறுப்பு நீங்கிப் பாங்கியொடு தலைவி கூறுதல்.

சற்றும் பிரியேன் றரியே னெனத்தடுத் தார்மகுட
மெற்றுந் திருப்பதத் தோன்ஷம்சுத் தாசீ னிருஞ்சிலம்பர்
சொற்றுங் கலந்துந் தழுவியு முத்தியுஞ் சூழ்ந்தவெல்லா
முற்றும் பழுதாய் முடிந்தகொ லோவென்றன் மொய்குழலே. (151)

**தலைவியைப் பாங்கி யச்சுறுத்தல்.**

(இ-ள்.) அங்ஙனங் கூறியுந் துன்பமுறுந் தலைவியை அதுநீங்குமாறு பாங்கி பயமுறுத்திக் கூறுதல்.

புனமே மறந்துறு புள்ளு மறந்தொரு போரரசின்
கனமே நினைந்துழல் கன்னிநல் லாயன்னை காணினருட்
டனமே பெறுபெரு மான்ஷம்சுத் தாசீன் றமிழ்ச்சிலம்பி
னினமே விடுத்தில் லிடமே தருமென் னியற்றுவையே. (152)

### நீங்கற்கருமை தலைவி நினைத்திரங்கல்.

(இ-ள்.) தலைவன் றன்னைவிட்டு நீங்கற்கருமையைத் தலைவி நினைந்து தன்னுள் ளிரங்கிக் கூறுதல்.

ஆவியு மெய்யுமென் றொன்றிரண் டாயெம்மை யாக்கியக
மேவிய வன்மையு மென்மையு மாயிடை வித் தளபில்
தாவிய வாய்தந்தந் தோன்ஷம்சுத் தாசீன் றமிழ்க்கிரிவாய்க்
கூவிய மாமுதல் சார்பொழித் தான்மெய் குறுகுதற்கே. (153)

### தலைவிக் கவன் வரல் பாங்கி சாற்றல்.

(இ-ள்.) அங்ஙன மனமிரங்குந் தலைவிக்குத் தலைவன் வருதலைப் பாங்கி கூறுதல்.

சீர்தரும் வள்ளல்பு மான்ஷம்சுத் தாசீன் செழுஞ்சிலம்பிற்
றேர்தரு மோதை திருவே தெரியினிச் செப்புமத
னார்தரு காளங் கண்ணகுடை தேர்முர சாரமிழ்தா
யேர்தரு மாறிலை நின்னரா சார்க்கு மிதந்தருமே. (154)

### சிறைப்புறமாகச் செறிப்பறிவுறுத்தல்.

(இ-ள்.) தலைவன் சிறைப்புறமாகக் குறியிடத்துவரப் பாங்கி தங்களுக்குள்ள செறிப்பையறிவுறுத்திக் கூறுதல். சிறைப்புறம்- வெளிப்புறம். செறிப்பு-கானவர் தினைகொய்யப் புறத்தினில் வந்திருத்தல்.

மணியார் கலாப மயிலீ ருழையீர் மகிழ்ந்துரையீர்
பணியா ரிகுளைய ராடிட நீப்பப் பருத்தெழுமோர்
திணியா சலப்புயச் சேய்ஷம்சுத் தாசீன் செழுங்கிரியிற்
கணியா ரலர்க்கண் கணித்தா ரெமக்கிலைக் காய்ப்புனமே. (155)

### தோழி தலைமகற்கு முன்னிலைப்புறமொழி மொழிந்தறிவுறுத்தல்.

(இ-ள்.) தலைவன் முன்னிலையாய்நிற்பத் தோழி தலைமகனைக் காணாதவள்போலப் புறமொழியாய்ப் புட்கள் விலங்குகளை நோக்கிக் கூறுவாள் போன்று செறிப்பறிவுறுத்தல்.

நிறந்தாங் குழைகாண் மயில்காள் கிளிகா ணிதழுமலர்ப்
புறந்தாழ் கருங்குழற் பொன்னனை யாளைப் புணர்ந்துசுகஞ்
சிறந்தார் மணிமுடிச் சேய்ஷம்சுத் தாசீன் சிலம்பிலெம்மை
மறந்தாலு நீவிர் மறவா திருமொரு வந்தனமே. (156)

### பாங்கி தலைமகன் முன்னின் றுணர்த்தல்.

*(இ-ள்.) தோழி தலைவனுக் கெதிரேநின்று தினையறுத்தலாலினி யெம்மூர்க்குப் போவேம். இப்புனத்தின்கண் வருதலொழிகவெனக் கூறுதல்.*

*பலர்வாய்ப் புகழ்தரித் தோன்ஷம்சுத் தாசீன் பனிவரையீர்*
*மலர்வாய் விளவரிந் தெம்மற வோர்புனம் வாரியிடு*
*முலர்வாய்க் குரலி னுறைவரி திங்கென வோர்ந்தெமையு*
*மலர்வா யகத்திற் கழைத்தன ரேகுது மந்நெறிக்கே.* (157)

### பாங்கி முன்னின் றுணர்த்தி யோம்படை சாற்றல்.

*(இ-ள்.) அங்ஙன முன்னின்று கூறிய பாங்கி யெம்மை மறவாமை வேண்டுமென்று கூறுதல்.*

*கண்மறந் தாலு மிமைமறந் தாலுங் களிமயில்கார்*
*விண்மறந் தாலும் வெயின்மறந் தாலும் விரைமலர்வாய்*
*பண்மறந் தாலும் பகர்ஷம்சுத் தாசீன் பதியிலுயிர்*
*மண்மறந் தாலு மறவா துறவெமை வாழ்த்துதுமே.* (158)

### கிழவோன்றஞ்சம் பெறாது நெஞ்சொடு கிளத்தல்.

*(இ-ள்.) இவ்வாறு கூறக்கேட்ட தலைவன் வேறோர் பற்றுக்கோடு பெறாது நெஞ்சுடன் கூறுதல்.*

*ஆந்தனை யும்புனங் காத்தறி வாதி யனைத்துமள்ளி*
*யேந்தனை யார்தொழ வின்றகன் றாள்பின் னிரும்புலிக்கோர்*
*வேந்தனை யான்விறல் வேள்ஷம்சுத் தாசீன் வியன்சிலம்பிற்*
*போந்தனை யான்மன மேயினி யென்றிவண் போதுவையே.* (159)

*இவற்றுள் - கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலையம்பொழுது கண்டிரங் கலும் பாங்கி புலம்பலுந் தலைவனிடத் தலைவி வருந்தலு முன்னிலைப் புறமொழி மொழிதலுந் தலைவி பாங்கியொடு பகர்தலும் நீங்கற்கருமை தலைவி நினைந்திரங்கலுங் கிழவோன் றஞ்சம்பெறாது நெஞ்சொடு கிழத்தலு மாகிய வேழு மிரங்கற்கும், தலைவியைப் பாங்கி கழறலும் பாங்கி யச்சுறுத் தலும் பாங்கி தலைவிக் கவன்வரல் சாற்றலு மாகிய மூன்றும் வன்புறைக்கும், பாங்கி சிறைப்புறமாகச் செறிப்பறிவுறுத்தலு முன்னிலைப் புறமொழி மொழிந் தறிவுறுத்தலு முன்னின்றுணர்த்தலு மோம்படை சாற்றலுமாகிய நான்கு மிற் செறிப்புணர்த்தற்கு முரியன. முன்னைய வேழில் நெஞ்சொடு கிளத்தலொழிந்த வாறும் வரைதல் வேட்கைக்கும், பின்னை நான்கும் வரைவு கடாதற்கு முரியன.*

*ஒருசார் பகற்குறி - முற்றிற்று.*

- - - - - - -

## பகற்குறியிடையீடு.

அஃதாவது:- பகற்குறிக்கண்வந்த தலைமகன் குறிக்கட் செல்லாது இடையீடு பட்டுப் போதல். இடையீடு - தடை; அது - விலக்கல் சேறல் கலக்கமென மூவகைப்படும்; அவை வருமாறு:-

### இறைவனைப் பாங்கி குறிவரல் விலக்கல்.

(இ-ள்.) இனி அடிக்கடி தாய்வருவள். நீவந்தாற் பழியுண்டாமென்று தலைவனைப் பகற்குறியிடத்து வராதே யென்று பாங்கி கூறுதல்.

அன்போ டருள்குணத் தான்ஷம்சுத் தாசீ னருஞ்சிலம்பின்
முன்போ லடுத்தடுத் தண்ணலண் ணேலென்று மொய்புனத்தி
னென்போர் மறவ ரினிதிருந் தாரின்னு மேந்திழைபாற்
பொன்போ லொளிருட லன்னைபல் கால்வந்து போதுவளே. (160)

### இறைவியைப் பாங்கி குறிவரல் விலக்கல்.

(இ-ள்.) பாங்கி தலைவியை நோக்கி யுன்னுடைய் தனபாரங்களினழகை யையுற்றுத் தாய் பார்த்துக் கவல்கின்றனள். இனியிப்புனத்தில் வரலொழிவாயென்று கூறுதல்.

இரப்பார்க் களிக்குமெம் மான்ஷம்சுத் தாசீ னிருஞ்சிலம்பிற்
பரப்பார் மதர்விழிப் பாவையன் னாயுன்றன் பாரமுலைச்
சுரப்பார் பொலிவுமெய்த் தோற்றமு நாற்றமுஞ் சூழ்ந்தனை தன்
கரப்பார் மனங்கனன் றேகின ளின்றினிக் காவகமே. (161)

### இறைமக ளாடிட நோக்கி யழுங்கல்.

(இ-ள்.) தலைவி தான் விளையாடிய விடங்களை விட்டுப் பிரிதற்கஞ்சி வருந்தல்.

ஆடித் திரிந்த சுனையும் பொழிலு மருந்தடமுந்
தேடிக் குறுகுநர்க் கென்றெரித் தென்னையென் செப்புமுள்ள
நாடித் தருந்திரு மால்ஷம்சுத் தாசீ னளினவெற்பிற்
கூடிப் பிரிபவர்க் கில்லையெக் காலுமெய்க் கோணிலையே. (162)

### பாங்கி யாடிடம் விடுத்துக் கொண் டகறல்.

(இ-ள்.) தலைவியைப் பாங்கி விளையாடிடத்தைவிட்டுத் தம்மூர்க்குக் கொண்டுபோதல்.

கார்கண் டுவக்கு மயில்காள் கிளிகாள் கனகமணிப்
போர்கண் டுவந்தபு மான்ஷம்சுத் தாசீன் புனிதவெற்பி

ணேர்கண்டு நம்பிரி வெண்ணியுண் மாழ்கு மிறைவர்க்கெங்கண்
ணீர்கண்டு மேவ நிகழ்த்துவி ரோவிந்த நீணெறியே. (163)

இதுவரையும் ஏழாநாள் நிகழ்ச்சி யென்க.

------

**பின்னாணெடுந்தகை குறிவயி னீடுசென்றிரங்கல்.**

(இ-ள்.) எட்டாநாள் தலைவன் குறியிடமாகிய மாதவிப்பந்தரிடத்து வந்து காலநீட்டித்துத் தலைவியை நினைத்து வருந்துதல்.

கூடுஞ் சுகம்பிரிந் தாற்றெரி வாரெனக் கூர்ந்தெவரும்
பாடு மொழியறிந் தோமறந் தோவிந்தப் பாரிடங்கொண்
டாடும் புகழ்ப்பெரு மான்ஷம்சுத் தாசீ னருட்கிரிவா
யோடுங் கலையினங் காளவ ளோடி யொளித்ததுவே. (164)

**தலைவன் வறுங்களநாடி மறுகல்.**

(இ-ள்.) தலைவியில்லாத தினைப்புனத்தை நோக்கித் தலைவன் வருந்துதல்.

வெல்லு மதமலை வேள்ஷம்சுத் தாசீன் வியன்வரைவாய்க்
கல்லுங் கரைதரக் கண்ணீர் சொரிந்து கசிந்துருகி
யல்லும் பகலு மழிவேற் கெனவென் னளியினங்காள்
செல்லும் பொழுதெதுஞ் செப்பின ளோவந்தத் தேமொழியே. (165)

**குறுந்தொடி வாழு மூர்நோக்கி மதிமயங்கல்.**

(இ-ள்.) தலைவியி னூர்தேடிச் செல்வோமானால் அறிந்திலமென்று தலைவன் மதிகலங்கிக் கூறுதல்.

நாடரி தாலவ ளூரும் பெயருமு ணண்ணுநெறி
தேடரி தாலென்றுஞ் செல்லரி தாலவண் சேர்மறவர்
பாடரி தாலருண் மால்ஷம்சுத் தாசீன் பனிவரைவாய்க்
கூடரி தாலென்செய் வேன்மன மேநிலை கொள்ளுதற்கே. (166)

இவற்றுள் - இறைவனைப் பாங்கி குறிவரல் விலக்கலு மிறைவியைப் பாங்கி குறிவரல் விலக்கலுமாகிய விரண்டும் விலக்கற்கும், ஆடிடம் விடுத்துக் கொண் டகறலொன்றுஞ் சேறற்கும், இறைமகளாடிட நோக்கி யழுங்கல் முதலிய நான்கும் கலக்கத்திற்குமுரியன.

பகற்குறியிடையீடு - முற்றிற்று.

-------

## இரவுக்குறி.

அஃதாவது: - தலைவன் தலைவியை யிரவுக்குறியிற் கூடுதல்; அது - வேண்டல் மறுத்தல் உடன்படல் கூட்டல் கூடல் பாராட்டல் பாங்கிற் கூட்டல் உயங்கல் நீங்கல் ஆகிய ஒன்பது வகைப்படும்; அவை வருமாறு:-

**இறையோ னிருட்குறி வேண்டல்.**

(இ-ள்.) தலைவன் இருட்குறியை விரும்பிப் பாங்கியுடன் கூறுதல்.

*தருந்தா மரைக்கரத் தான்ஷம்சுத் தாசீன் றமிழ்ச்சிலம்பி*
*லிருந்தாரை மேக மெழுந்தது வானி லிரவியுமத்*
*திருந்தார் கலியகஞ் சேர்ந்தனன் கங்குலுஞ் சேர்ந்ததுங்கள்*
*விருந்தாக வந்தனன் மெல்லிநல் லீரிந்த வேளையிலே.* (167)

**பாங்கி நெறியின தருமை கூறல்.**

(இ-ள்.) அது கேட்ட தோழி தலைவன் வரும் வழியில் சிங்கமுதலிய மிருகங்கள் சஞ்சரித்தலால் அவ்வழி வரலரிதென்று கூறுதல்.

*திண்டந்த மற்புயச் சேய்ஷம்சுத் தாசீன் செழுஞ்சிலம்பி*
*னொண்டந்த வெண்கலை வண்கலை தூர்த்தற் குவந்தெழுமுச்*
*செண்டந்த பல்கய மெற்று மரிவனத் தின்றெதிர்ந்திங்*
*கண்டந்த வல்லிருட் போதுறு மாறென்கொ லாண்டகையே.* (168)

**இறையோ னெறியின தெளிமை கூறல்.**

(இ-ள்) அங்ஙனங் கூறிய வழியிலுள்ள மிருகங்களுக்கஞ்சேனாதலால் அவ்வழி வருத லிலேசென்று தலைவன் பாங்கிக்குக்கூறுதல்.

*சினமா ரயிற்படைச் சேய்ஷம்சுத் தாசீன் சிமையமன்னாட்*
*டனமாங் கரிக்குந் தடமாம் பணிக்குந் தழைத்தகுழ*
*லினமா மிருட்கு மிடையா மரிக்கு மிடைவதல்லால்*
*வனமார் விலங்கின் வகைக்கிடை யேனென்று மாதரசே.* (169)

**பாங்கி யவனாட் டணியியல் வினாதல்.**

(இ-ள்.) தலைவனது நாட்டுப்பெண்களணியும் மணியையு மியலையும் பாங்கி வினாவுதல்.

*ஆடும் பொழிலு மணியுந் தொடையு மணிநலனுந்*
*தேடுஞ் சுனையுந் திமிரு மணமுமித் தேயமெங்குஞ்*
*சூடும் பெருந்திறல் வேள்ஷம்சுத் தாசீன் சுகிர்தவெற்ப*
*நாடும் படியெவை யோவுங்க ணாட்டிள நாரியர்க்கே.* (170)

### தலைவ னவணாட் டணியியல் வினாதல்.

(இ-ள்.) பாங்கி குறிப்பறிந்து தலைவன் அவளுடைய நாட்டிலுள்ள வணிகலன் முதலியவற்றை வினாவுதல். குறிப்பறிதல் - வேண்டுவன கொடுத்தற்கென்க.

*என்னாட் டணியிய லெல்லா மறிந்துனக் கென்பயன்செம்*
*பொன்னாட் டணியியற் பூவைநல் லாய்செழும் புத்தமிழ்தின்*
*சொன்னாட் டணியியன் மால்ஷம்சுத் தாசீன் சுடர்வரைவாய்*
*நின்னாட் டணியிய னீயே சொலப்பய னிச்சயமே.* (171)

### தன்னாட் டணியியல் பாங்கி சாற்றல்.

(இ-ள்.) வெளி.

*கழையார் தரளஞ்செங் காந்தளம் போது கரைத்தசந்தத்*
*தழையா ரணிநலந் தந்தண்ண லேசெழுந் தண்பொழில்வாய்*
*மழையார் திருக்கர மால்ஷம்சுத் தாசீன் மலையகத்தெம்*
*மிழையார் சுனைபடிந் தாடுவ ரெல்லியெவ் யாமத்துமே.* (172)

### இறைவிக் கிறையோன் குறையறி வுறுத்தல்.

(இ-ள்.) பாங்கி தலைவனை யோரிடத்து நிறுத்திவிட்டுத் தலைவியிடத்திற் சென்று தலைவன் குறையை யறிவித்தல்.

*கொல்லும் புலியுங் கொடுவரி வேங்கையுங் கூர்ந்தெழுந்து*
*செல்லும் பெருவனத் தோர்தனி யாய்க்கங்குற் செவ்வியிற்போர்*
*வெல்லும் பரிமத வேள்ஷம்சுத் தாசீன் வியன்கிரிக்குள்*
*வல்லும் பொருதனத் தீர்வரு வார்க்கென் வழுத்துவதே.* (173)

### நேரா திறைவி நெஞ்சொடு கிளத்தல்.

· (இ-ள்.) இவ்வாறு கூறக்கேட்ட தலைவி யிசையாது தன்னெஞ்சுடன் சொல்லுதல்.

*இருளும் புயலு மிபமு மரியு மெதிர்ந்துதம்மில்*
*வெருளுஞ் சிறுநெறிக் கானடைந் தெம்மிறை மேவருமோ*
*அருளும் பொருளுமுள் ளோன்ஷம்சுத் தாசீ னருங்கிரிவாய்*
*மருளும் படிமன மேவலித் தாளொரு வன்கணளே.* (174)

### நேரிழை பாங்கியோடு நேர்ந்துரைத்தல்.

(இ-ள்.) நெஞ்சொடு கூறிய தலைவி தோழியோ டுடன்பட்டுக் கூறுதல்.

*உடலோ டுயிர்பொரு ளெல்லா மவரென் றுணர்ந்தவெண்பாற்*
*கடலோ பொருவாக் கருணைக்கண் ணாளர் கனிந்தெழிற்றெவ்*

வடலோ டமராறுப் போன்ஷம்சுத் தாசீ னருட்கிரிவாய்
மடலோ டொளிரு மலர்முகத் தீரென் வழுத்துவதே. (175)

**நேர்ந்தமை பாங்கி நெடுந்தகைக் குணர்த்தல்.**

(இ-ள்.) தலைவி யுடன்பட்டமையைத் தலைவனுக்குத் தோழி கூறுதல்.

போற்றியுந் தாழ்ந்தும் புகழ்ந்தும் பலபல புத்துரைகள்
சாற்றியு மன்னவ ணெஞ்சங் கனியத் தரணிமுற்றுந்
தீற்றிய வெண்புகழ்ச் சேய்ஷம்சுத் தாசீன் செழுஞ்சிலம்பிற்
றேற்றிய வாறர சேயென்னென் கோவுளந் தேர்ந்துனக்கே. (176)

**குறியிடை நிறீஇத் தாய்துயி லறிதல்.**

(இ-ள்.) பாங்கி தலைவனைக் குறியிடத்து நிறுத்தித் தாயினது நித்திரையை யறிதல்.

மணந்தந்த சந்தனம் புன்னைய சோகநன் மாதவிவங்
கணந்தந்த மல்லிகை முல்லையெ லாமொரு கைக்களிறுற்
றெணந்தந்த மெய்த்தவ வேள்ஷம்சுத் தாசீ னிருந்தடத்தம்
பணந்தந்த வல்குலம் பாவாய் நிரையறப் பாய்கின்றதே. (177)

**இறைவிக் கிறைவன் வரவறி வுறுத்தல்.**

(இ-ள்.) தலைவிக்குத் தோழி தலைவன் குறியிடத்து வருதலையறிவித்தல்.

பூவார் மலருந் தழையுந் கொடுமுனம் போந்தவரின்
றேவார் விழியணங் கேசுக நாடியெ மாந்தறிஞர்
நாவார் நறும்புகழ் மால்ஷம்சுத் தாசீ னளினவெற்பிற்
கோவா ரணியொளி யேவழி யாமனை கொண்டனரே. (178)

**தலைமகளைக் குறியிடத்துக் கொண்டு சேறல்.**

(இ-ள்.) தலைமகன் வந்து நிற்குங் குறியிடத்துக்குத் தலைவியைப் பாங்கி யழைத்துக் கொண்டு செல்லுதல்.

நஞ்சே யுமிழ்படை நல்விளக் காயெழு நள்ளிருள்வாய்த்
தஞ்சேவை காணத் தனித்திருந் தாரவர் தண்ணவர்கா
வஞ்சே யருட்கரத் தான்ஷம்சுத் தாசீ னடுக்கலினந்
நெஞ்சே வழிதரப் போதுகம் வாவங்கெ னேரிழையே. (179)

### குறியுய்த் தகறல்.

(இ-ள்.) பாங்கி தலைவியைக்குறித்த காவிடத்திலே செலுத்தி நீங்குதல்.

*தண்டா மரைமுலை நீலஞ்செங் கோங்கலி தன்சினைகண்*
*டண்டா வெனினுமென் னாரணங் கேயழ காண்மைமுற்றுங்*
*கண்டார் புகழ்பெரு மான்ஷம்சுத் தாசீன் கனகவெற்பிற்*
*றொண்டா யெடுத்தமைப் பேன்வரு வேனில்லிச் சூழ்பொழிற்கே.* (180)

### வண்டுறை தாரோன் வந்தெதிர்ப் படுதல்.

(இ-ள்.) தலைவன் தலைவியை நேரே வந்து காணுதல்.

*நூலேணி யில்லைவி மானமு மில்லை நுவலும்விஞ்சை*
*யாலேது மில்லையென் னாரணங் கேவிண்விட் டார்கலிமேற்*
*கோலேற வாளுமிக் கோன்ஷம்சுத் தாசீன் கொழுந்தடத்துன்*
*காலேணி யால்வந்த வாறெந்த வாறிந்தக் கங்குலிலே.* (181)

### பெருமக ளாற்றின தருமை நினைத் திரங்கல்

(இ-ள்.) தலைவி தலைவன் வரும் வழியின தருமை நினைந்து வருந்துதல்.

*சுழிக்கு நதிக்குந் துளியா ரருவிக்குஞ் சூழ்ந்தகராக்*
*குழிக்குந் துணிந்திவ் வொருதனி யாண்மயல் கொண்டவல*
*மொழிக்குங் குணப்பெரு மான்ஷம்சுத் தாசீ னொளிர்வரைமுள்*
*வழிக்குஞ் சினவாது வந்ததெவ் வாறென் மழைவள்ளலே.* (182)

### புரவலன் றேற்றல்.

(இ-ள்.) அங்ஙனம் வருந்திய தலைவியைத் தலைவன் றெளிவித்தல்.

*சீர்கண்ட வண்ணல்பி ரான்ஷம்சுத் தாசீன் சிலம்பகத்துன்*
*கார்கண்ட கூந்த லிருட்கிடை மின்னொளி கண்டணிகண்*
*டேர்கண்ட மென்முலை யல்குற் றடங்கொளு மென்னையின்றந்*
*நேர்கண்ட போதஞ்சு நாகங்க ளென்செயு நேரிழையே.* (183)

### புணர்தல்

(இ-ள்.) வெளி.

*எடுக்க வெடுக்கக் குறையா வமுத விருநலங்கொண்*
*டடுக்கப் படைத்தது வோமின்ன னாயுன்ற னாகமென்றுங்*
*கொடுக்கப் பிறந்தபு மான்ஷம்சுத் தாசீன் கொழுங்கிரிவாய்*
*மடுக்க மடுக்கவுண் மாறாச் சுகந்தந்து வாழ்வித்ததே.* (184)

(இ-ள்.) வெளி

*எமையா தரிக்குமிக் கோன்ஷம்சுத் தாசீ னிருஞ்சிலம்புஞ்*
*சமையாத பொம்மற் றகுதனத் தீருந்தஞ் சாயலெல்லா*
*மிமையாது நோக்கி யிகநிலை யின்றி யிருப்புமிங்ங*
*னமையாது விண்போந் தலைந்தனர் காணவ் வரம்பையரே.* (185)

**இறைமக ளிறைவனைக் குறிவால் விலக்கல்.**

(இ-ள்.) யானையைச் சிங்கமோது மிராக்காலத்திலே வரிற்றுன்பமிகவுண்டா மென்று பயந்து தலைவி தலைவன் வருதலை விலக்கல்.

*ஒருகைக் களிறு மராவு மரியு முறுத்தெழுந்து*
*பொருகைக் குரியவிப் பொங்கிருட் சாரலிற் போந்தெவர்க்குந்*
*தருகைக் குயர்ந்ததக் கோன்ஷம்சுத் தாசீன் றமிழ்ச்சிலம்பில்*
*வருகைக் கெளிதல வந்தால் வருந்துயர் மன்னவனே.* (186)

**இறைவியை யில்வயின் விடுத்தல்.**

(இ-ள்.) தலைவன் தலைவியை வீட்டி னிடத்துச் செல்லென விடுத்தல்.

*கோணாது காக்குநற் கோன்ஷம்சுத் தாசீன் கொழுங்கிரிவாய்ப்*
*பூணாது நூபுரச் சிற்றொலி வாணகைப் போதனைத்தும்*
*போணாது செஞ்சிவப் பேற்றா தடியுனைப் பெற்றவன்னை*
*காணாது போந்தருள் கன்னிநல் லாயுன் கடிமனைக்கே.* (187)

**இறைவியை யெய்திப் பாங்கி கையுறை காட்டல்.**

(இ-ள்.) குறியிடத்து நீங்கிய பாங்கி தலைவியை யடைந்து கையுறை காட்டுதல்.

*தண்ணார் நறவத் தளவமெல் லாமுன் றனிநகைகண்*
*டண்ணாந் துடைந்து மலர்வாய் விடுத்து மனுதினமு*
*மண்ணாள் பெரும்புய மால்ஷம்சுத் தாசீன் மலையவெற்பி*
*லெண்ணா தெடுத்துவந் தேனணி வாயென்ற னேந்திழையே.* (188)

**இற்கொண்டேகல்.**

(இ-ள்.) தலைவியைப் பாங்கி வீட்டிற்குக் கூட்டிக் கொண்டு செல்லுதல்.

*ஒல்காப் புகழ்ப்பெரு மான்ஷம்சுத் தாசீ னுயர்சிலம்பிற்*
*பல்கா ரமுதனை யாய்துயி னீத்தனை பார்க்கினம்மை*
*யில்கா ரணநினைந் தென்னினை யாள்சரி யின்றிளிநீ*
*செல்கா லெனநட வாவடை வாமந் திருமனைக்கே.* (189)

### பிற்சென் றிறைவனை வரவு விலக்கல்.

(இ-ள்.) தோழி தலைவியை மனையிற் சேர்த்த பின்பு தலைவன் பாற்சென்று இவ்விருளில் நீ வராதே யென்று விலக்கிக் கூறுதல்.

*கன்மேற் பொருபுயத் தோன்ஷம்சுத் தாசீன் கனகதடத்*
*தின்மேற் பொருமுலைக் கின்பவன் பாயிவ் விரவிலொருத்*
*தன்மேற் பொருபுலி வாழ்சிறு சாரலிற் சாரலினி*
*யென்மேற் பொருபழி யின்றுவந் தாற்பழி யென்றைக்குமே.* (190)

### பெருமகன் மயங்கல்.

(இ-ள்.) பாங்கியிவ்வாறு இரவுக்குறி விலக்கிய சொற்கேட்டு தலைவன் மனங் கலங்கிக் கூறுதல்.

*செலவே யொறுக்கும் வரவே விரும்புஞ் செகதலமந்*
*நலவே மறந்தொரு நட்டுரை தாங்கியிந் நானிலத்தோர்*
*குலவே ளெனவரு கோன்ஷம்சுத் தாசீன் கொழுங்கிரிவா*
*ழிலவே நிகர்த்தாய் மடந்தா யிதுகொல் லியல்புனக்கே.* (191)

### தோழி தலைமக டுயர் கிளந்து விடுதல்.

(இ-ள்.) பாங்கி தலைவனுக்குத் தலைவிக்கு நேருந் துயரைக் கூறி நீ ஊர்போய்ச் சேர்ந்த செய்தி யா மறியும்படி அடையாளங் காட்டென்று கூறி விடுத்தல்.

*வெறியார் மலர்த்தொடை வேள்ஷம்சுத் தாசீன் வியன்கிரிவாய்ப்*
*பொறியா ரரவப் பொதும்பிருட் சாரலிற் போதுமுன்னூர்*
*நெறியா லலமரு நேரிழைக் கங்ங னிலைக்கினுன்றன்*
*குறியா லுயிரளித் தாளுதி போதியென் கொற்றவனே.* (192)

### திருமகட் புணர்ந்தவன் சேறல்.

(இ-ள்.) தலைவியைக் கலந்த தலைவன் றன்னூர்க்குப் போதல்.

*தொடிக்கடி செய்கரத் தோகை மருங்கெழிற் சூழ்ந்தரசர்*
*முடிக்கடி தந்தபெம் மான்ஷம்சுத் தாசீன் முதிர்கிரிவா*
*யடிக்கடி நோக்குற் றலமரு மின்னினல் லாய்ந்துநெறி*
*நொடிக்கடி மாற்றி யடைகுவ லென்பதி நுண்ணிடையே.* (193)

இவற்றுள்-இறையோ னிருட்குறி வேண்டலும் நெறியினதெளிமை கூறுதலும் தலைமகனவணாட்டணியியல் வினாதலும் பாங்கிஇறைவிக்கு இறையோன் குறையறிவுறுத்தலுமாகிய நான்கும் வேண்டற்கும், பாங்கி நெறியின தருமைகூறலும் இறைமகள் இறைவனைக்குறி வரல் விலக்கலும் பாங்கி இறைவனை வரவு

விலக்கலுமாகிய மூன்றுட் மறுத்தற்கும், பாங்கி யவனாட் டணியியல் வினாதலும் அவற்குத் தன்னாட் டணியியல் பாங்கி சாற்றலும் நேரிழை பாங்கியோடு நேர்ந்துரைத்தலுமாகிய மூன்றும் உடன்படற்கும், தலைமகள் நேர்ந்தமை பாங்கி தலைவற்குணர்த்தலும் குறியிடை நிறீஇத்தாய் துயிலறிதலும்இறைவிக்கு இறைவன் வரவறிவுறுத்தலும் அவட்கொண்டு சேறலுமாகிய நான்குங் கூட்டற்கும், தலைமகன் தலைமகளை யெதிர்ப்படுதலும் தேற்றலும் புணர்தலுமாகிய மூன்றும் கூடற்கும், தலைமகன் புகழ்தலும் கையுறைகாட்டலுமாகிய இரண்டும் பாராட்டற்கும், தலைமகன் தலைவியை யில்வயின் விடுத்தலும் பாங்கி தலைமகளைஇற்கொண்டேகலுமாகிய இரண்டும்பாங்கிற் கூட்டற்கும், நேராதிறைவி நெஞ்சோடு கிளத்தலும் தலைமகள் ஆற்றினதருமை நினைத் திரங்கலும் பெருமகன் மயங்கலும் தோழி தலைமகள் துயர் கிளந்து விடுதலுமாகிய நான்கும் முயங்கற்கும், பாங்கி குறியுய்த்தகறலும் திருமகட் புணர்ந்தவன் சேறலுமாகிய இரண்டும் நீங்கற்கு முரியன. முயங்கல்- வருந்துதல்.

இதுவரையும் எட்டாநாள் நிகழ்ச்சி.

இரவுக்குறி-முற்றிற்று.

-----

## இரவுக்குறி யிடையீடு.

அஃதாவது - இரவுக்குறிக்கண்வந்த தலைமகன் அல்ல குறிப்பறிதலால், இடையீடுபட்டுப்போதல்; அஃது அல்லகுறியெனவும் வருந்தொழிற் கருமையெனவு மிரண்டுவகைப்படும்; அவை வருமாறு. இடையீடுபடுதல்- குறி தவறுதல்.

### இறைவிக் கிகுளை யிறைவர வுணர்த்தல்.

(இ-ள்.) மறுநா ளிரவில் தலைவன் வருதலைத் தலைவிக்குப் பாங்கி கூறுதல்.

பொன்னாக மேனிப் புணர்முலை யாயென்கொல் பூவரசர்
மன்னாக வந்தவெம் மான்ஷம்சுத் தாசீன் மருவலர்போற்
புன்னாக சேக்கைப் புறம்விடுத் திவ்விருட் போதிலன்னந்
தன்னாகஞ் சோரச் சலியா தெழுந்து தழங்கின்றதே. (194)

### தான் குறி மருண்டமை தலைவி யவட் குணர்த்தல்.

(இ-ள்.) தலைவி தான் அல்ல குறியிடத்துத் தலைவனைக் காணாமையால் மீண்டு விடியற்காலத்துவந்து பாங்கியுடன் கூறுதல். அல்லகுறியிடம் - குறிதவறிய விடம்.

உள்ளற் கெளிதல வேறோர் குறியையென் னுட்கமல
வள்ளற் குறியென மானித் தெழுந்து மலைகடலுங்

*கொள்ளற் குறுபுகழ்க் கோன்ஷம்சுத் தாசீன் கொழுங்கிரிவாய்*
*நள்ளற் பொழுதிடை நான்பட்ட துன்பமென் னங்கையரே.* (195)

**பாங்கி தலைவன் றீங்கெடுத் தியம்பல்.**

(இ-ள்.) தோழி தலைவன் பொல்லாங்கை யெடுத்துக் கூறுதல்.

*ஆயா தவரை யடுத்தன நாமவ ரன்பொழிந்திங்*
*கோயா துறுதவத் தோன்ஷம்சுத் தாசீ னொளிர்வரையீர்*
*பாயா வருமிருட் பானா ளிரவிடைப் பற்றலர்போன்*
*மாயா தியற்றி மறைந்தன ரிந்த வடுக்குறியே.* (196)

**தலைவன் புலர்ந்து போதல்.**

(இ-ள்.) தலைவன் தான் குறிக்கப்பட்ட இடத்தி லிருந்து, தலைவி அல்லகுறி யடைந்து வாராமையால் வருந்தித் தன்னூர்க்குப் போதல்.

*போர்தந்த வாட்கைப்பு மான்ஷம்சுத் தாசீன் பொருந்தலர்போன்*
*மார்தந்த கொங்கை மகிழ்நலம் வேட்டு வரவழைத்திக்*
*கார்தந்த கங்குற் கனையிருட் சாரலிற் கைவிட்டுவெஞ்*
*சூர்தந்த நஞ்சே யுனக்கே னொருகொம்பு சூடுதற்கே.* (197)

இதுவரையும் ஒன்பதாநாள் நிகழ்ச்சி.

------

**புலர்ந்தபின் வறுங்களந் தலைவிகண் டிரங்கல்.**

(இ-ள்.) ஒன்பதாநாள் இருள் புலர்ந்த பின் தலைவி வெற்றிடத்தைக்கண்டு வருந்துதல். இருள்புலர்தல்-விடிதல்.

*கார்செய்த வண்கைப்பு மான்ஷம்சுத் தாசீன் கனகவெற்பில்*
*யார்செய்த மாதவ மோமடி காளல தற்பகலு*
*நீர்செய்த மாதவ மோவென்ற னாயகர் நீளணியிலொன்*
*றேர்செய்த தும்மை யிருஞ்சுகம் யாவுமின் றெய்துறவே.* (198)

**தலைவி தன்றுணைவிக் குணர்த்தல்.**

(இ-ள்.) தலைவி தன்றுன்பத்தைத் தன்றோழிக்குச் சொல்லுதல்.

*முடியிருந் துண்ப தெனநினைந் தேனவர் முட்டியவன்*
*படியிருந் துண்ணுங் கரும்பிணை யாய தகிலமெல்லாங்*
*குடியிருந் தார்புகழ்க் கோன்ஷம்சுத் தாசீன் கொழுங்கிரிவாய்த்*
*தொடியிருந் தோங்குகை யாயினிச் சூழ்வதென் றொல்வினைக்கே.* (199)

### தலைமக ளவலம் பாங்கி தணித்தல்.

(இ-ள்.) தலைவியின் றுன்பத்தைத் தோழி தணித்துக் கூறுதல்.

*வீணா யழுங்கி மெலியன்மின் னேநந்த மெய்யருளார்*
*பூணார் படிற்றுரை வாய்மையு நீக்கிலர் பொங்கியம்பல்*
*கோணா ததிர்முன்றிற் கோன்ஷம்சுத் தாசீன் குளிர்பொழில்வாய்*
*மாணார் முடங்கலும் பூப்பதுண் டோவல்லி மாமலரே.* (200)

### இறைவனமேற் பாங்கி குறிபிழைப்பேற்றல்.

(இ-ள்.) பத்தாநா ளிரவுக்குறியில் வந்த தலைவன்மேற் பாங்கி அல்லகுறிப்பிட்ட குற்ற மேற்றிக் கூறுதல்.

*பெண்ணா ரமுதப் பெருநலங் காத்துமைப் பேணுமெம்மை*
*யெண்ணா தொறுத்தீர் மறந்தீர் வரவினி யென்றுமும்மூர்*
*மண்ணாள் வரோதயன் மால்ஷம்சுத் தாசீன் மலையவெற்பி*
*லண்ணா லறியே னறிந்தா லிருப்பெமக் கவ்விடமே.* (201)

### இறைவிமே லிறைவன் குறிபிழைப் பேற்றல்.

(இ-ள்.) மேற்கூறிய குற்றத்தைத் தலைவன் றலைவி மேலேற்றிக்கூறுதல்.

*எல்லா மவளெனக் கேதொன்று மில்லையென் றெண்ணியெழும்*
*பொல்லா விரவிடைப் புக்கலைந் தேனைவிண் பூதலத்துஞ்*
*சொல்லா லுயர்பெரு மான்ஷம்சுத் தாசீன் சுடர்க்கிரிவாய்*
*நல்லாய் மறந்தனை யென்றனை யேற்பழி நாளைக்குமே.* (202)

### அவள் குறிமருண்டமை யவளவற் கியம்பல்.

(இ-ள்.) தலைவி குறி மயங்கியதைப் பாங்கி தலைவனுக்குக்கூறுதல்.

*மாங்கனி யாவி விழவெழுந் தோடிநின் வண்குறியென்*
*றாங்கனி யாயமந் தோவலைந் தாக மலுத்தளவில்*
*சோங்கனி யாவர்க்கு மால்ஷம்சுத் தாசீன் சுடர்க்கிரியோய்*
*பூங்கனி பட்ட துயரள வோவிந்தப் பூவளவே.* (203)

### அவன் மொழிக் கொடுமை சென் றவட் கியம்பல்.

(இ-ள்.) தலைவன் சொல்லிய சொல்லின் கொடுமையைத் தோழிதலைவிக்குச் சொல்லுதல்.

*வானே றதிரொலி வல்லியங் கைம்மலை மற்றனவுந்*
*தானேறு மல்லிடை நின்வர வின்றித் தனித்துழன்றோர்*

கோனே றணையதக் கோன்ஷம்சுத் தாசீன் குலக்கிரிவாய்
யானேறிப் போந்தன னென்றன ராலன்ப ரேந்திழையே. (204)

**என்பிழைப் பன்றென்றிறைவி நோதல்.**

(இ-ள்.) குறி பிழைத்தது என்பிழை யன்றென்று தலைவி நொந்துகூறுதல்.

சித்தமெ லாமவர்க் கேகுறிக் கேசெவி சேர்த்தலர்வாய்ச்
சத்தமெ லாங்குறித் தேன்றவித் தேன்பைந் தமிழ்க்கணிதூ
சத்தமெ லாந்தரு வோன்ஷம்சுத் தாசீ னடுக்கலிலென்
யுத்தமெ லாமறி வீர்வினை யோவிவையொண்ணுதலே. (205)

இப்பன்னிரண்டும் அல்லகுறியின் விரியென்க.

இதுவரையும் பத்தாநாட் பகல் நிகழ்ச்சி.

-------

**தாய்துஞ்சாமை.**

(இ-ள்.) தாய் விழித்திருத்தல்.

நள்ளென் றிருண்டு நடுநிசி போதர நற்றமிழ்க்குக்
கொள்ளென் றளிக்குமிக் கோன்ஷம்சுத் தாசீன் குளிர்சிலம்பிற்
றெள்ளென் றெவையுஞ் செழுந்துயில் கொண்டுறற் றேர்ந்துமன்னை
தள்ளென் றவைமறந் தாளிருந் தாளென்ன சஞ்சலமே: (206)

**நாய் துஞ்சாமை.**

(இ-ள்.) தாயுறங்கியபின் ஊரிலுள்ள நாயுறங்காதிருத்தல்.

நாய்துயி லாத சளமொழிந் தாலுமச் சார்பிருந்த
பேய்துயி லாதுபெம் மான்ஷம்சுத் தாசீன் பெருஞ்சிலம்பி
னாய்துயி லாதவ் விழிதுயின் றாலு நராற்றுமதன்
வாய்துயி லாது வருவதெவ் வாறன்பர் மாதரசே. (207)

**ஊர்துஞ்சாமை.**

(இ-ள்.) நாயுறங்கினும் ஊரிலுள்ளா ருறங்காதிருத்தல். ஊர்- ஆகுபெயர்.

தோடுறங் காமலர்த் தோகைநல் லாயிறை சூழ்வறநற்
கோடுறங் காமுன்றிற் கோன்ஷம்சுத் தாசீன் கொழுங்கிரிசேர்
காடுறங் காகருங் காருறங் காகடற் காவுறங்கா
நாடுறங் காததற் கென்செய்த னோமுன்னை நாட்பழியே. (208)

### காவலர் கடுகுதல்.

(இ-ள்.) ஊர் துஞ்சியபின் நகர்காப்போர் பறை யடித்துக்கொண்டு ஊர் சுற்றிக் கடுகி வருதல். கடுகல் - விரைதல்.

*படிப்பா லுயர்ந்தநல் லோன்ஷம்சுத் தாசீன் பனிவரையின்*
*றொடிப்பான் மொழியியற் றோகைமின் னேயஞ்சிச் சூழ்வறத்தீங்*
*கொடிப்பான் றிசைமுற்று முற்றெழு காவல ரோங்குபறைக்*
*கடிப்பா னதிரொலி காலனென் றாயதெங் காதிணைக்கே.* (209)

### நிலவு வெளிப்படுதல்.

(இ-ள்.) தலைவன் வருதற் கிடையூறாய் நிலா வெளிப்படுதல்.

*தேறாத் தெளிவினென் செல்வர்வந் தேகுந் திருவருகைக்*
*கூறா யருளுர வோன்ஷம்சுத் தாசீ னொளிர்வரையி*
*னீறாக் கரித்தெனை நித்தலுங் காய்ந்தவிந் நீண்மதிக்கு*
*மாறாக் களங்க மலிந்து மதியிலை மாதரசே.* (210)

### கூகை குழறுதல்.

(இ-ள்.) கூகை குழறக் கேட்ட தலைவி யஞ்சிக் கூறல்.

*வஞ்சின மோபகை யோமுனி வோவரு மங்குலிற்சூன்*
*மஞ்சின மோங்குகைம் மால்ஷம்சுத் தாசீன் வளநகர்வாய்த்*
*துஞ்சின தோர்ந்துமென் றோகைவெங் கூகை தொடர்ந்தரச*
*ரஞ்சின ராக வரற்றியென் னாவி யழிக்கின்றதே.* (211)

### கோழி குரற் காட்டுதல்.

(இ-ள்.) இருவர்க்கு மிடையூறாய்க் கோழி கூவுதல்.

*ஆவற் கருமருந் தன்னநம் மன்ப ரலுத்தகல*
*மாவற் புயப்பெரு மான்ஷம்சுத் தாசீன் மலையமன்னாய்*
*மேவற் கடையெழு யாமத்தி னஞ்சிறை விட்டடித்துச்*
*சேவற் குரற்செயச் செய்ததென் னோமுனந் தீவினையே.* (212)

இவ்வேழும் இரவுக்குறி யிடையீட்டில் வருந்தொழிற் கருமையின் விரி; இவ்வேழில் ஒவ்வொன்றுக்கும் நந்நாந்கு நாழிகையாகக் கொள்க.

இரவுக்குறியிடையீடு-முற்றிற்று.

-----

## வரைதல் வேட்கை.

அஃதாவது - இடையீடுபட்டதனாற் பதினொராநாள் தலைவி மணஞ் செய்தலை விரும்பல்; அஃது - அச்சம் உவர்த்தல் ஆற்றாமையென மூன்று வகைப்படும்.; அவை வருமாறு:-

### தலைமகளைப் பாங்கி பருவரல் வினவல்.

(இ-ள்.) தலைவி துன்பமுற் றிருத்தலைத் தோழி கேட்டல்.

*வாடா மலர்முகம் வாடினை மைக்கண் வடித்தனைபைந்*
*தோடா ரலரெதுஞ் சூடிலை யாயன்னை சொற்ற துண்டோ*
*கோடாத கோன்மையங் கோன்ஷம்சுத் தாசீன் குளிர்சிலம்பி*
*னோடாத மானனை யாயுரை யாயென்கொ லுற்றதுவே.* (213)

### அருமறை செவிலி யறிந்தமை கூறல்.

(இ-ள்.) தலைவி யரிய களவொழுக்கத்தைச் செவிலித்தா யறிந்தமை பாங்கிக்குக் கூறுதல்.

*தண்டா வளத்தன தோன்ஷம்சுத் தாசீன் றடத்தணங்கே*
*யொண்டா ரகைமதி போலுநம் மன்னை யுடற்பசப்பும்*
*வண்டார் புனைகுழற் சோர்வுங்கட் சேப்பு மயக்குமெதிர்*
*கண்டா ளயிர்த்தறிந் தாடொடுத் தாளிரு கட்கணையே.* (214)

### தலைமகன் வருந்தொழிற் கருமை சாற்றல்.

(இ-ள்.) தலைவி தலைவன் வருதற்கருமை பாங்கிக்குக் கூறல்.

*தாயோ துயில்கிலள் ஞாளியு முரன்ன சாற்றுபறை*
*வாயோ வடைக்கில கூகையுங் கோழியு மானுமதித்*
*தீயோ சுடுமிவை யெல்லாந் தொலைத்தன்பர் சேர்வதெவ்வா*
*றாயோ வெனுங்குணத் தான்ஷம்சுத் தாசீ னருட்கிரிக்கே.* (215)

### தலைமகனூருக்குச் செலவொருப்படல்.

(இ-ள்.) தலைவனிருப்பிடத்துக்குப்போதற்குத் தலைவி துணிந்துபாங்கிக்குக் கூறுதல்.

*கூரா ரயில்விழிக் கோமள மேநந்தங் கொற்றவனூர்*
*நேரா யடைந்தவர் நேர்மையெ லாங்கண்டு நீக்கமுறின்*
*றேரார் குலவரிச் சேய்ஷம்சுத் தாசீன் செழுஞ்சிலம்பி*
*லோரா துடல்பொரு ளாவியெ லாமவர்க் கொப்பிப்பமே* (216)

## பாங்கி யிறைவனைப் பழித்துரைத்தல்.

*(இ-ள்.) தோழி தலைவனை நிந்தித்துக் கூறுதல்.*

*மறங்கா லயில்விழி மங்கைநல் லாயவர் வார்த்தையன்பிற்*
*புறங்கா தலுமுள தன்றகன் றாரவண் போந்துமென்னோ*
*வறங்கா தலித்தபு மான்ஷம்சுத் தாசீ னருஞ்சிலம்பி*
*லிறங்காத் துறையி லிறங்கிய தானமக் கிவ்வினையே.* (217)

## இறைவி யிறையோன்றன்னை நேர்ந்தியற்பட மொழிதல்.

*(இ-ள்.) பாங்கி தலைவனியலைப் பழித்தது பொறாளாய்த் தலைவி தலைவனோ டுடன்பட்டவளா யவனியலைக்கூறுதல்.*

*அல்லும் பகலு மடுத்தடுத் தாகு மமைவிலஞர்*
*புல்லுஞ் சுகமும் புறத்துள தாலெனிற் போற்றலர்போர்*
*வெல்லும் பெருந்திறல் வேள்ஷம்சுத் தாசீன் வியன்சிலம்பிற்*
*சொல்லுங் குறையெவை யோவன்பர் பாலினித் தோகையரே.* (218)

இதுவரையும் பதினொராநாள் நிகழ்ச்சி.

-------

## கனவு நலி புரைத்தல்.

*(இ-ள்.) தலைவன் கனவிற் கூடினனாக, விழித்தபின்பு பொய்யாய்ப்போன துன்பத்தைப் பன்னிரண்டாநாள் தலைவி பாங்கியினிடத்திற்கூறுதல்.*

*கூறா தொருதுயில் கொள்ளவு மன்பர் குறுகியென்னை*
*வாறாய் முலைதிற வாய்நெகி ழாய்கலை வாயமுதந்*
*தாறா யெனுமுனல் லோன்ஷம்சுத் தாசீன் றமிழ்ச்சிலம்பிற்*
*காறார் குழலணங் கேவிழித் தேனவர்க் காண்கிலனே.* (219)

## கவினழி புரைத்தல்.

*(இ-ள்.) விகாரத்தாற் றலைவிதன் னலனழிந்ததைப் பாங்கியுடன் கூறுதல்.*

*காட்டுக் கெறித்தநி லாவென வென்னிரு கைக்கயச்செங்*
*கோட்டுத் தனநல மன்பர்கைப் பேழையிற் கூடலின்றிப்*
*பாட்டுக் கினியபெம் மான்ஷம்சுத் தாசீன் பனிவரைவாய்ச்*
*சோட்டுக் கருங்கொடி சூழ்நுத லாய்நிதஞ் சோர்கின்றதே.* (220)

## தன்றுயர் தலைவற் குணர்த்தல் வேண்டல்.

*(இ-ள்.) தலைவி தன் றுன்பத்தைத் தலைவனுக்கு அறிவிக்க வேண்டுமென்று பாங்கியுடன் கூறுதல்.*

*பிடியோ டனநடைப் பெண்ணணங் கேமயல் பெற்றதல்லா*

லடியோ டெவரை யடைந்தன மன்பர்க் கரசர்மணி
முடியோ டிறைஞ்சிசை வேள்ஷம்சுத் தாசீன் முதிர்கிரிவாய்த்
தொடியோ டறுவை தொலைந்தன ளென்னமுன் சொல்லுதற்கே. (221)

**துன்புறற் பாங்கி சொல்லெனச் சொல்லல்.**

(இ-ள்.) யான் துயரடைதலைத் தலைவற்கு நீ சென்று சொல்லென்று தலைவி கூறியதற்குத் தலைவியை நோக்கிப் பாங்கிகூறுதல்.

பிணைதந்த வன்பிரு பேர்க்கிடை மற்றையர் பேசலென்னோ
கணைதந்த வேல்விழிக் கன்னிநல் லாய்புவிக் காவலர்கட்
கணைதந்த செம்பதத் தான்ஷம்சுத் தாசீ னருங்கிரிமே
லிணைதந்த நின்மய னீயே சொலச்சுக மெய்துறுமே. (222)

**அலர் பார்த்துற்ற வச்சக்கிளவி.**

(இ-ள்.) ஊரிலுள்ளார் சொல்லும் பழிச்சொல்லைக் கருதி அதனாலுற்ற பயத்தாற் றலைவி கூறுஞ்சொல்.

மலர்க்குள் ளொளிரு மதிமுகத் தீரைம் மலர்க்கணைவில்
வலர்க்குள் ளுடைந்து மறுகேன் மறகநன் மண்டலிகர்
பலர்க்குள் ளுயர்ந்தபு மான்ஷம்சுத் தாசீன் பவளவல்லி
யலர்க்குள் ளலரா வலர்தந்த திந்த வரும்பதியே. (223)

**ஆறு பார்த்துற்ற வச்சக்கிளவி.**

(இ-ள்.) வழியைப்பார்த்து அதனாலடைந்த பயத்தாற் றலைவி பாங்கியை நோக்கிக் கூறுஞ் சொல். பார்த்தல்-கருதல்.

பேரா ரமுதப் பிழம்பே யெளியேன் பெறற்குறுமோ
காரார் கயந்துவைத் தன்பர்செந் நீர்படி கான்மலர்பூந்
தாரார் துணைப்புயத் தான்ஷம்சுத் தாசீன் றடத்திலென்கண்
ணீராற் கழுவியைம் பாலாற் றுடைக்குமந் நீர்மையின்றே. (224)

**காம மிக்க கழிபடர் கிளவி.**

(இ-ள்.) தலைவி ஆசைமிகுந்து சிறப்பச் சிந்தித்துச் சொல்லுஞ்சொல்; இக்கிளவிக்குக் கடல், கானல், விலங்கு, புள் முதலியவற்றை விளித்துத் தலைவி யிரங்கிக் கூறுதன் மரபு.

எறியு மலைகட லேசுற வேகுரு கேயினமுஞ்
செறியும் பெருந்தவத் தோன்ஷம்சுத் தாசீன் செழுஞ்சிலம்பிற்
பறியுந் தொடியும் படருந் துணியும் பசப்புமையல்
வெறியுஞ் சிறையும் விளைவு முணர்ந்திலர் மெய்யன்பரே. (225)

### தன்னுட் கையாறெய்திடு கிளவி.

(இ-ள்.) தலைவி தன்னிடத்துத் துன்பத்தைப் பிறிதொன்றன் மேலிட்டுச் சொல்லுதல்.

*மஞ்சங் கடுத்தனை மையற் பெருத்தனை மாமுலையும்*
*விஞ்சப் பொலிந்தனை மெய்யும் வெளுத்தனை வேற்றரசர்*
*துஞ்சப் பொருபடை வேள்ஷம்சுத் தாசீன் சுடர்க்கிரிகண்*
*டஞ்சும் பிறையே யகன்றதுண் டோநிற்கு மன்பிறையே.* (226)

### நெறி விலக்குதல்.

(இ-ள்.) தலைவி தலைவன் வரும்வழியை விலக்கெனப் பாங்கியொடு கூறுதல்.

*பேரா தரப்பெரு மான்ஷம்சுத் தாசீன் பிறங்கலெனை*
*வேரா ரிளமுலை யேகுறள் பேயோ டிருசுடருந்*
*தேரா தயிர்க்குஞ் சிறுநெறிச் சாரற் செறியிருளில்*
*வாரா திருக்க வழுத்துதி யன்பர்க்கென் வந்தனமே.* (227)

### குறி விலக்குவித்தல்.

(இ-ள்.) தலைவி தலைவன்வரு மிரவுக்குறியை விலக்கெனப் பாங்கியொடு கூறுதல்.

*நெறிக்குங் கருங்குழ லாய்புனங் காவ னிகழ்த்தினளெல்*
*லெறிக்கும் பகலவ ணேய்வதல் லாலன்பர்க் கேதிலரைத்*
*தறிக்குங் கடுத்தலை வேள்ஷம்சுத் தாசீன் தடத்தகத்தற்*
*குறிக்குங் குறிக்குட் குறுகலென் றோதலர்க் கோதைமின்னே.* (228)

### வெறி விலக்குவித்தல்.

(இ-ள்.) தாய்தந்தையர் வெறியாடுதலை விலக்கும்படி பாங்கிக்குத் தலைவி கூறுதல். வெறியாடுதல் - ஆடறுத்துப் பலியிடுதல்.

*சேய்கொண்ட பூம்பதத் தோன்ஷம்சுத் தாசீன் சிலம்பிலெம்மைப்*
*பேய்கொண்ட தென்ன வறிவழிந் தன்பருட் பெய்யுமைய*
*னோய்கொண்ட தோர்கில ளாய்வெறி யாட னுடங்குமிடைத்*
*தாய்கொண்ட வாவ்வணங் கேதவிர்ப் பாய்வருந் தண்புகழே.* (229)

### பிற விலக்குவித்தல்.

(இ-ள்.) தலைவி யிதர வரவைத் தலைவற்குச் சொல்லி அவர் வரவைவிலக்கெனப் பாங்கிக்குக் கூறுதல்.

*சரச குணசுக மால்ஷம்சுத் தாசீன் றனிச்சிலம்பி*
*லரச மதகரி யட்டவர்க் கன்றி யணிமறுகின்*

முரச மதிர்தொனி யார்மணத் தென்ன முடுகிமலர்ப்
பிரச நறுங்குழ லாய்விலக் காயவர்ப் பிற்படவே. (230)

**குரவரை வரைவெதிர் கொள்ளுவித்தல்.**

(இ-ள்.) நந்தலைவர் விட்ட பெரியோர் மணம்பேசிவர அவரை நம்மவ ரெதிர்கொண்டழைக்குமாறு செய்யெனத் தலைவி பாங்கி யொடு கூறுதல்.

வான்கொண்ட மெய்ப்புகழ் மால்ஷம்சுத் தாசீன் மலையவெற்பி
னான்கொண்ட கற்பழி யாதன்னை யாதியர் நாடுமன்பர்
தான்கொண்ட மன்றலந் தூதெதிர் கொள்ளத் தழைத்தசுனைத்
தேன்கொண்ட காவியஞ் சேல்விழி யாய்சொல் செழுங்கிளைக்கே. (231)

இவற்றுள் - அருமறை செவிலியறிந்தமைகூறலுந்தலைமகன்வருந் தொழிற் கருமை சாற்றலும் அலர்பார்த்துற்ற அச்சக்கிளவியும் ஆறு பார்த்துற்ற அச்சக்கிளவியும் நெறி விலக்குவித்தலும் குறி விலக்குவித்தலும் வெறி விலக்குவித்தலும் பிற விலக்குவித்தலும் குரவரை வரைவெதிர் கொள்ளு வித்தலுமாகிய ஒன்பதும் அச்சத்திற்கும், தலைமகனூர்க்குச் செலவொருப் படுதலும் பாங்கியிறைவனைப் பழித்தலும் தலைவி யிறையோன்றன்னை நேர்ந்தியற்பட மொழிதலுமாகிய மூன்றும் உவர்த்தற்கும், பாங்கி பருவரல் வினவலும் கனவு நலிபுரைத்தலும் கவினழி புரைத்தலும் தன்றுயர் தலைவற் குணர்த்தல் வேண்டலும் துன்புறல் பாங்கி சொல்லெனச் சொல்லலும் காம மிக்க கழிபடர் கிளவியும் தன்னுட்கையா றெய்திடுகிளவியுமாகிய ஏழும் ஆற்றாமைக்கு முரியன. பருவரல் வினவிய பாங்கியென்பதற்குவினவலு மொரு துறையாக்கலாற் சூத்திரத்திற் கூறிய பதினெட்டுக்கு மேற் பத்தொன்பதாயிற்று.

இதுவரையும் பன்னிரண்டாநாள் நிகழ்ச்சி.

வரைதல் வேட்கை-முற்றிற்று.

-------

## வரைவு கடாதல்

அஃதாவது - பாங்கி தலைவனுடன் வரைவுகடாதல். வரைவு கடாதல் - மணம் வினாவுதல்; அது - பொய்த்தல் மறுத்தல் கழறல் மெய்த்தலென நான்கு வகைப்படும்; அவை வருமாறு:-

**வினவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பல்.**

(இ-ள்.) முன் வரைதல் வேட்கையில் தலைவி அருமறை செவிலியறிந்தமை கூறியவதனைத் தோழி தன்னைச் செவிலி வினவியதாகவும் அதற்குத் தான் மறைத்துக் கூறியதாகவுந் தலைவற்குக் கூறுதல்;இக்கிளவிமுதல், பின்வருங் கவினழிபுரைத்த வீறாகக் கூறிய கிளவிகள்பலவற்றுள்ளும் குறிப்பினானும் வெளிப்படையானும் வரைவுகடாவிய வாறு கண்டுகொள்க.

*கிளையோ டுலகளிப் போன்ஷம்சுத் தாசீன் கிளர்சிலம்ப*
*முளையோ டிகல்புயத் தன்னையு மென்னை முடுகியிவள்*
*வளையோ டறுவை வழங்கிய தேதென மங்குலெல்லாங்*
*களையோ டிசைவகை கற்றன ளென்னக் கரந்தனனே.* (232)

**அலரறிவுறுத்தல்.**

(இ-ள்.) ஊரில் தலைவியைத் தூற்றும் அலர்விரிந்ததென்று தலைவனுக்குப் பாங்கி யறிவுறுத்தல். அலர் - பழிமொழி. அறிவுறுத்தல் - அறியும்படி கூறுதல்.

*ஆர்வா யடைப்பினு மூர்வா யடைப்ப தரிதெனநன்*
*கோர்வா யிறைவா யுனதிரு கையல ருற்றவிந்தப்*
*பார்வா யலரெனப் பைங்கொடி சோரப் படர்ந்தமுடிச்*
*சார்வா யலர்ந்ததெம் மான்ஷம்சுத் தாசீன் றடத்தக்கதே.* (233)

**தாயறிவுறுத்தல்.**

(இ-ள்.) தலைவியின் களவைத் தாயறிந்தாளென்று தலைவனுக்குத் தோழி யறிவுறுத்தல்.

*காமா நலஞ்சுடக் காய்ந்தொளி மாழ்கிக் கரிந்தமுலைக்*
*காமா வலிபசப் பாதிகண் டேங்கி யகிலமெல்லாந்*
*தாமா வருபெரு மான்ஷம்சுத் தாசீன் றடஞ்சிலம்போ*
*யேமாந் தனையிவை யென்கொலென் றாளன்னை யென்னையுமே.* (234)

**வெறியச்சுறுத்தல்.**

(இ-ள்.) அன்னை வெறியாடுதல் செய்ய நினைத்தாளென்று தலைவனுக்குப் பயமுறுத்திப் பாங்கி கூறுதல்.

*அடலுற்ற வண்ணல்பி ரான்ஷம்சுத் தாசீ னருஞ்சிலம்பின்*
*மிடலுற்ற வேலன்ப நீயவி யாமயல் வெவ்வழன்முண்*
*டுடலுற்ற தோர்கில ளாயுலை வாயயர்ந் துள்ளுடைந்து*
*கடலுற்ற கண்ணியென் றாய்வெறி யாடற் கருதினளே.* (235)

**பிறர்வரை வுணர்த்தல்.**

(இ-ள்.) பிறர் மணங்குறித்து வந்ததைத் தலைவற்குப் பாங்கி கூறுதல்.

*சங்கைக் குரியபு மான்ஷம்சுத் தாசீன் றடத்துறுவேற்*
*செங்கைக் கொளிரர சேமுகத் திங்களுஞ் சேல்விழியுங்*
*கொங்கைக் குடமுங் குறுநகை யுங்குழற் கொண்டலுங்கண்*
*டெங்கைக் குருகா தவரெவ ரேயிவ் விருநிலத்தே.* (236)

### வரைவெதிருணர்த்தல்.

*(இ-ள்.)* பாங்கி தலைவனை நோக்கி நீ மணங்குறித்துத் தூதனுப்பினால் தலைவி சுற்றத்தா ரெதிர்கொண்டு வருவரெனக் கூறுதல்.

*பொய்க்கலை யாப்பொரு ளேநன்ஷம்சுத் தாசீன் பொதியவெற்பின்*
*மெய்க்கலை கண்டவர் மேவினன் பாவவர் மேயவரு*
*கைக்கலை யாதெதிர் வாரெமர் வெண்ணெய் கரத்திருத்தி*
*நெய்க்கலை வாரென நீயலை யேலல்லி னீள்குறியே.* (237)

### வரையுநாளுணர்த்தல்.

*(இ-ள்.)* தலைவனுக்குப் பாங்கி மணஞ்செய்யுநாளை யறிவித்தல்.

*மணிமா ளிகைத்திரு மால்ஷம்சுத் தாசீன் மலையவெற்பிற்*
*கணிமா மலருங் கலைமதி வட்டமுங் கண்டதன்றி*
*யணிமா வருபெரு மாவலர் வாயமு தாயிழையை*
*நணிமா மணம்பெறக் காலமு நேரமு நாளுமின்றே.* (238)

### அறிவறிவுறுத்தல்.

*(இ-ள்.)* பாங்கி தலைமக ளறிவைத் தலைவனுக் கறியக் கூறுதல்.

*பூமக ணாதனெம் மான்ஷம்சுத் தாசீன் புனிதவெற்பி*
*னாமக ணாமக ளென்னநன் னீதி நயந்தெவர்க்குங்*
*கோமக ணின்பழி யன்னையி னென்னையுங் கொண்டொழித்துக்*
*காமக ளாயின ளன்பமற் றேது கழறுவதே.* (239)

### குறிபெயர்த்திடுதல்.

*(இ-ள்.)* பாங்கி யிக்குறி யியல்பல்ல, வேறோர் குறியிடை வருகவென்று தலைவனுக்குக் கூறுதல்.

*மாணாப் பொலிபுய மால்ஷம்சுத் தாசீன் மணிவரைவாய்ப்*
*பேணாப் பெருந்தவத் தண்ணனின் சார்வைப் பெரிதுமுன்னி*
*வீணாய்க் கலங்குமென் மெல்லிநல் லாளன்னை மேவியங்கண்*
*காணாக் குறிபெயர்த் தாடுக நீயுமுன் கன்னியுமே.* (240)

இதுவரையும் பதின்மூன்றாம்நாள் நிகழ்ச்சி

---------

### பகல் வருவானை யிரவு வருகென்றல்.

*(இ-ள்.)* வெளி.

*வில்லுக்கு வல்லவெற் பாவிண்மண் ணாகி விளங்கினுந்தன்*
*சொல்லுக்கு வல்லபு மான்ஷம்சுத் தாசீன் சுடர்க்கிரிமே*
*வல்லுக்குப் பூப்பதல் லாலனி யார வனுதினமு*
*மெல்லுக்குப் பூப்பதுண் டோவிவ ளல்லி யிருமலரே.* (241)

**இரவு வருவானைப் பகல் வருகென்றல்.**

*(இ-ள்.)* வெளி.

*நஞ்ச முமிழ்படை வேலோய் ககனொடு நானிலமு*
*மஞ்ச லெனப்புரப் போன்ஷம்சுத் தாசீ னருட்கிரிமேல்*
*விஞ்ச வரும்பகற் கல்லா லிரவிடை மேயவிவள்*
*கஞ்ச மலர்தரு மோவரு மோசுகங் காண்பதற்கே.* (242)

இதுவரையும் பதினான்காநாள் நிகழ்ச்சி.

------

**பகலினு மிரவினும் பயின்று வருகென்றல்.**

*(இ-ள்.)* பகற்காலத்தும் இராக்காலத்தும் நெருங்கி வருகவெனப் பாங்கி தலைவற்குணர்த்தல். பயிலல் - நெருங்கல்.

*புகலோ டொளிசெய் புயத்தர சேதினம் போற்றலர்போ*
*ரிகலோ டிசையறுப் போன்ஷம்சுத் தாசீ னிருஞ்சிலம்பி*
*லகலோ டணிமுலை யாற்றரி தான்மய லாற்றியுய்யப்*
*பகலோ டிரவும் பயின்றுறு வாயிந்தப் பைந்திழற்கே.* (243)

**பகலினு மிரவினு மகலிவ ணென்றல்.**

*(இ-ள்.)* பகற்காலத்து மிராக்காலத்து நீ யிவ்விடத்து வராதேயென்று தலைவனைப் பாங்கி விலக்குதல்.

*சொல்லுந் துயிலிலை யென்மதிக் குன்னலர் சூழ்மதிலைக்*
*கல்லுங் கடகரிக் கோன்ஷம்சுத் தாசீன் கனகவெற்ப*
*கொல்லுங் குறவோடு கூறு மலருங் குடிகொளலா*
*லல்லும் பகலு மகலிவ ணுற்ற வருங்குறியே.* (244)

**உரவோ னாடு மூருங் குலனு மரபும் புகழும் வாய்மையுங் கூறல்.**

*(இ-ள்.)* பாங்கி தலைவனை நோக்கி நாடு முதலியவற்றாற் சிறந்த நீ மணஞ்செய்யாது வந்து போவது தகுதியன்றெனக் கூறுதல்.

*நீடுஞ் சிலைவடி வேலண்ண லேமண நேர்ந்திலையேற்*
*சூடும் பெரும்புகழ் மால்ஷம்சுத் தாசீன் சுடர் தடத்துன்*

ணாடும் பதியுங் குலனுங் குடியுமெய்ந் நற்புகழுங்
கோடும் பிறர்குறை யோவருங் கைதவங் கூடிடுமே. (245)

**ஆறுபார்த்துற்றவச்சங்கூறல்.**

(இ-ள்.) வரும்வழியைக் கருதி அவ்வழியிற் றிரிதரும் விலங்காற் றோன்றும் பயத்தைத் தலைவனுக்குத் தோழி கூறுதல்.

கொல்லுங் கரடி கொடுவரி சீயங் கொதித்தெழுந்து
செல்லுஞ் சிறுநெறிச் சாரலன் பாவினிச் சேரலென்றுஞ்
சொல்லும் பெருஞ்சுக வேள்ஷம்சுத் தாசீன் சுடர்க்கிரிமே
லல்லும் பொருங்குழ லாய்முத்த வெண்ணகைக் கன்புவைத்தே. (246)

**ஆற்றாத்தன்மையாற்றக்கூறல்.**

(இ-ள்.) தலைவியின் ஆற்றாத்தன்மையை யாற்றுதல் செய்யத்தோழி தலைவனுக்குக் கூறுதல்.

மயக்குந் தெளியும் வடிக்கு மழைக்கண் மருண்டெழுந்து
தியங்கு முயிர்க்குஞ் சினக்கு முலைமுகஞ் சேரவுன்னித்
தயங்கு மரசர்பி ரான்ஷம்சுத் தாசீன் றடஞ்சிலம்பிற்
கயங்கு மயில்விழிக் கன்பநின் சோகங் கடிந்தருளே. (247)

**காவன் மிக வுரைத்தல்.**

(இ-ள்.) குறியிடத்து நீ வருவதற்கும் அவள் வருவதற்கும் இடையூறாகிய காவல் மிகவாயினதென்று தோழி தலைவனுக்குக் கூறுதல்.

மண்காக்கும் பூபர்பி ரான்ஷம்சுத் தாசீன் மலையவெற்பிற்
கண்காக்கு மெம்மிமை போலிரு காலுங் கருத்தமைத்திப்
பெண்காக்கு மன்னைவெங் காவலர் கைப்பறை பெய்யுமுகில்
விண்காக்குஞ் செல்லென வேழுழங் காநிற்கும் வேலண்ணலே. (248)

**காம மிக வுரைத்தல்.**

(இ-ள்.) தலைவி வேட்கை மிகவாயினதென்று தோழி தலைவனுக்குக் கூறுதல்.

சினைத்தார் படர்புயச் செம்மலொன் னார்தரு சேனைமுற்றுங்
கனைத்தா ருயிர்கொளு மால்ஷம்சுத் தாசீன் கனகவெற்பிற்
றனைத்தா னடைந்தார் தமைச்சுட லன்றித் தரணிமிசை
நினைத்தாற் சுடுங்கொணின் காமா நலமொத்தந் நீணெருப்பே. (249)

### கனவு நலி புரைத்தல்.

(இ-ள்.) தலைவிக்குக் கனவினால் வந்த துன்பத்தைப் பாங்கி தலைவனுக்குக் கூறுதல்.

*முலையோ நெருடி யிதழமு துண்டு முழுதுமிடைக்*
*கலையோ நெகிழ்க்கக் கனவொன்று கண்டவக் காரிகைமா*
*மலையோ டிகல்புய மால்ஷம்சுத் தாசீன் மகிழ்சிலம்ப*
*வுலையோ டுறுமெழு காகினள் வேறென்கொ லோ துவதே.* (250)

### கவினழிபுரைத்தல்.

(இ-ள்.) தலைவி அழகழிந்திருத்தலைத் தோழி தலைவனுக்குக் கூறுதல்.

*பொன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மேனி புலர்ந்துதனத்*
*தின்வண்ணம் பூரித் திருஞ்சுணங் கேற்றங் கிறைபுனற்கண்*
*டன்வண்ணஞ் சேப்பச் சலித்தன ளன்ப தரணிமுற்றும்*
*பன்வண்ண மெய்ப்புகழ் வேள்ஷம்சுத் தாசீன் பனிவரைக்குமே.* (251)

இவற்றுள்-வினவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பல் முதலாகப் பிறர் வரைவுணர்த்த லீறாகக் கூறியவைந்தும் பொய்த்தற்கும், குறி பெயர்த் திடுதலும் பகல் வருவானை யிரவு வருகென்றல் முதலிய நான்கும் மறுத்தற்கும், உரவோன் நாடு மூருங் குலனு மரபும் புகழும் வாய்மையுங் கூறலொன்றுங் கழறற்கும், வரைவெதிர் வுணர்த்தல் முதலாகிய ஏனைய ஒன்பதும் எய்துதற்குமுரியன; இவை யெல்லாங் குறிப்பினானும் வெளிப் படையானும் வரைவுகடாவியவாறுணர்க.

வரைவுகடாதன்-முற்றிற்று.

-----

### ஒருவழித்தணத்தல்.

அஃதாவது-மேற்கூறிய பாங்கியொடு வரைதற்குடன்பட்ட தலை வன் தன்னூர்க்கொருவழி போய்வருகிறேனென்றுபோதல். அது செலவறி வுறுத்தல் செலவுடன் படாமை செலவுடன்படுத்தல் செலவுடன் படுதல் சென்றுழிக் கலங்கல் தேற்றியாற்றுவித்தல் வந்துழி நொந்துரைத்தல் என எழுவகைப்படும்; அவை வருமாறு;-

### தன்பதிக்ககற்சி தலைவன் சாற்றல்.

(இ-ள்.) தலைவன் தன்னூர்க்குப் போய்வருதலைப் பாங்கிக்குக் கூறுதல்.

*போற்றும் புணர்முலைப் பூவைநல் லாய்நந்தம் பொன்னகர்போந்*
*தாற்றுங் கருமஞ் சிலவுள வாலங் கடைந்தடைவல்*

கூற்றுங் கொடியுங்கொள் வேல்ஷம்சுத் தாசீன் குலக்கிரிவாய்த்
தேற்றுங் கடமை நினக்கல் தில்லையென் சேல்விழிக்கே. (252)

**பாங்கி விலக்கல்.**

(இ-ள்.) தலைவன் பிரிதலைப் பாங்கி விலக்குதல்.

நீங்குங் கடுஞ்சொன் னிகழ்த்திநெம் மான்செவி நேருமுன்னுள்
ளோங்கும் விடுமுயி ரென்செய்கு வேனிருந் தேழுலகுந்
தாங்கும் பெரும்புயத் தான்ஷம்சுத் தாசீன் றடஞ்சிலம்பி
லோங்குஞ் சிலைவல வாவொழி வாயுரை யூர்புகலே. (253)

**தலைவ னீங்கல் வேண்டல்.**

(இ-ள்.) தலைவன் பாங்கியை யுடன்படுத்தி நீங்கற்பொருட்டு வேண்டிக் கூறுதல்.

ஏகமென் றோரெம் மிருவோ ருயிர்க்கு மிசைந்தபெருஞ்
சோகமென் னேனுமென் னேன்வரு வேனுடன் றுன்னலர்தம்
மாகமென் பேய்க்களிப் போன்ஷம்சுத் தாசீ னருஞ்சிலம்பிற்
போகமென் றோளணங் கேவிடை வேண்டும் புகன்றருளே. (254)

**தலைவனைப் பாங்கி விடுத்தல்.**

(இ-ள்.) பாங்கி தலைவனை யூர்க்குப் போய்வருகவென விடுத்தல்.

வள்ளத் திருவாய் மலரமு தெம்மனை வாழினுமுன்
னுள்ளத் திருத்தி யுடன்வரல் வேண்டுமிங் கொன்னலர்தோள்
விள்ளத் துணித்தவெம் மான்ஷம்சுத் தாசீன் வியன்சிலம்பி
லள்ளத் தகுமரு ளோயயர்ந் தாலுண் டரும்பழியே. (255)

**பாங்கி தலைவிக்கவன் செலவுணர்த்தல்.**

(இ-ள்.) தலைவிக்குப் பாங்கி தலைவன் பிரிவைச் சொல்லுதல்.

தன்னா ருயிரென்கை தந்தகன் றார்சில சாதித்தற்கூர்
நின்னா ருயிரனை யார்தரி யாரெதிர் நேரலர்முன்
மன்னா யுயருமெம் மான்ஷம்சுத் தாசீன் மலையவெற்பிற்
பொன்னா ரணியிழை யாய்புல ராயின்று போதுவரே. (256)

**தலைவி நெஞ்சொடு புலத்தல்.**

(இ-ள்.) தலைவி மனத்தொடு வருந்திக் கூறுதல்.

மறவா வரமளித் தெற்பிரி யேனெனு மன்னரின்று
துறவா விருந்து துயரளித் தாரிது சூழ்நெஞ்சே

யறவாழி யண்ணல்பி ரான்ஷம்சுத் தாசீ னருஞ்சிலம்பி
லிறவா திருப்பவர்க் குண்டல வோபல் லிடுக்கங்களே. (257)

**சென்றோனீடலிற் காமமிக்க கழிபடர்கிளவி.**

(இ-ள்.) தலைவன் மாலைக்காலம்வரையும் வராமல் வரவு நீட்டித்தலாற் காமமிக அதனால் மிகுந்த நினைவொடு கூறுதல்.

எறியுந் திரைக்கட லேகுரு கேயெனை யேதணந்து
பறியுந் துணைவர் பயிலிட நோக்கியிப் பாவிதுய
ரறியும் படியொரு காலறை வீரற மாயிரமாஞ்
செறியும் பெருந்தவச் சேய்ஷம்சுத் தாசீன் செழுங்கிரிக்கே. (258)

**தலைவியைப் பாங்கி யாற்றுவித்தல்.**

(இ-ள்.) மேற்கூறியவாறு வருந்திய தலைவியைப் பாங்கி யவ் வருத்தத்தைத் தணியச்செய்தல்

சேல்வைத்த வேல்விழி யாயெழு வாயினிச் செல்வருன்றன்
மேல்வைத்த நோக்கின் விரைந்துறு வாரவண் மேவியென்று
நூல்வைத்த நெஞ்சினன் மால்ஷம்சுத் தாசீன் நுவல்கிரிக்குட்
கால்வைத்த பான்முற்றுங் கண்வைத்து முத்திக் களிப்பதற்கே. (259)

இதுவரையும் பதினாறாநாள் நிகழ்ச்சி.

-----

**தலைவன் வந்தமை பாங்கி யுணர்த்தல்.**

(இ-ள்.) தலைவன் வந்தசெய்தி தலைவிக்குத் தோழிகூறுதல்.

சிந்தா குலமுந் தியக்கு மயக்குந் தெளியவிங்கே
வந்தார் தலைவர் மயங்கேன் மனமினி மாமலர்சூழ்
கொந்தார் தொடைப்புயக் கோன்ஷம்சுத் தாசீன் கொழுங்கிரிவாய்ச்
சந்தா ரணிமுலைத் தையனல் லாய்சுகஞ் சாருதற்கே. (260)

**வந்தோன் றன்னொடு நொந்து வினாதல்.**

(இ-ள்.) பாங்கி வந்த தலைவனொடு துன்பப்பட்டு வினாவுதல்.

இறையள வன்ப நினைப்பிரிந் தாவி யிருந்தறியா
நறையள வாய்குழ லன்னுத லாளையொர் நாண்முழுதுஞ்
சிறையள வாக்கித் திகைப்பித்த தேதுயர் தோரசர்
திறையள வேற்குமெம் மான்ஷம்சுத் தாசீன் செழுங்கிரிக்கே. (261)

### தலைவன் பாங்கியோடு நொந்து வினாதல்.

(இ-ள்.) எவ்வண்ணந் தலைவியை யாற்றியிருந்தாயென்று தலைவன் றோழியோடு வருந்திக் கேட்டல்.

*பொல்லா மதன்கணைப் பூவலர் வாரி பொருமொலிவிண்*
*செல்லா வருமதித் தீசிறு காற்குயிற் செய்யதிர்ச்சி*
*யெல்லா மறிந்தெதிர்த் தோபொறுத் தோவிருந் தீருரையீர்*
*பல்லா யிரம்புக ழோன்ஷம்சுத் தாசீன் பனிவரைக்கே.* (262)

### பாங்கி யாற்றுவித்திருந்த வருமை சாற்றல்.

(இ-ள்.) வெளி

*நின்வாய் மொழிமற வாதரு ளோய்மய னீள்கடலாழ்*
*பொன்வாய்த் துயரம் புரந்தன னாற்றமைப் போற்றலர்தம்*
*புன்வாய் கிழிக்குமெம் மான்ஷம்சுத் தாசீன் பொதியமலை*
*தன்வா யடித்திரு கைநொந்த வாறது சாற்றுதற்கே.* (263)

இவற்றுள் - தன்பதிக்ககற்சி தலைவன் சாற்றலும் பாங்கி தலை விக்கவன் செலவுணர்த்தலுமாகிய இரண்டுஞ் செலவறிவுறுத்தற்கும், தலைமகனைப் பாங்கி விலக்கலொன்றுஞ் செலவுடன்படாமைக்கும், நீங்கல் வேண்டலொன்றுஞ் செலவுடன்படுத்தற்கும், பாங்கி விடுத்த லொன்றுஞ் செலவுடன் படுதற்கும், தலைமகள் நெஞ்சோடு புலத்தலும் காமமிக்க கழி படர்கிளவியுமாகிய இரண்டுஞ் சென்றுழிக்கலங்கற்கும், தலைமகளை யாற் றுவித்தலும் தலைமகன் வந்தமை தலைமகட் குணர்த்தலுமாகிய இரண்டுந் தேற்றி யாற்றுவித்தற்கும், பாங்கி வந்தோன் றன்னொடு நொந்துவினாதல் முதல் மூன்றும் வந்துழி நொந்துரைத்தற்கு முரியன.

ஒருவழித்தணத்தன் முற்றிற்று.

- - - - -

### வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிதல்.

அஃதாவது-விவாகத்தை யிடையிலே நிச்சயித்து விவாகத்துக்கு வேண்டும் பொருள் நிமித்தமாகத் தலைவன் பிரிதல்; அது-பிரிவறிவுறுத்தல் பிரிவுடன்படாமை பிரிவுடன்படுத்தல் பிரிவுடன்படுதல் பிரிவுழிக் கலங்கல் வன்புறை வன்பொறை வருவழிக்கலங்கல் வந்துழி மகிழ்ச்சி யென வொன்பது வகைப்படும்; அவை வருமாறு:-

### என்பொருட் பிரிவுணர்த் தேந்திழைக் கென்றல்.

(இ-ள்.) விவாகத்துக்காகப் பொருள் கொண்டுவருதற்குப் பிரியும் என்னுடைய பிரிவைத் தலைவிக்குச் சொல்லென்று தலைவன் பாங்கிக்குக் கூறுதல்.

*பொருளே யறஞ்சுகம் பூக்குந் தருவது போந்தடைந்து*
*தெருளே தரவிவண் சேருவ லென்னவெஞ் சேரலர்முன்*
*மருளே தரப்பொரு மால்ஷம்சுத் தாசீன் மலையவெற்பி*
*னிருளே வெருள்குழ லாயிசை யாயந்த வேந்திழைக்கே.* (264)

### நீன் பொருட்பிரிவுரை நீயவட் கென்றல்.

(இ-ள்.) வெளி.

*பொன்னாசை தாங்கிப் புறஞ்சொல் நீசொலும் புத்துரைகொண்*
*டென்னாசை மங்கைக் கியம்பரி தாலுல கெண்டிசையுந்*
*தன்னாசைக் கோல்கொடுத் தோன்ஷம்சுத் தாசீன் றடஞ்சிலம்ப*
*நின்னாசை நேர்வர நீயே யுரையற னீள்குழற்கே.* (265)

### நீடே னென்றவ னீங்கல்.

(இ-ள்.) தலைவன் நீட்டித்திராது விரைந்து வருவேனென்று பாங்கியோடு கூறி நீங்குதல். நீட்டித்தல் - காலந்தாழ்த்தல்.

*ஓங்குங் கொடுஞ்சுர முற்றணங் கேயுவப் போடிருகை*
*தாங்கும் பொருடரச் சார்தரு வேனல்லிற் றாழ்குழற்றான்*
*வீங்கும் பெரும்புகழ் வேள்ஷம்சுத் தாசீன் வியன்கிரிக்கு*
*ளேங்கும் படிதரி யேன்றரித் தாற்பழி யென்றனக்கே.* (266)

இதுவரையும் பதினேழாநாள் நிகழ்ச்சி

-----

### பாங்கி தலைவிக்கவன்செல வுணர்த்தல்.

(இ-ள்.) பொருள்வயிற் பிரியுந் தலைவன் செல்லுதலைப் பாங்கி தலைவிக்குக் கூறுதல்.

*விலையளித் துன்முலை மெய்ம்மணங் காண விரையுமவர்க்*
*கிலையளித் தண்ணென் றினையலி ராரென்று மேய்ந்தபன்னூற்*
*கலையளித் தாளுமெம் மான்ஷம்சுத் தாசீன் கனகவெற்பி*
*னிலையளித் தோங்குகொங் காய்வரு வாரிது நிச்சயமே.* (267)

### பூங்குழை யிரங்கல்.

(இ-ள்.) தலைவி வருந்தல்.

வேள்விடுத் தான்கணை மெய்பசப் பேற விதிர்க்குமுலைக்
கோள்விடுத் தாருயிர் கொள்ளைகொள் வானினிக் கூர்ந்துளத்திந்
நாள்விடுத் தாரகன் றாரென்செய் வேனண்பர் நாடுமன்பர்க்
காள்விடுத் தேயருள் வோன்ஷம்சுத் தாசீ னருங்கிரிக்கே. (268)

**பாங்கி கொடுஞ்சொற் சொல்லல்.**

(இ-ள்.) இவ்வாறு நீ யிரங்குவ தென்னென்று தோழி தலைவியை நோக்கிக் கொடிய சொல்லைச்சொல்லுதல்.

சார்ந்தார் பிரிவர் பிரிந்தவர் சார்வர் சகசமிதென்
றோர்ந்தாற் றுயருனக் குண்டுகொ லோவன்ப ரோவிலிப்பார்
தேர்ந்தா ளதிபதி மால்ஷம்சுத் தாசீன் சிலம்பனையாய்
நேர்ந்தார் நிதிவரை வெண்ணியன் றோவின்று நீங்கியதே. (269)

**தலைவி கொடுஞ்சொற் சொல்லல்.**

(இ-ள்.) மேற்கூறியபாங்கியை மனத்தினாலொனாந்துதலைவி கூறல்.

கல்லுங் கரடுங் கலந்தவெங் கானிற் கருதுமன்பர்
செல்லுஞ் செயலுமென் சிந்தைத் தியக்குந் தெரிந்துமென்னோ
புல்லும் பெருந்தவத் தோன்ஷம்சுத் தாசீன் பொதியவெற்பிற்
சொல்லுந் தரமிது நன்றுநன் றாலென்றன் றூமொழியே. (270)

**வருகுவர் மீண்டெனப் பாங்கி வலித்தல்.**

(இ-ள்.) பாங்கிதலைவர்திரும்பி வருவரென்று கூறுதல். வலித்தல்-வற்புறுத்திக் கூறுதல்.

தெள்ளுஞ் செழும்புகழ்ச் சேய்ஷம்சித் தாசீன் சிமையவெற்பில்
விள்ளுங் கொடுஞ்சுர வெவ்வழற் காவி வெதும்பியுடற்
பொள்ளுஞ் சிறுபெடைக் கஞ்சிறை நீழற் புரக்குமன்றிற்
கொள்ளுங் குணனறிந் தாற்செல்வ ரோவன்பர் கோற்றொடியே. (271)

**பருவங் கண்டு பெருமகள் புலம்பல்.**

(இ-ள்.) தலைவன் பிரியும்போது கார்காலத்துக்கு முன்னே வருவலென்று குறிப்பாற் கூறிப் போயினனாதலாலே கார்ப்பருவங்கண்டு தலைவி புலம்பிக் கூறுதல்.

ஏயாக் கொடிய ரிதயமொத் தேகறுத் தெங்குமொலித்
தோயா துறவிழித் தோங்குவெங் கோபமு முற்றருட்கோர்
தாயா யொளிர்பெரு மான்ஷம்சுத் தாசீன் றடஞ்சிலம்பிற்
காயா வருமழைக் கார்கண்டும் வந்திலர் கன்னெஞ்சரே. (272)

### இகுளைவம்பென்றல்.

(இ-ள்.) அவ்வாறு புலம்பிய தலைவி தேறும் வண்ணம் பாங்கி இது காலத்தின் வந்த மேகமன்று. இடையே வம்பாகத் தோன்றியதென்று கூறல். வம்பு-காலமல்லாத காலத்திற் றோன்றும் பொருள்.

சாற்றுங் கவிகைப்பி ரான்ஷம்சுத் தாசீன் றடஞ்சிலம்பாப்
போற்று முனதிரு பூண்முலை கண்டஞ்சிப் போந்தகரி
கூற்றுங் கொடுவக் குமுறொலி கொண்டற் கொழுமொலியென்
றாற்று மயினட மன்றிது கார்வம்பெ னாயிழையே, (273)

### இறைமகண் மறுத்தல்.

(இ-ள்.) தலைவி பாங்கி கூறியவதனை மறுத்துக் கூறுதல்.

கவளக் களிற்றொலி காணெனிற் கொன்றையுங் காந்தளுமுட்
டுவளக் களிமலர் தோற்றுறு மோவின்மின் சூழ்தருமோ
சவளத் திருக்கைப்பி ரான்ஷம்சுத் தாசீன் றடஞ்சிலம்பின்
பவளத் தனியித ழாயறி வாய்மழைப் பைம்புயலே. (274)

### அவர் தூதாகிவந்தடைந்த திப்பொழுதெனத் துணைவி சாற்றல்.

(இ-ள்.) தலைவி கார்காலம் வந்ததென்று கூறிய சொற்கேட்டபாங்கி தலைவன் தான் வருகின்ற செய்தியை யறிவித்தற்கு விடுப்ப இப்பொழுது இக்கார் தூதாய்வந் தடைந்ததென்று கூறுதல்.

சூதா ரிளமுலைத் தோகைநல் லாயன்பர் தோய்பரித்தேர்
மீதா ருரைகொடு மீண்டன ரஞ்சி மிடையலென்றம்
போதார் வதனப்பு மான்ஷம்சுத் தாசீன் பொதியவெற்பிற்
றூதா யெழுந்ததிக் கார்கால மேகமுன் சொல்லுதற்கே. (275)

### தலைமக ளாற்றல்.

(இ-ள்.) தலைவி துன்பத்தைச் சகித்திருத்தல்.

முற்று முடலுயிர் நீயே யென்முன் மொழிந்தவர்சீர்
துற்றும் பெருந்தகை வேள்ஷம்சுத் தாசீன் சுடர்க்கிரிவாய்ச்
சற்றும் பிரியார் தரியார் வருகுவர் சத்தியமென்
றெற்றும் வலிக்கு மிசைக்கு முயிர்கொளற் கேந்திழையே. (276)

### அவனவட் புலம்பல்.

(இ-ள்.) பொருளீட்டச்சென்ற தலைவன் றன்கரும முற்றியபின்னையே யவ்விடத்துத் தலைவியை நினைத்துப் புலம்பல்.

*அலைவாய்த் துரும்பி னழிநீர் பொழிதர வற்பகலு*
*முலைவாய்த் துயிலுண வெல்லா மொழித்துள் ளுருகியெண்ணெண்*
*கலைவாய்ப் பொலிபெரு மான்ஷம்சுத் தாசீன் கனகவெற்பின்*
*மலைவாய்க் கிடக்கு மயிலனை யாட்கென் வழுத்துவதே.* (277)

இதுவரையும் பதினேழாம்நாள் நிகழ்ச்சி.

### பாகனொடு சொல்லல்.

(இ-ள்.) சோகங்கொண்ட தலைவன் தேர்ப்பாகனோடு தேரை விரைந்து நடாத்தச் சொல்லுதல்.

*பார்கண் டுவந்த வலவா விரைதியிப் பாவிவருந்*
*தேர்கண் டுவந்துவந் திப்பதற் கேசெக மேழுமெச்சுஞ்*
*சீர்கண் டுவந்தபு மான்ஷம்சுத் தாசீன் செழுஞ்சிலம்பிற்*
*கார்கண்டு வந்தகண் ணீர்கண்டு மாழ்குமுன் காரிகையே.* (278)

### மேகத்தோடு சொல்லல்.

(இ-ள்.) தலைவன் வருங்காலத்து மேகத்தைநோக்கிக் கூறுதல்.

*சிரித்தே தரும்பெரு மான்ஷம்சுத் தாசீன் சிலம்பகத்தென்*
*பரித்தேர் வரவைப் பகருதற் கோவன்றிப் பாரமுலை*
*கரித்தே யுயிரறக் காய்வதற் கோமுன் கடிந்தெழுந்தீர்*
*தரித்தே சொலுஞ்சொலுஞ் சொல்லிற் பயனுள தண்முகிலே.* (279)

### பாங்கி வலம்புரிகேட் டவன்வர வறிவுறுத்தல்.

(இ-ள்.) வலம்புரிச் சங்கோசையைக் கேட்டுத் தோழி தலைவன் வரவைத் தலைவிக் கறிவித்தல்.

*பேரேந்தி நின்றநற் பெண்ணணங் கேயஞ்சிப் பேதுறல்பைங்*
*காரேந்தி நின்றகை யான்ஷம்சுத் தாசீன் கனகவெற்பிற்*
*றேரேந்தி நின்றசங் கோசைகண் டாயினித் திக்கனைத்துஞ்*
*சீரேந்தி நின்றநம் மன்பர்வந் தாரென்னத் தேர்ந்தருளே.* (280)

### வலம்புரி கிழத்தி வாழ்த்தல்.

(இ-ள்.) வலம்புரிச்சங்கைத் தலைவி வாழ்த்தல்.

*கொந்துற்ற தார்ப்புயக் கோன்ஷம்சுத் தாசீன் கொழுங்கிரிவாய்த்*
*தந்துற்ற வெண்புகழ் தானெனை வோங்கித் தழைக்குகவே*
*நொந்துற்ற வெந்துயர் நோயற வன்பர் நுவல்பரித்தேர்*
*ந்துற்ற தென்ன மவுலுற்று நின்ற வலம்புரியே.* (281)

### தலைவன் வந்துழிப் பாங்கி நினைத்தமைவினாதல்.

*(இ-ள்.) தலைவன் வந்தவிடத்துத் தோழி தலைவியை நினைத்ததுண்டோ? வென்று கேட்டல்.*

*முனைத்தனை யாவருண் மால்ஷம்சுத் தாசீன் முதிர்கிரிவாய்ச்*
*சினைத்தனை யாசைக் கெழுந்தனை யாயது தீர்ந்தபின்னுந்*
*தினைத்தனை யாயினுஞ் சித்தமொன் றாகவித் தீங்கரும்பை*
*நினைத்தனை யாவிலை யாநிகழ்த் தாயென் னெடுந்தகையே. (282)*

வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்த தலைவன் பொருளீட்டி வந்த இற்றைத்தினம் முப்பது நான்கா நாளென்க; முப்பத்து நான்கென்னுங் கணக்கு எற்றாற் பெற்றதெனின், ''களவினுட்டவிர்ச்சி வரைவி னீட்டந், திங்க ளிரண்டி னகமென மொழிப'' என்னும் இறையனாரகப் பொருட் சூத்திரவுரையில் பொருளீட்டி வந்த தலைவன் ஆறுநாளில் வரைவு முடிப்பனென்று கூறியதனாலும் தலைவன் றலைவியைக் கண்ட பதினெட் டாநாளிற் பொருள்வயிற் பிரிந்ததனாலும் ஐம்பத்தாறாநாள் வரைவு முடிந்ததாகக் கூறுதலாலும் என்க. அற்றேல் ''வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவோ, ரிருதுவின் கண்ணுடைத் தென்மனார் புலவர்'' எனக் கூறி னாராலோ வெனின், இருதிங்களென்றது எல்லை கடவாமைக்குக் கூறியதன்றி இரு திங்களுள் வரக்கூடாதென்னும் யாப்புறவின்மையி னென்க. ஆயின், ''வரைவி னீட்டந் திங்களிரண் டினக'' மென்றதனால் அறுபதாநாள் மணமுடிந்ததாகக் கூறினா லென்னையெனின், அச்சூத்திரவுரையில் திங்களிரண்டினு நான்கநாளிருக்க மணமுடிப்ப தியல்பென்று கூறியதனால் கூறலாகாதென்க. மாதத்தினந் தமாகிய நான்கு நாட்கள் மணத்துக்கு விலக்கப் பட்டனவென்று சோதிடநூலார் சிலர் கூறுதலா லிங்ஙனங் கூறியது போலும்.

### தலைவ னினைத்தமை சேப்பல்.

*(இ-ள்.) வெளி*

*அறந்தான் வளர்த்தும்பு மான்ஷம்சுத் தாசீ னருட்கிரிவாய்ப்*
*புறந்தாழ் கருங்குழற் பூவைமின் னாளையப் பூங்குழலிற்*
*சிறந்தா ரிருள்செய் சிறுநெறிக் கானத்துஞ் சித்தம்விட்டு*
*மறந்தா லலவோ நினைத்திடல் வேண்டுமென் மாதரசே. (283)*

### ஆற்றுவித் திருந்த வருமை சாற்றல்.

*(இ-ள்.) பாங்கி தலைவியை யாற்றுவித்திருந்த அருமையைத் தலைவனுக்குக் கூறுதல்.*

*இந்தா மெழின்முகத் தேந்திழைக் குன்பிரி வெய்தவம்பொன்*
*றந்தா தரிக்கும்பி ரான்ஷம்சுத் தாசீன் றடத்தகத்துன்*
*சந்தா டவிநதி யூர்மலை தண்புகழ் சாற்றிமனச்*
*சிந்தா குலந்தவிர்த் தேனிருந் தேன்றிறற் றேர்மன்னனே. (284)*

இவற்றுள்-என்பொருட் பிரிவுணர்த் தேந்திழைக் கென்றலும் பாங்கி தலைவிக்கவன் செலவுணர்த்தலுமாகிய இரண்டும் பிரிவறிவுறுத்தற்கும், நின்பொருட் பிரிவுரை நீயவட் கென்றலொன்றும் பிரிவுடன் படாமைக்கும், நீடே னென்றவ னீங்க லொன்றும் பிரிவுடன் படுத்தற்கும், தலைவி யிரங்கலும் பாங்கி கொடுஞ்சொற் சொல்லலும் பருவங்கண்டு பெருமகள் புலம்பலும் இறைமகண் மறுத்தலும் அவனவட் புலம்பலுமாகிய ஐந்தும் பிரிவுழிக்கலங்கற்கும், வருகுவர் மீண்டெனப் பாங்கி வலித்தலும் இகுளை வம்பென்றலும் அவர் தூதாகி வந்தடைந்த திப்பொழு தென்றலுமாகிய நான்கும் வன்பு றைக்கும், தலைமக ளாற்றலொன்றும் வன்பொறைக்கும், பாகனொடு சொல்லலும் மேகத்தோடு சொல்லலுமாகிய இரண்டும் வரும்வழிக் கலங்கற்கும், வரவறிவுறுத்தல் முதலாகிய ஐந்தும் வந்துழி மகிழ்ச்சிக்கு முரியன.

வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிதன் முற்றிற்று.

களவியல் முற்றிற்று.

-----

## வரைவியல்

அஃதாவது-தலைவன் தலைவியைக் குரவர் முதலியாயினோர் கொடுப்பவுங் கொடாதொழியவும் கற்பிற்கு நிமித்தமாகிய வதுவைச் சடங்கொடு பொருந்தி மணஞ்செய்து கோடல்; ஆதலாலிது கற்பின் பாற்படுமென்க; இவ்வரைவு-வரைவு மலிவும் அறத்தொடு நிற்றலுமாகிய இரண்டு வகைப்படும்; அவற்றுள்,

### வரைவு மலிவு.

அஃதாவது-வரைவு தொடங்கி நடக்கு முயற்சி மிகுதல்; அது வரைவு முயல்வுணர்த்தல் வரைவெதிர் வுணர்த்தல் வரைவறிந்து மகிழ்தல் பராவல் கண்டுவத்தலென நான்கு வகைப்படும்; அவை வருமாறு:-

**காதலன் முலைவிலை விடுத்தமை பாங்கி காதலிக் குணர்த்தல்.**

(இ-ள்.) தலைவன் தனவிலையாகத் திரவியங் கொடுத்ததைத் தோழி தலைவிக்குக் கூறுதல்.

சொன்மலை வாணர்பி ரான்ஷம்சுத் தாசீன்றொன் னாடனையா
யுன்மலை மாமுலைக் குள்ளுடைந் தோடிப்பின் னுற்றிறைஞ்சப்
பொன்மலை வந்தெனப் போர்மலை தோளன்பர் போந்தளித்தார்
கன்மலை போலுங் கனமலை வெம்முலைக் கைவிலையே. (285)

**காதலி நற்றாயுள்ள மகிழ்ச்சி யுள்ளல்.**

(இ-ள்.) தலைவன் விடுத்த முலைவிலைப் பொருள்களைக் கண்டு நம்மகட்கு மணஞ்செய்யுங் காலமென்று நற்றாய் மகிழு முள்ளத்து மகிழ்ச்சியைப் பாங்கி நினைத்துக் கூறுதல்.

*ஆலைச் சிலையனன் னான்ஷம்சுத் தாசீ னருட்சிலம்பின்*
*சோலைக் குயின்மொழித் தோகைநல் லாயன்பர் சூட்டுமலர்*
*மாலைக் குவகை மலிதர நம்மனை மாமுகமுங்*
*காலைக் கமல மெனவல ராநிற்குங் காசினிக்கே.* (286)

**பாங்கி தமர்வர வெதிர்ந்தமை தலைவிக் குணர்த்தல்.**

*(இ-ள்.) தலைவன் தமர் மணங்கூறி வந்துழித் தலைவி தமர் மணமெதிர்ந்தமை பாங்கி தலைவிக் குணர்த்தல்.*

*கொற்றத்தி னோங்குமென் கோன்ஷம்சுத் தாசீன் குளிர்வரைசேர்*
*செற்றத்தி னோங்கயிற் சேல்விழி யாயனை செப்புபல*
*சுற்றத்தி னோரெதிர் சூழ்தர நின்மணந் தோய்நரநம்*
*முற்றத்தி னோங்கி முழங்குவ தன்பர் முழுமுரசே.* (287)

**தலைமக ளுவகை யாற்றா துளத்தோடு கிளத்தல்.**

*(இ-ள்.) தலைவி மகிழ்ச்சி யடங்காது நெஞ்சோடு கூறுதல்.*

*பாரோ ரலரும் பழியு மறத்துயர் பாறமதன்*
*றேரோ டலையத் தெருவினெஞ் சேயுற்ற திக்கனைத்துஞ்*
*சீரோ ருருவெனுஞ் சேய்ஷம்சுத் தாசீன் செழுஞ்சிலம்பிற்*
*காரோ டிகலிக் கறங்குவ தன்பர் படிமுரசே.* (288)

**தலைவனைப் பாங்கி வாழ்த்தல்.**

*(இ-ள்.) தலைவனைத் தோழி புகழ்தல்.*

*முடிமாலை சூட்டும்பி ரான்ஷம்சுத் தாசீன் முதிர்கிரிவாய்*
*வடிமாலைக் கூந்தன் மயிலனை யாடுயர் மாறவம்பொற்*
*கடிமாலை மாலைக் கடியென வேதந்த காதலர்சிற்*
*றடிமாலை காலையெக் காலமும் வாழி யருள்பெறவே.* (289)

**தலைவி மணம்பொருட்டாக வணங்கைப் பராநிலை காட்டல்.**

*(இ-ள்.) தலைவி மணம் நிமித்தமாகத் தெய்வத்துக்குச் சிறப்புச்செய்து வாழ்த்திக்கொண்டு நிற்கு நிலையைப் பாங்கி தலைவனுக்குக் காட்டுதல்.*

*இணங்கா ரடுகரிக் கோன்ஷம்சுத் தாசீ னிருஞ்சிலம்பிற்*
*சுணங்கா ரிளமுலைத் தோகையன் னாளுளந் தோய்தரநின்*
*மணங்கா ரணமா மறைபல வோதி மதித்தணங்கை*
*வணங்கா விருந்து மகிழ்வது பாரென்றன் மன்னவனே.* (290)

### கண்டோன் மகிழ்தல்.

(இ-ள்.) தலைவி தெய்வத்தை வாழ்த்துதலைக் கண்ட தலைவன் மகிழ்தல்.

சின்னஞ் சிறியா ளுலகியல் யாதொன்றுந் தேர்ந்தறியா
ளன்னம் பிடிநிகர் வாள்கற்ற தேதிவ் வணங்கினைத்தெவ்
பின்னம் படப்பொரு வேள்ஷம்சுத் தாசீன் பிறங்கலிலோர்
தன்னந் தனியாய்த் தகுமலர் தூஉய்நனித் தாழ்வதற்கே. (291)

இவற்றுள்-காதலன் முலைவிலை விடுத்தமை பாங்கி காதலிக் குணர்த்தலும் தலைவி மணம் பொருட்டாக அணங்கைப் பராநிலை காட்டலுமாகிய விரண்டும் வரைவு முயல்வுணர்த்தற்கும், பாங்கி தமர்வரை வெதிர்ந்தமை தலைமகட் குணர்த்த லாகிய வொன்றும் வரைவெதிர் வுணர்த்தற்கும், நற்றாயுள்ள மகிழ்ச்சி யுள்ளலும் உவகை யாற்றா துளத்தொடு கிளத்தலுந் தலைவனைப் பாங்கி வாழ்த்தலுமாகிய மூன்றும் வரைவெதிர்ந்து மகிழ்வதற்கும், தலைமகளணங்கைப் பராநிலை கண்டோன் மகிழ்தலாகிய வொன்றும் பராவல் கண் டுவத்தற்கு முரியன.

இதுவரையும் ஐம்பத்தொன்றாநாள் நிகழ்ச்சி.

வரைவுமலிவு-முற்றிற்று.

-----

## அறத்தொடு நிற்றல்.

அஃதாவது-களவை முறையே வெளிப்படுத்தி நிற்றல். முறையே வெளிப் படுத்தி நிற்றலாவது; தலைவி பாங்கிக் கறத்தொடு நிற்றல். பாங்கி செவிலிக்கறத்தொடு நிற்றல். செவிலி நற்றாய்க் கறத்தொடு நிற்றல். நற்றாய் தன்னையர்க் கறத்தொடு நிற்றலெனக் கொள்க. அறத்தொடு நிற்றற்குப் பொருள்; முறையே வெளிப்படுத்தி நிற்றலென்பது; இப்பொருள் எவ்விடத்திற்கு மாகாது இவ்விடத்திற்கு மாத்திரமென்று கொள்க. அது - முன்னிலை முன்னிலைப் புறமொழி யென இருவகைப்படும், அவை வருமாறு:-

### கையறுதோழி கண்ணீர் துடைத்தல்.

(இ-ள்.) களவுப் புணர்ச்சியால் மிகவும் அவரெழுதல் கண்டு தந்தையர் முதலாயினோர் வெறுப்புற்ற தறிந்த தலைவன் பிரிந்தேக, அப்பிரிவாற்றாமையா லழுதுகொண்டிருந்த தலைவியை ஆற்றிக் கையற்றதோழியருகிருந்து கண்ணீர் துடைத்தல். கையறல் - செயலறல்.

பந்தகத் தாசை பரிந்திலை பைந்துணர் பற்றிலைசெய்
சிந்தக வண்டலுஞ் சேர்த்திலை யன்னை சினத்ததுண்டோ
நொந்தகம் வாடினை நோற்றினை கண்ணீர் நுடங்கிடையே
வந்ததென் ஹாமீம் புரஷம்சுத் தாசீன் மகிழ்கிரிக்கே. (292)

### கலுழ்தற்குக் காரணங் கூறல்.

(இ-ள்.) தலைவி யழுதற்குக் காரணஞ் சொல்லுதல்.

*தூங்குங் கனவிற் றுணிந்திறை தோய்தரத் துஞ்சலற்றுள்*
*ளேங்கும் படியெழுந் தேனினைந் தேனுடைந் தேழுலகுந்*
*தாங்கும் பெருந்திறத் தாண்ஷம்சுத் தாசீன் றடங்கிரிபோன்*
*றோங்கு மொளிர்முலை யாயிலை வேறொன்று முற்றதுவே.* (293)

### தலைவன் றெய்வங் காட்டித் தெளிப்பத் தெளிந்தமை கூறல்.

(இ-ள்.) தலைவன் றெய்வத்தைக் காட்டிக் கரியென்று சூளுறவு சொல்ல மெய்யென்று தெளிந்த அதனைப் பாங்கிக்குப் பொருந்தக் கூறுதல்.

*தருகார் நிகர்கரத் தாண்ஷம்சுத் தாசீன் றணிச்சிலம்பிற்*
*குருகார் நிழலல வண்டும் பலவுள கூண்டவின்பம்*
*பெருகா ரமுதனைப் யாய்கப டாயன்பர் பேணியெம்மை*
*யருகா யிருத்தி யறைந்தபல் சூள்கண்ட டறைவதற்கே.* (294)

### இறைவி தலைவ னிகந்தமை யியம்பல்.

(இ-ள்.) தலைவி தலைவ னீங்கினமை பாங்கிக்குக் கூறுதல்.

*வற்போ லுயர்முலை மங்கைநல் லாயுண் மறக்கிலனென்*
*றற்போ டறைந்து மகன்றன ரன்ப ரவனிமுற்று*
*மற்போர் வலர்பெரு மாண்ஷம்சுத் தாசீன் மலையவெற்பிற்*
*சொற்போ னடையுந் தொடர்ந்தறிந் தாரிலைச் சொல்லுதற்கே.* (295)

### பாங்கி யியற்பழித்தல்.

(இ-ள்.) தலைமக னியலைப் பாங்கி பழித்துக் கூறுதல்.

*வல்லார் புகழுமெம் மாண்ஷம்சுத் தாசீன் மலையவெற்பி*
*னல்லார் குழலணங் கேமற வார்வரு வாரிருப்பார்*
*நல்லா ரெனநினைந் தேனவ ரின்று நடுவிகந்த*
*பொல்லா ரெனவெழுந் தாரகன் றார்மிகப் புண்ணியரே.* (296)

### தலைமக ளியற்பட மொழிதல்.

(இ-ள்.) அங்ஙனங் கூறக்கேட்ட தலைமகள் தலைமக னியற்கையோ ரியல்புபட மொழிதல்.

*கைக்கு முலைக்குங் கடுகிநின் றாலுங் கனவொடுள்ள*
*மெய்க்கும் படிவரு வாரிருப் பாரெதிர் மேவலரை*
*மொய்க்கும் பெருந்தள வேள்ஷம்சுத் தாசீன் முதிர்கிரிவாய்ப்*
*பொய்க்குங் குணத்தர் செயலல வேயிது பொற்றொடியே.* (297)

### தெய்வம் பொறைகொளச் செல்குவமென்றல்.

(இ-ள்.) தலைவர் தெய்வத்தின்மேற் பிரியேனென்றாணை கூறிப்பிரிந்துபோனா ராதலால் அத்தெய்வம் சீறாதபடி அவர் எங்கட்குக் குற்றஞ் செய்தாரல்லர், நீ பொறுத்துக்கொள்ளென்று வேண்டிக் கோடற்கு இருவேமும் போதுவேமென்று தலைவி பாங்கியுடன் கூறுதல்.

*கோபந் தருபடைக் கோன்ஷம்சுத் தாசீன் கொழுங்கிரிக்கோர்*
*தீபங் கடுத்தநந் தேரன்பர் முன்னமைச் சேர்ந்தினிவெஞ்*
*சோபந் தரப்பிரி யேனெனத் தெய்வத்தைச் சூழ்ந்திசைத்த*
*பாபம் பொறுக்கப் பணிகுவம் வாவென்றன் பைந்தொடியே.* (298)

### இல்வயிற் செறித்தமை யியம்பல்.

(இ-ள்.) தலைவி தன் மெய் வேறுபாட்டாலும் ஊரிலுள்ளாரலர் தூற்றுதலாலும் நற்றாயுளத்தில் வெறுப்பாகி மனையிடத்தி லென்னைக் காவல் செய்தாளென்று பாங்கிக்குக் கூறுதல்.

*உளையொன்று வெம்பரி வேள்ஷம்சுத் தாசீ னொளிர்சிலம்பில்*
*வளையொன்று கைத்தல மங்கைநல் லாய்பிறர் வாயலருங்*
*களையொன்று மேனியுங் கண்டன ளாய்மனை காவலிட்டாள்*
*தளையொன்று கண்டிலள் கண்டா லிடுவள்மெய்ச் சத்தியமே.* (299)

### செவிலி கனையிருளவன்வரக் கண்டமை கூறல்.

(இ-ள்.) செவிலித்தாய் செறிந்த இருட்குறியிடத்துத் தலைவன் வரக் கண்டாளெனத் தலைவி பாங்கிக் குணர்த்தல்.

*திருவுற் றிலகுபு மாணஷம்சுத் தாசீன் செழுஞ்சிலம்பின்*
*மருவுற்ற கஞ்ச மதிமுகத் தோய்நென்னன் மன்னுமன்பர்*
*தருவுற்ற நங்குறி சார்வுற்று மீண்டதைத் தாயனங்க*
*னுருவுற் றிரவி னுலவுற்ற தோவென் றுலைந்தனனே.* (300)

### எறிவளை வேற்றுமைக் கேது வினாதல்.

(இ-ள்.) செவிலித்தாய் தலைவியின் தவயவ வேறுபாட்டுக்குக் காரண மென்னை? யென்று பாங்கியைக் கேட்டல்.

*முலையும் பசப்ப மொழியுந் தளர முழுதுமுட*
*னிலையுங் குலைய நிகழ்ந்ததென் னோநித்த நேரலரை*
*மலையும் படிபொரு மால்ஷம்சுத் தாசீன் மலையமின்னாட்*
*கலையும் பொருகணல் லாய்புனங் காவ லகன்றபின்னே.* (301)

## பாங்கி வெறி விலக்கல்.

(இ-ள்.) செவிலித்தாய் வெறியாட்டாளனை யழைத்து மகட்கு நோயுற்றவாறும் அது தீருமாறுஞ் சொல்லவேண்டுமென்று கேட்புழித் தெய்வம் வந்தாடும்போது பாங்கி அத்தெய்வத்தை யாட வேண்டாமென்று விலக்குதல். வெறியாட்டாளன் ஆடு பலிகொடுத்தாற்றீருமென்புழி அவ்வாட்டைக் கொல்லாமல் விலக்கலெனினு மமையும்.

*மெய்க்கும் பெருந்தவ வேள்ஷம்சுத் தாசீன் வியன்சிலம்பிற்*
*பொய்க்குந் துடியிடை யாய்முனி யேலுமைப் போற்றுதுமா*
*லுய்க்கு நெறியறி யாதவ மேயுவந் தோம்பறியா*
*மைக்கு மிகைக்குமல் லாலக லாதிவள் வண்டுயரே.* (302)

## வெறி விலக்கிய வழி செவிலி வினாதல்.

(இ-ள்.) வெறியாடல் விலக்கிய காரணத்தைப் பாங்கியுடன் செவிலித்தாய் கேட்டறிதல்.

*பொன்னார் துயரம் புலரவென் றெண்ணிப் புகுந்தவெங்கண்*
*முன்னார் வெறியை விலக்கினை போந்தனை மூன்றுலகுந்*
*தன்னா ருயிரெனு மால்ஷம்சுத் தாசீன் றடஞ்சிலம்பி*
*னின்னா ருளத்தி னிகழ்வென்கொ லோசொல்லெ னேரிழையே.* (303)

## பூத்தரு புணர்ச்சியா லறத்தொடு நிற்றல்.

(இ-ள்.) பூவைக் கொடுத்ததனாற் புணர்ந்த களவை வெளிப்படுத்தித் தோழி கூறுதல்.

*வரத்தா லுயர்ந்தபு மான்ஷம்சுத் தாசீன் வரைக்கொருவன்*
*கரத்தா மரையில் விழித்தா மரைகள் கவியுநின்ற*
*தரத்தா லரிவாய் வருவாய் பெறுதி தருதுமென*
*வுரத்தா லளிப்ப நயனமொத் தேற்றங் குவந்தனளே.* (304)

## புனறரு புணர்ச்சியா லறத்தொடு நிற்றல்.

(இ-ள்.) புனலாற் கூடும் புணர்ச்சியை வெளிப்படுத்திக் கூறுதல்.

*பிழியோ டலங்கற்பெம் மான்ஷம்சுத் தாசீன் பிறங்கலிடைக்*
*குழியோ டுயர்வனிக் கோனதி பாய்ந்து குடையவுந்திச்*
*சுழியோ டிகல்சுழி சூழச் சுழித்துத் தொடர்ந்தணங்கைப்*
*பழியோ டெடுத்தது பார்த்தெடுத் தானொரு பார்மன்னனே.* (305)

